# அகிம்சை



டாக்டர் அப்துல் ரசாக்

காந்திய இலக்கியச் சங்கம் மதுரை - 625020

# அகிம்சை

டாக்டர் : அ. அப்துல்ரசாக் M.A., Ph.D.,
முன்னாள் பேராசிரியர்
ஆதித்தனார் கல்லூரி,
திருச்செந்தூர்.

**காந்திய இலக்கிய சங்கம்,**
காந்தி மியூசிய வளாகம், மதுரை-625 020.
போன்: 0452-2533957

காந்திய இலக்கியச் சங்க வெளியீட்டு எண்: 41

| | | |
|---|---|---|
| புத்தகத்தின் பெயர் | : | அகிம்சை |
| ஆசிரியர் | : | அ. அப்துல்ரசாக்<br>எம்.ஏ., பி.எச்.டி., |
| பொருள் | : | அகிம்சை தத்துவம் |
| வெளியிட்டோர் | : | காந்திய இலக்கியச் சங்கம்<br>மதுரை - 625 020. |
| அச்சிட்டோர் | : | இந்துஸ் ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>சிவகாசி – 626123 |
| பதிப்பு | : | 27ம் பதிப்பு – ஆகஸ்ட் 2022 |
| பிரதிகள் | : | 3000 |
| விலை | : | ரூ.70/- |
| பதிப்புரிமை | : | காந்திய இலக்கியச் சங்கம் |



| | | |
|---|---|---|
| Name of the Book | : | Ahimsai |
| Author | : | A. Abdul Razak M.A., Ph.D., |
| Subject | : | Non-Violence |
| Publisher | : | Gandhian Literature Society<br>Madurai – 625 020. |
| Printer | : | Indus Offset Printers<br>Sivakasi – 626123 |
| Edition | : | 27th Edition – August 2022 |
| Copies | : | 3000 |
| Price | : | RS.70/- |

# பதிப்புரை

இது அணுயுகம். மனிதன் விண்வெளிக்கோளங்களுக்கு பறக்கும் காலம். சில வினாடி நேரத்தில் ஆயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் உள்ள பெரிய நகரங்களையும் அழித்து விடும் சக்தியும் ஆற்றலும் உள்ள நியூட்ரான் குண்டுகள் தயாரிக்கும் காலமிது. பெரும் வல்லரசுகள் உலகத்தையே சாம்பலாக்கக் கூடிய மிக சக்திவாய்ந்த நியூட்ரான் குண்டுகளை தயாரித்து வைத்திருக்கும் நேரமிது.

இன்றைய சமுதாயம் மாறி அன்பின் அடிப்படையில் அமைய வேண்டுமென பெரிதும் விரும்புகின்றோம். இந்த சூழ்நிலையில் மனிதன் சமாதானமாக வாழ காந்தியடிகள் காட்டிய அகிம்சை வழியை ஆழ்ந்து ஆராய வேண்டிய நேரமிது. 'அகிம்சையின் வரலாறு மிகப் பழமையானதாகும். எந்த உயிர்க்கும் எண்ணத்தாலும் சொல்லாலும் செயலாலும் தீங்கு செய்யாமலிருப்பதுடன், முடியுமானால் அவ்வுயிர்க்கு உதவி செய்வதே அகிம்சையாகும். பேராசிரியர் திரு.அ.அப்துல்ரசாக் அவர்கள் அகிம்சையை பல்வேறு கோணங்களில் ஆராய்ந்திருக்கிறார்கள். அகிம்சையின் வரலாற்றில் தொடங்கி அகிம்சையும் பாதுகாப்புக் கொள்கையும் என்று முடியும் பதினாறு பிரிவுகளில் அகிம்சை ஆராயப்பட்டுள்ளது. இதனைப்படிக்கும் போது பிற நூல்களையும் படிக்க வேண்டுமென்ற ஆவலைத் தூண்டும்படி இந்நூல் நன்கு அமைந்துள்ளது.

காமராஜ் பல்கலைக் கழகம் காந்தி சிந்தனைச் சான்றிதழ், மற்றும் டிப்ளமோ தேர்வு நடத்தி வருகின்றது. அகிம்சையைப் பற்றிய நூல்கள் ஆங்கிலத்தில் அதிகமிருந்தாலும்கூட, தமிழில் இந்நூல் மிகச் சிறப்பான முறையில் வெளி வந்துள்ளது. இந்நூல் காந்தி சிந்தனைப்படிப்பு மாணவர்கட்கு மட்டுமின்றி சமுதாய முன்னேற்றத்திற்கும் வழி காட்டிடும் சிறப்பான நூலாகும். எனவே. தமிழ் மக்களின் பேராதரவு மீண்டும் கிட்டும் என நம்பி பத்தாம் முறையாக பணிவுன்புடன் சமர்ப்பித்துக் கொள்கின்றோம்.

2 - 10 - 99 காந்திய இலக்கியச் சங்கம், மதுரை.

# உள்ளடக்கம்

# 1. அகிம்சையின் வரலாறு

## உலகம் தழுவிய நெறி :

இந்தியாவின் பாரம்பரியச் சொத்துக்களில் ஒன்று அகிம்சையாகும். இன்றைக்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய வரலாற்றை அது கொண்டிருக்கிறது. எனவேதான் 'இமயமலை எவ்வளவு பழமையானதோ அவ்வளவு பழமையானது அகிம்சையின் வரலாறு' என்று அண்ணல் காந்திஜி கூறுகிறார். இந்தியாவில் பிறந்த சமயங்களும் புகுந்த சமயங்களும் அகிம்சைக் கோட்பாட்டை வளர்ப்பதிலும் நடைமுறைப்படுத்துவதிலும் அக்கறைகாட்டியுள்ளன என்பதே அதன் தனிச்சிறப்பு. இந்தியா மட்டுமன்றி உலகப்பெரியோர் பலரும் அகிம்சை பற்றிய ஆய்வுகளைச் செய்து முடிவுகளை வெளியிட்டுள்ளனர். இன்று உலகம் தழுவிய நெறியாக அது வளர்ந்துள்ளது என்பது ஒரு சுவையான வரலாறாகும்.

## இந்து சமயமும் அகிம்சையும் :

கிறிஸ்து பிறப்பதற்குப் பதினைந்து நூற்றாண்டுகட்கு முன்பே இந்தியாவில் வேதகால நாகரிகம் தோன்றியதாகக் கூறுவர் வரலாற்று ஆசிரியர். அப்போது நடைமுறையில் இருந்த பழக்கம் யாகம் அல்லது வேள்வி என்பதாகும். வழிபாடு, புகழ்ச்சி, தியாகம் என்பன வேள்வி என்பதற்குப் பொருள். தாம் வழிபடும் கடவுளர்க்காகத் தமக்குப் பிடித்தமான பொருள்களை, வேள்வித்தீ வளர்த்து அதில் இட்டு, இறைவனின் கருணைக் கொடைகளுக்காக நன்றி செலுத்தத் தலைப்பட்டனர். தானியங்கள், விலங்குகள், மனிதர்கள் ஆகிய காணிக்கைகளை இறைவனுக்காகத் தியாகம் செய்துவந்தனர். உலக மக்களுக்கு நல்ல எதிர்காலம் அமையவேண்டும்; அல்லல்கள் அழிந்து மாய வேண்டும் என்பதே வேள்வி செய்வோரின் உயர்ந்த நோக்கமாகும்.

உயிர்க்கொலைகளையும் உள்ளடக்கிய இந்த வேள்வியின் நடைமுறையால் பிறர்நலம் பேணுவதற்குத் தம்மையே தியாகம் செய்ய முன்வர வேண்டும் என்ற கோட்பாடு உள்ளடங்கியுள்ளது. இதனையே அகிம்சைக் கோட்பாட்டின் வளர்ச்சிக்குரிய வித்தாகக் கருதலாம். "நான் இந்தியாவுக்குப் புராதனமான தியாக வழியைக் காட்டத் துணிந்திருக்கிறேன். ஏனெனில் சத்தியாக்கிரகமும் அதிலிருந்து கிளைத்த 'ஒத்துழையாமை', 'சாத்வீகச் சட்டமறுப்பு' ஆகியவையும் அந்தப் பழைய தியாக வழிக்கு அமைந்த புதிய பெயர்களே அன்றி வேறல்ல" என்ற அண்ணல் காந்தியின் கருத்தும் இங்கே எண்ணிப் பார்க்கத்தக்கது. ரிக்வேதத்தில் *'அக்ன்யா'* என்ற சொல் பசுவைக் கொல்லக்கூடாது என்பதற்குப் பயன்படுத்தப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தக் காலகட்டத்தில் இந்தியக் காடுகளில் வாழ்ந்த முனிவர்கள் அல்லது ரிஷிகள் கொல்லாமை அறம் பூண்டு தவம் செய்தனர். இவர்களைப் பாராட்டும் அண்ணல் காந்திஜி, "இம்சையின் இடையில் இருந்து அகிம்சைத் தத்துவத்தைக் கண்டு கூறிய ரிஷிகள் நியூட்டனைவிடப் பெரிய மேதைகள்; வெலிங்டனை விடச் சிறந்த வீரர்கள் ஆவர். அவர்கள், சோர்ந்துகிடந்த உலகம் உய்வதற்கு இம்சை வழியன்று, அகிம்சையே வழியென்று போதித்தார்கள் என்று குறிப்பிடுவார்.

வேதங்கள் கூறும் வேள்விகளுக்கு ***உபநிஷத்துக்களில்*** புதுமெருகு காணப்படுகிறது. தியாகக் கோட்பாட்டிற்குப் புதுவிளக்கம் கிடைக்கின்றது. ஒழுக்கம், பெருந்தன்மை, நேர்மை, அகிம்சை, சத்தியம் ஆகியனவே ஒருவனின் தூய வாழ்விற்கு அமைகின்ற வழிகள் என்று குறிப்பிடுகின்றன. திரிஷகா பிரஹ்மானோ பஷித், நாரதா-பரிவ்ராஜ கோபானிசத்-ஆகியவற்றில், 'அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், கருணை, நேர்மை, பொறுமை, உணவுக் கட்டுப்பாடு, தூய்மை ஆகிய பண்புகள் ஒரு யோகிக்குத் தேவையானவை" என்று வரையறுக்கப்பட்டுள்ளது.

இந்து சமயத்தின் வேதங்களும் உபநிஷத்துகளும் தவிர, சூத்திரங்களும், சாத்திரங்களும், இதிகாசங்களும், புராணங்களும் வேறு அற நூல்களும் அகிம்சை நெறிக்கு முதலிடம் தந்துள்ளன. மனுதர்மம், அகிம்சைக் கோட்பாட்டை உயர்வாகப் போற்றியுள்ளது. மனிதன் வாழ்நாளில் சேர்க்கும் சொத்து சுகங்களைவிட அவனுடைய நெறியான வாழ்க்கையே அவன் மறைவுக்குப் பின்னரும் வாழவைக்கும் என்பதை வலியுறுத்துகிறது. ''நேர்மையற்ற முறையில் வாழ்பவனும், பொய் புரட்டுக்களைச் சொல்லிச் சொத்துச் சேர்ப்பவனும், பிறர்க்குத் துன்பம் செய்வதையே பொழுது போக்காகக் கொண்டவனும் இவ்வுலகில் மகிழ்ச்சியுடன் வாழ முடியாது என்று மனுதர்மம் கூறுகிறது.

பிரம்மலோகத்தை அடைவதற்கு ஒருமனிதன், உயிர்களிடத்து அன்பு, பொறுமை, அழுக்காறாமை, உடல் தூய்மை, சொல்லாலும் செயலாலும் மனத்தாலும் இம்சையைத் தவிர்த்தல் ஆகியவற்றைப் பெற்றிருக்க வேண்டும் என்று கௌதம தர்ம சூத்திரம் கூறுகிறது.

தீமையைப் போக்கி நன்மையையும், வன்முறையினை வீழ்த்தி மனித நேயத்தையும் நிலைநாட்டவே *இராமாயணம்* உருவெடுத்துள்ளது. அதில் வரும் இராமன் என்னும் மன்னன் அகிம்சை வழியே ஆட்சி நடத்துகிறான். நேர்மை, ஒழுக்கம், தூய்மையின் சின்னமாக விளங்குகிறான். தனக்குத் துன்பம் செய்தவரையும் அவன் பழிக்குப் பழி வாங்க முற்படவில்லை. அமைதியின் காவலனாகவே அவன் திகழ்கின்றான். அவனுடைய தந்தை தசரதன் சத்தியத்தைக் காப்பாற்ற தன் உயிரையே துறக்கின்றான். இராமராஜ்யம் என்பது தான் இராமாயணம் உருவாக்க விரும்பும் புதிய அமைப்பின் பெயர். அங்கே, சமுதாயம், பண்பாடு, ஆன்மிக நிலைகளில் இசைவான வாழ்வைப் பெறும். அங்கு வாழ்வோர் எல்லாமும் பெறுவர். ஒழுக்கத்தில் மேம்பட்டு விளங்குவர். நோய் நொடி மற்றும் துன்பங்கள் அவர்களை அண்டா.

*மகாபாரதம்* என்னும் பெருங்காப்பியம், அனைவர் வாழ்வையும் இயக்கிச் செல்லும் உயர்ந்த நெறியாக அகிம்சையை மதிக்கிறது. சாதி வேறுபாட்டை உதறித் தள்ளுகிறது. "உண்மை, தன்னடக்கம், தன்னல மறுப்பு, பெருந்தன்மை, அகிம்சை, ஒழுக்கத்தை உறுதியாகப் பற்றி நிற்றல் ஆகியனவே ஒருவனுக்கு வெற்றி தரும் வழிகளே அன்றிப் பிற அல்ல" என்று வலியுறுத்துகிறது.

மேன்மையான தவம், தருமம், சத்தியம் என்று அகிம்சையைப் போற்றுகின்றது மகாபாரதம். அதில் வரும் தருமன் பாத்திரம் அகிம்சை நெறி வாழ்வதற்கு வழி காட்டுவதாகும். தர்மனின் எதையும் தாங்கும் இதயமும், துன்பங்களால் துவளாத மனமும், தியாக உள்ளமும் இதயத்தைக் கவர்வனவாகும்.

கர்மயோகத்தை எடுத்துக் காட்டுவதுதான் பகவத்கீதை. பலனில் பற்று வைக்காமல் கடமைகளைச் செய்ய வேண்டும் என்பதைத் தூண்டுகிறது. தன்னலமற்ற தொண்டு, பணிவுடைமை, கடமையுணர்வு ஆகியன பகவத் கீதை தந்த பண்பாடுகள். "எண்ணத்திலும், சொல்லிலும் செயலிலும் அகிம்சையைப் பேணுதல், பேச்சினில் இனிமை, எந்த நிலையிலும் கோபத்தை அடக்குதல், கலங்காத மனநிலை, பகைமையை உருவாக்கும் வீண்பேச்சுகளை விட்டொழித்தல், ஆருயிர்க்கெல்லாம் அன்பு செய்தல், புலனடக்கம், அலைபாயாத மனம், நாணுடைமை, பெருந்தன்மை, மன்னித்தல், மனத்திண்மை, உடல்தூய்மை, பொறாமையின்மை, கர்வமின்மை ஆகிய இலட்சியங்கள் ஒருவன் இயற்கையாகப் பெற்ற நன்கொடைகள்" என்று பகவத்கீதை கூறுகிறது. 'உடைமையில் பற்றின்மை' என்பது கீதை காட்டும் உயர்ந்த பண்பாகும்.

இந்து சமயப் *புராணங்கள்* இந்திய மக்கள் அகிம்சை நெறியில் வாழும் வாழ்க்கை முறைகளைத் தெளிவாகக் காட்டியுள்ளன. "அகிம்சைதான் தலையாயதர்மம்" என்று

பத்மபுராணம் கூறுகிறது. அகிம்சை, புலனடக்கம், தயை, பொறுமை, சாந்தி, தவம், தியானம், சத்தியம் ஆகிய எட்டுப் பண்புகளையும் மலர்களாக வருணித்து அவையே ஈசனுக்கு உகந்த இனிய மலர்கள் என்றும் அந்தப் புராணம் பகர்கிறது. ஒருவனின் உடலை அடித்துத் துன்பப்படுத்துவது மட்டுமன்றி, புறங்கூறல், பிறருக்கு ஏற்பட வேண்டிய நன்மைகளுக்குத் தடைக்கல்லாக இருத்தல், நம்பிக்கைத் துரோகம் ஆகியனவும் இம்சையே என்று அக்னேயபுராணம் காட்டுகிறது. சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டே புராணங்கள் அறங்களைக் கூறுகின்றன. சான்றாக அரிச்சந்திரனின் கதையைக் காட்டலாம். அரசிழந்து, நாடு துறந்து, குடும்பத்தைப் பிரிந்து, சுடலை காக்கும் தொழில் செய்த போதும் சத்தியத்தைக் காப்பாற்றியவனே அரிச்சந்திர மன்னன். ''பதியிழந்தனம்; பாலனை இழந்தனம்; படைத்த நிதியிழந்தனம்; இனி எமக்குளதென நினைக்கும் கதியிழக்கினும் கட்டுரை யிழக்கிலேம்'' என்று அரிச்சந்திரன் கொண்ட சத்திய உறுதிப்பாட்டைத் தமிழக கவிதை உயர்த்திப் பாடும். கருணை, கொடை, பெருந்தன்மை ஆகிய அகிம்சை ஒழுக்கங்களுக்குச் சான்றாக வாழ்ந்தவர்தான் சிபிச்சக்கரவர்த்தி.

'யோக சூத்ரா' தந்த *பதஞ்சலி முனிவர்*, யமம் என்ற பெயரில், வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய ஐந்து கட்டுப்பாடுகளைத் தருகின்றார். அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், பேராசை இன்மை என்பனவே அந்த ஐந்து கட்டுப்பாடுகள். யோகா என்னும் உயர்ந்த நிலையைப் பெறுதற்குரிய முதற்படியாக இந்தக் கட்டுப்பாடுகளை வலியுறுத்துவார் பதஞ்சலி முனிவர். பேராசை, சினம், ஏமாற்றம் ஆகியனவே வன்முறையை உருவாக்கும் பின்னணிகள் என்பார் அவர்.

*சமண சமயமும் அகிம்சையும்*, அகிம்சையைத் தன்னுடைய சமய கோட்பாடாக இணைத்துக் கொண்டு அதனைத் திசையெல்லாம் பரப்பும் முயற்சியில் ஈடுபட்ட

முதல் சமயம் உலகிலேயே சமணம் மட்டுந்தான். சமணர்கள், அகிம்சை வாழ்வின் வழிகாட்டியாக இருந்து பரப்பியதால் இந்திய மண்ணில் அது நன்றாகவே வேரூன்றிவிட்டது. கொல்லாமை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், உடைமை வைத்துக் கொள்ளாமை ஆகிய ஐம்பெரும் விரதங்களைச் சமணம் வரையறுக்கின்றது. கொல்லுதல என்பது ஒரு பாவம் என்று கருதும் சமணம், மனித உயிர்கள் மட்டுமன்றி விலங்குகள், பறவைகள், பூச்சிகள், மரங்கள் ஆகியனவும் புனிதமானவை என்றும் அவற்றை அழிக்கக் கூடாது என்றும் வற்புறுத்துகின்றது. ''எவரையும், எதையும் கொல்லாதே; துன்புறுத்தாதே; அடிமை ஆகாதே; யாரையும் அச்சுறுத்தாதே'' என்பது அந்த சமயம் வழங்கும் பொன்மொழிகளில் ஒன்று. ''தன்னைப்போல் பிற உயிர்களையும் கருதும்போதுதான் ஒருவனுக்கு அமைதி கிடைக்கிறது'' என்றும் சமணம் கூறுகின்றது ''எந்த உயிர்க்கும் துன்பம் செய்யாமல், அவற்றைத் தனக்குச் சமானமாகக் கருதி மதிப்புக் கொடுப்பதே அகிம்சை என்று எவன் உணருகின்றானோ, அவனே அறிவில் உயர்ந்தோன்'' என்ற கருத்தும் எல்லா உயிரும் ஒன்றே என்பதை வலியுறுத்துகின்றது.

சமண தீர்த்தங்கரில் ஒருவரான பார்சுவநாதர் ''உண்மையே பேசுங்கள்; திருடாதீர்கள்; தன்னிடம் எப்பொருளையும் சேர்க்காதீர்கள்'' என்று அறிவுறுத்தி அகிம்சை நெறிவாழ்வுக்கு வழிகாட்டுகிறார். ''மனிதனே! உன்னைப் போலவே உலக உயிர்கள் எல்லாம் வாழ விரும்புகின்றன. எனவே, நீ வாழ விரும்பினால் பிறருக்கும் வாழ வாய்ப்பளி. வாழு; வாழ விடு'' என்ற மகாவீரரின் அறிவுரை, சமத்துவம், தன்னல மறுப்பு, பொறுமை ஆகிய பண்பாடுகளை மேற்கொள்ள வைக்கின்றது. தியாகம் என்ற பெயரில் கூட உயிர்ப்பலி கூடாது என்று கூறும் சமணம், பிற உயிர்களுக்கு எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும் தீங்கிழைக்கக் கூடாது என்பதைத் தெளிவுபடுத்துகின்றது

## புத்தசமயமும் அகிம்சையும் :

அன்பு, கருணை, பொறுமை ஆகியவற்றின் அடிப்படையில் ஒரு சமுதாயம் அமைய வேண்டும் என்று எதிர் பார்த்தவர் கௌதம புத்தர். வன்முறை என்பது இயற்கைக்கு முரணானது என்றும் அது மேலும் மேலும் வன்முறையையே தூண்டும் என்றும் அந்த வன்முறையையும், வெறுப்பையும் அன்பால் அன்றி வெறுப்பால் வெல்லமுடியாது என்றும் வலியுறுத்தியுள்ளார். பேராசை, கோபம், ஏமாற்றம் இன்னும் பலதரப்பட்ட துன்பங்கள் ஆகியன முற்றிலுமாக அழிக்கப்பட வேண்டும் என்பதே புத்தரின் போதனையாகும்.

ஒரு தாயின் கருணை உள்ளத்தை மனிதன் பெற்று எல்லாரையும் அன்பால் அணைத்துக் கொள்ளவேண்டும் என்பது புத்தரின் கோட்பாடு. கொல்லுதல் என்பதைப் பாவச் செயல் என்று கருதினார் அவர். கொலை செய்பவன் மதகுருவோ அரசனோ என்றாலும் அவர்கள் பாவிகளே என்று துணிந்து சொன்னார். தெய்வத்தின் பெயரால் உயிர்க்கொலை செய்யப்படுவதை அவர் கண்டிக்கத் தவறவில்லை.

பஞ்சசீலம் அல்லது ஐந்து நெறிகள் என்பது புத்தர் வகுத்துக் கொடுத்த வாழ்க்கை ஒழுக்கங்கள் ஆகும். கொல்லாமை, திருடாமை, பொய் சொல்லாமை, விபச்சாரம் செய்யாமை, மது குடியாமை ஆகியனவே அந்த ஐந்து ஒழுக்கங்கள் ஆகும். எல்லோரும் தாய் வயிற்றிலிருந்து பிறக்கின்றனர். எனவே அவர்கள் அனைவரும் சமமானவர் என்றும் எடுத்துரைத்தார் புத்தர். பிறப்பால் உயர்ந்தவன் பிராமணன் என்பதை மறுத்து, அகிம்சை வழியில் வாழ்வு நடத்துபவர் யாராக இருந்தாலும் அவர் பிராமணரே என்று அழுத்தமாகச் சொன்னார். "கோபத்தைக் கடிந்தவர், வீணான கண்டனங்களையும் காரணமின்றி வரும் தண்டனைகளையும் சிறை வாசத்தையும் புன்னகையோடு தாங்கிக் கொள்பவர், உயிர்களைக் கொல்லாதிருப்பவர் அல்லது உயிர்க் கொலைக்குக் காரணமாக இல்லாதிருப்பவர் எவரோ,

'அவரையே பிராமணன்' என்று அழைப்பேன்'' என்று கூறியுள்ளார். எனவே பிறப்பால் அன்று, ஒழுக்கத்தால் மட்டுமே மனிதன் உயர்கின்றான் என்பதே புத்தரின் கருத்தாகும்.

எல்லா உயிர்களையும் புனிதமாகக் கருதுதல், பொறையுடைமைக்கு முதன்மையிடம் தருதல், வெளிப்பகட்டை விட உள்ளத் தூய்மைக்கே உயர்வு கொடுத்தல் ஆகிய புத்த சமயத்தின் கோட்பாடுகள், அதனைச் சிறப்பிற்குரிய அகிம்சைச் சமயமாக ஆக்கிவிட்டன. அகிம்சை நெறியை ஒரு சமயத்தின் கோட்பாடாக அன்றி வாழ்க்கை வழியாகவே புத்தசமயம் பரப்பியது.

மக்கள், கொல்லாமை அறத்தைப் பின்பற்றினாலும் அதன் மூலம் சொர்க்கத்தை அடையலாம் என்றே நம்பினர். இந்தக் கருத்தை மாற்றி அகிம்சை என்பது அன்றாட நடவடிக்கைகளிலும் இருக்க வேண்டும் என்பதை எடுத்துரைத்தவர் பேரரசர் ***அசோகர்.*** சமய நெறி என்ற நிலையிலிருந்து அதனை நாட்டு நெறியாகவும், அரசியல் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தும் கருவியாகவும் செயல்படுத்தியவர் அவர். அடக்குமுறைகளையோ அடிதடிகளையோ கையாளாமல் அரசியல் பொருளாதாரச் சிக்கல்களை அகிம்சை முறையில் தீர்க்க வேண்டும் என்றே அவர் நாடினார். பாறைகளிலும் தூண்களிலும் அவர் செதுக்கிவைத்துள்ள அகிம்சைக் கோட்பாடுகள் இன்றளவும் உலகம் உய்த்துணரும் நற்செய்திகளாக அமைந்துள்ளன. இந்த வகையில் நாட்டு நடப்புகள் அனைத்திற்கும் அகிம்சை வழியில் தீர்வுகாணத் துடித்த முதல் அரசியல்வாதி என்ற சிறப்பைப் பெறுகிறார் அசோகர்.

### ***கிறிஸ்துவமும் அகிம்சையும் :***

அகிம்சை நெறியின் வளர்ச்சிக்குக் கிறிஸ்துவ சமயத்தின் பணி அளப்பரியது. இயேசு பெருமானின் வாழ்வும் வாக்கும்

அவரை அகிம்சையின் சின்னமாகக் கருத வைத்துள்ளன. வெறுப்புக்கு வெறுப்பும் வன்முறைக்கு வன்முறையும் என்றில்லாமல், அன்பு நல்லெண்ணம் ஆகியவற்றின் மூலம் தீர்வு காண விழைகின்றார். "உன்னைப் போலவே உன் அயலானையும் அன்பு செய்வாயாக! உங்கள் பகைவர்க்கு அன்பு செய்யுங்கள், உங்களை வெறுக்கின்றவர்களுக்கு நன்மை செய்யுங்கள். உங்களைத் துன்புறுத்துவோருக்காகவும், உங்களை இழிவாகப் பேசுவோருக்காகவும் செபியுங்கள். உங்களிடம் கேட்பவர்களுக்குக் கொடுங்கள். பிறர் உங்களுக்கு என்னென்ன செய்ய வேண்டும் என நீங்கள் விரும்புகின்றீர்களோ அவற்றையெல்லாம் நீங்களும் பிறருக்குச் செய்யுங்கள்" என்பது இயேசு பெருமானின் மலைப் பொழிவு ஆகும்.

கிறிஸ்துவ சமயத்தின் திருமறையான பைபிளின் பழைய ஏற்பாடு, நீதி, அன்பு, கொல்லாமை, ஒழுக்கம் ஆகியவற்றை உள்ளடக்கித் தந்துள்ள பத்துக் கட்டளைகள், அகிம்சை நெறியின் பிரிவுகளை உணர்த்துகின்றன.

சமத்துவம், சகோதரத்துவம், பொறுமை, தன்னலத் தியாகம் ஆகிய அகிம்சை நெறியின் பிரிவுகளையும் இயேசு பெருமான் புதிய ஏற்பாட்டில் இயம்பியுள்ளார். "எல்லா மனிதர்களையும் உங்கள் சகோதரர்களாகக் கருதுங்கள்; தீமையைப் பொறுமையோடும் அன்போடும் எதிர்த்து நில்லுங்கள்; அநீதியைப் பலாத்காரத்தினால் எதிர்க்காமல் அதற்காக நாமே துன்பத்தை அனுபவிப்பது, 'அவசியமானால் இறந்து போவது' என்ற நம்பிக்கையில் உறுதி கொள்ளுங்கள். இப்படிச் செய்வதால் அநீதி இழைத்தவர்களுடைய மனம் மாறுதல் அடையும். இதுதான் கெட்டவர்களை நல்லவர்களாக்கக் கடவுள் காட்டுகிற மார்க்கம்" என்று மொழியும் இயேசு பெருமான், தம்மைச் சிலுவையில் அறைவதற்குக் காரணமானவர்களின் பிழை பொறுத்து மன்னிப்பருள இறைவனிடம் வேண்டுவது 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்ய வேண்டும்' என்ற அகிம்சைப்

பண்பாட்டிற்கு எடுத்துக் காடடு ஆகும். "எளிய மனத்தோர் பேறு பெற்றோர், துயருறுவோர் பேறுபெற்றோர், சாந்தமுள்ளோர் பேறு பெற்றோர், இரக்க முடையோர் பேறுபெற்றோர், தூய உள்ளத்தோர் பேறுபெற்றோர், சமாதானம் செய்வோர் பேறு பெற்றோர், நீதியினிமித்தம் துன்புறுத்தப்படுவோர் பேறு பெற்றோர்" என்ற இயேசு பெருமான் மொழியில் எளிமை, துன்பமேற்றல், பொறுமை, அன்பு, தூய்மை, சமாதானம் செய்தல், ஞாயத்திற்காகப் போராடும்போது துன்பம் ஏற்பட்டாலும் தாங்கிக் கொள்ளுதல் ஆகிய நெறிகள் அடங்கியுள்ளதைக் காணலாம். பணக்காரன் சொர்க்கம் புகமாட்டான் என்றும், அவன் தன் உடைமைகளை விற்று ஏழைகளுக்கு அறம் செய்ய வேண்டும் என்றும் அவர் கூறுவது மூலம் எளிமை, உடைமை வைத்துக் கொள்ளாமை ஆகிய நெறிகளை உணர்த்துவதாகக் கருத வேண்டும்.

கிறிஸ்துவ இயக்கத்தின் ஒரு பகுதியான 'குவாக்கரிஸம்' எல்லா வகையான சமூக நிறுவனங்களிலும், அகிம்சை, அமைதி ஆகியவற்றின் அடிப்படையில் அமைய வேண்டும் என்பதை ஆதரிக்கிறது. எளிமை, சினம், பொறாமை, தீயஎண்ணம், தன்னலம், தற்பெருமை ஆகியன இல்லாதிருத்தல், சாந்தம், அன்பு, பணிவு, தியாகம் ஆகியவற்றைக் கொண்டிருத்தல் ஒரு தனி மனிதனுக்குரிய பண்புகள் என வரையறை செய்கிறது.

*இஸ்லாமும் அகிம்சையும்:* உலக அமைதி ஒருவர்க்கொருவர் நேயமாயிருத்தல் ஆகியன இஸ்லாமிய சமயத்தின் மையக்கோட்பாடுகளாகும். அமைதி என்று பொருள் தரும் 'ஸ்லாம்' என்ற வேர்ச்சொல்லில் இருந்தே இஸ்லாம் என்ற சொல் உருவாகியுள்ளது. இறைவன் ஒருவனே; மக்களெல்லாம் அவர் பிள்ளைகள்; அவர்களுக்கிடையே ஏற்றத்தாழ்வு கிடையாது. இவை இஸ்லாம் தரும் அறிவுரைகள். மனித உயிர்களுக்கு இன்னல் இழைக்கலாகாது என்பதை இஸ்லாம் வலியுறுத்துகிறது.

'ஆண்டவன் ஒருவனே' என்ற இஸ்லாத்தின் கோட்பாடு மக்கள் அனைவரும் சகோதரர்கள் என்ற உண்மையை உணர்த்தக் கூடிய அச்சாணியாக அமைந்துள்ளது. "ஜனநாயக நெறியைப் பரப்பி நடைமுறைப்படுத்திய முதல் சமயம் இஸ்லாம் தான். இறையில்லமாகிய மஸ்ஜித்தில் இருந்து தொழுகைக்கான அழைப்பொலியைக் கேட்டதும் அணி அணியாகச் செல்லும் முஸ்லிம்கள் வரிசையாக நின்று இறைவனைத் தொழும்போது தங்களுக்குள் பாகுபாடு பார்ப்பதில்லை. ஒரு நாளைக்கு ஐந்து முறை தொழும் முஸ்லிம்கள், ஏழையென்றும் பணக்காரன் என்றும் தொழிலாளி என்றும் முதலாளி என்றும் பார்க்காமல் அடுத்தடுத்து நின்று வழிபாடு செய்வது அவர்களின் வேற்றுமை பாராட்டாத சகோதர உணர்வுக்குச் சான்றாகும்" என்று கவிக்குயில் சரோஜினி நாயுடு குறிப்பிடுகின்றார்.

முடிவைப் போலவே வழிமுறைகளும் புனிதமாக இருக்க வேண்டும் என்பதை இஸ்லாம் வலியுறுத்துகின்றது. "ஒரு மனிதன் கையாளும் வழிமுறைகள் நேர்மையுடையதாக இருந்தால் அவன் விரும்பியவற்றை இறைவன் நிறைவேற்றி வைப்பான்" என்பது முகமது நபியின் வாக்கு. இஸ்லாத்தில் நம்பிக்கையும் நற்செயலும் பிரிக்க முடியாதன. நல்ல பலன்கள் ஏற்படச் சரியான அறிவைச் சரியான செயல்களைச் செய்வதில் ஈடுபடுத்த வேண்டும். "எவர் நம்பிக்கையுடன் நற்செயலும் செய்வாரோ அவரே சொர்க்கம் புகும் தகுதியுடையார்" என்ற கருத்து திருக்குர் ஆனில் பலமுறையும் வலியுறுத்தப்படுகிறது.

"ஒரு ஆண்-பெண் ஜோடியின் மூலம் தான் உங்களைப் பிறக்கச் செய்து, உலகம் முழுவதும் உலவச் செய்துள்ளேன். எனவே உங்களுக்குள் ஒற்றுமையைத்தவிர வேற்றுமைக்கு இடமில்லை. நேர்மையுடன் வாழ்ந்து நல்லனவற்றைச் செய்பவரே உங்களில் உயர்ந்தோராகக் கருதப்படுவர்" என்ற திருக்குர் ஆனின் கூற்றில், மனித இன ஒற்றுமையும் அகிம்சை வழி வாழ்வும் அமைந்திருப்பதை அறியலாம். மேலும்,

இறைவன், முஸ்லிம்களைப் பார்த்து, "மக்களே! ஆபிரஹாம், இஸ்மாயில், ஐசக், மோஸஸ், ஜீஸஸ் ஆகிய தூதுவர்களுக்கும், இன்னும் பல தூதுவர்களுக்கும் இறைவன் அருளியுள்ள திருமறைகளை நாங்கள் நம்புகிறோம், என்று சொல்லுங்கள்; இந்தத் தூதுவர்களுக்கு இடையே எந்தப் பாகுபாட்டையும் காட்டமாட்டோம் என்றும் சொல்லுங்கள்" என்று கூறியிருப்பது, பிற சமயதலைவர்கள், கோட்பாடுகள் மீது கொள்ள வேண்டிய சமரசமனப்பான்மையைத் தெளிவுபடுத்துகிறது.

*யூதசமயமும் அகிம்சையும் :* நேர்மையாக நடத்தல், இரக்கம் காட்டுதல், இறைவனிடம் பணிதல் ஆகியனவே இறைவன் மனிதனிடம் எதிர்பார்க்கும் பண்புகள் என யூதசமயம் கூறுகிறது. நீதி, சமத்துவம், சுரண்டாமை ஆகிய பண்புகளையும் அது வலியுறுத்துகிறது. இறைவனே கருணையுடையவனாக இருப்பதால் அவன் படைப்பான மனிதனும் அவ்வாறே இருத்தல் வேண்டும் என்பது பொருத்தமே என்று அந்தச் சமயம் சொல்லும்.

*ஷிந்தோஷிய சமயமும் அகிம்சையும்:* 'கமி' என்பதே ஷிந்தோஷிய சமயத்தின் வழிபடு தெய்வமாகும். மக்களினம் அந்தத் தெய்வம் பெற்ற பிள்ளைகளே என்பது அந்தச் சமயத்தின் நம்பிக்கையாகும். ஒரே ரத்தத்தில் உருவான பிள்ளைகளுக்கிடையே உயர்வு தாழ்வு கூடாது என்பதே அதன் நோக்கமாகும். முழுமையான அமைதி நிலவ, மனித இனம் உயர்வாக மதிக்கப்பட வேண்டும் என்பதை அந்தச் சமயம் வலியுறுத்துகின்றது.

*சீக்கியமும் அகிம்சையும் :* சீக்கிய சமயம், சமத்துவம், சுதந்திரம் ஆகியவற்றை வலியுறுத்துகிறது. "இந்து என்றோ முஸ்லிம் என்றோ யாருமில்லை" என்றே குருநானக் கூறுவார். எனவே சமயசார்பற்றநெறிக்கு அவர் முதன்மை தந்தார் என்பது புலனாகிறது. நல்ல வழிகளில் அமைந்த தூய்மையான வாழ்க்கையையே அவர் வலியுறுத்துவார். அப்படி வாழ்பவனே

இறைவனிடம் கையேந்தும் தகுதி பெற்றவன் என்பது அவர் கருத்து. சொல்லிலும் செயலிலும் தூய்மையும், இறைவனிடத்து அன்பும், மனிதனுக்கு வேண்டும் என்பார். பிறருக்குச் சொல்லாலும் செயலாலும் மனத்தாலும் துன்பம் செய்யாமை, கொடுஞ்சொல் கூறுவோர் பிழைகளைப் பொறுத்து மன்னித்தல், தன்னுயிர் தந்தேனும் துன்பப்படுவோர் துயர்துடைக்க முன்வருதல் ஆகிய பண்புகளையும் அவர் வலியுறுத்துவார். சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட, தண்டனைகளையோ, அடக்கு முறையையோ அவர் விரும்பமாட்டார். மாறாக ஆட்சி பீடத்தில் அமர்ந்திருப்போர் உத்தமர்களாகவும் ஒழுக்க சீலர்களாகவும் இருந்தால் எந்தச் சிக்கலும் எழாது என்பது அவர் நம்பிக்கை. "உயர்நெறியில் ஒழுகும் ஆட்சியாளன் காற்றைப் போன்றவன். அவன் கீழ் வாழும் மக்கள் புல்லைப் போன்றவர்கள். புல்மீது காற்றுப் படிந்தால் அது தலைசாய்க்காமல் இருக்குமா?" என்ற குரு நானக்கின் மொழி, பண்பாட்டால் அமைதியை ஏற்படுத்தலாம் என்பதை காட்டுகிறது.

*கன்பூஸிய சமயமும் அகிம்சையும் :* எந்தச் செயலை உனக்குக் கேடு வரும் என்று தவிர்க்கிறாயோ அதனைப் பிறருக்குச் செய்யாதே என்பது கன்பூஸியஸ் சமய கோட்பாடு. பெருந்தன்மை, இரக்கவுணர்வு, தாராள மனப்பான்மை, பொறுமை, கடமையுணர்வு ஆகிய ஐந்தும் உயர் பண்புகள் என்று அந்தச் சமயம் கூறும்.

*மோயிஸமும் அகிம்சையும் :* ஒருவருக்கொருவர் அன்பு செலுத்தாமல் இருப்பதே துன்பங்கள் ஏற்படக் காரணமாக இருக்கின்றன என்றும், மக்கள் தங்களைப் போலவே பிற நாட்டு மக்களையும், அரசன் தன்னாட்டைப் போலவே பிற நாட்டையும் கருதினால் பூசலும் போரும் ஏற்பட வழியில்லை என்றும் கூறும், 'மோயிஸம்' என்னும் சமயம். எனவே, உலகம் தழுவிய அன்பையும், போர் எதிர்ப்புக் குரலையும் இந்தச் சமயம் போற்றுவதை உணரலாம்.

### *அகிம்சை வளர்த்த அறவோர் :*

அகிம்சையின் வளர்ச்சியில் மாமன்னர் *அக்பருக்கும்* பங்குண்டு என்பதை வரலாறு காட்டுகிறது. வேறுபடு சமயத்தவருள்ளும் ஒற்றுமையும், இணக்கமும் ஏற்பட அவர் பாடுபட்டார். அரசியல் வாழ்வில் இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையே ஓர் இணைப்பை ஏற்படுத்துவதில் பெருமுயற்சி மேற்கொண்டார். இந்துக்களைத் தம் ஆட்சியில் உயர்பதவிகளில் அமர்த்தினார். கிறிஸ்துவத் திருச் சபையினர்க்கும் சிறப்பான வரவேற்பு அளித்தார். மேலும் பார்ஸியர், யூதர்கள், சைனர்கள் ஆகிய பல்சமயப் பேரறிஞர்களை அவருடைய சபையில் இருக்குமாறு பார்த்துக்கொண்டார். இந்து-முஸ்லிம் பண்பாடுகளை இணைத்து அவர்களுக்கிடையே அமைதியையும் மனவொற்றுமையையும் ஏற்படுத்த முயன்றார்.

இறைவன் திருமுன்னர் எந்த இனத்தாரும் சமமே என்று எடுத்துரைத்தவர் *இராமானந்தர்*. தூய்மையான நடைமுறைகள், உயர்ந்த பண்பு நெறிகள், இரக்க உணர்வு ஆகியனவே இறைவனின் கருணையைப் பெறுகின்ற வழிகள் என்று அறிவுறுத்தினார். இந்துக்கள், முஸ்லிம், தீண்டத்தகாதவராகக் கருதப்பட்ட சூத்திரர்கள், பெண்கள் ஆகிய எல்லோரையுமே வேறுபாடின்றித் தம் சீடர்களாக ஏற்றுக்கொண்டாார். இந்த வகையில் மத நல்லிணக்கம், மனிதாபிமானம் ஆகியவற்றை அவர் மதிப்பதை உணரலாம்.

இராமானந்தரின் கருத்துக்களை அவருடைய சீடரான *கபீர்*, தம்முடைய இன்னிசைப் பாடல்களால் பரப்பினார். ஒழுக்கமும், நற்செயல்களும் கூடிய சமுதாயத்தின் அமைதியான வாழ்வையே அகிம்சை நெறி வாழ்வாக அவர் கருதினார். அன்பு, 'உலக மக்கள் யாவரும் ஒருவர் பெற்ற மக்களே' என்று கருதும் உள்ளம் ஆகியன வாழ்வின் குறிக்கோள்களாக இருக்க வேண்டும் என்றார். எந்தக் காரணத்திற்காகவும் விலங்குகளைப் பலிகொடுப்பது பாவச்

செயல் என்றார். சாதியால் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளை எதிர்த்தார். தீண்டாமையையும், சுரண்டலையும் எதிர்த்துப் போராடினார்.

உலகிலேயே உயர்ந்த நெறி அன்பன்றி வேறில்லை என்பதைப் பரப்பியவர் *சைதன்யர்.* இறைவனிடம் செலுத்தும் அன்பைப் போல மனிதவினத்தாரிடமும் அன்பாயிருத்தல் வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இந்திய மக்களிடையே அகிம்சைநெறி வாழ்வு தழைக்க அவர் வற்புறுத்திய அன்புடைமையும், சகோதரத்துவ மனமும் பெரிதும் காரணமாயின. சாதிப்பிரிவுகள் அற்ற சமுதாயமே அவர் காண விரும்பியது ஆகும்.

அகிம்சை நெறி போற்றும் சைதன்யர், துன்புற்றோர்க்கு இரங்கி அவர்களின் துயர்துடைக்கும் அருளாளராக விளங்கினார். துயரமுற்றோரின் பாவங்களையெல்லாம் தம்முடைய தோளில் சுமத்தி அவர்களை விடுவிக்க வேண்டுமென அவர் இறைவனை வேண்டுவது குறிப்பிடத்தக்கது. பிறர் நல்வாழ்விற்காகத் துன்பங்களை வலிந்தேற்கும் தியாக உள்ளத்தை இது காட்டுகின்றது.

இந்து சமயத்தைச் சார்ந்த ஞானிகளே பெரும்பாலும் அகிம்சை நெறி பரப்புநர்களாக இருந்தனர். அவர்களிடையே சில முஸ்லிம் ஞானிகளும் கவிஞர்களும் வாழ்ந்து அன்பெனும் நெறியைப் பரப்பியது, குறிப்பிடத் தக்கது. சூஃபி நெறியைப் பின்பற்றிய *ஜலாலுத்தீன் ரூமி* என்பவரின்

"அன்பு, விஷக் கடியையும் தேன்போல் இனியதாய் மாற்றும்;
அன்பு, வலிய சிங்கத்தையும் சிறிய எலியாய்ப் பணிய வைக்கும்,
அன்பு, நோய் மாற்றி நலம் கொடுக்கும்;
அன்பு, சினம் போக்கி அருளை நிறைக்கும்;
அன்பு, இழப்பையும் இலாபமாக்கும்;
அன்பு, பேரரசனையும் கனியவைத்து எளிமையாக்கும்;

என்ற பாடல் அன்பின் ஆற்றலை எளிமையாக உணர்த்துவதை அறியலாம்.

தமிழகப் புலவர்களும் சமய இயக்கங்களும் அகிம்சை நெறிக்கு ஆதரவு தந்துள்ளனர் குறிப்பாக *ஔவையார்*, *கோவூர் கிழார்* போன்ற புலவர்களால் போர்களும், அநீதிகளும் தடுக்கப்பட்டுள்ளன. அன்புடைமை, இனியவை கூறல், பொறையுடைமை, அருளுடைமை, வாய்மை, இன்னா செய்யாமை, கொல்லாமை ஆகிய அதிகாரங்கள் மூலம், அகிம்சை நெறியினைத் திருவள்ளுவர் எடுத்துக் கூறுவார். ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற நெறியை நிறுவி மக்களுக்குத் தொண்டு செய்த *இராமலிங்க வள்ளலார்*, "ஆருயிர்க்கெல்லாம் அன்பு செய்ய வேண்டும்" என்பதை வலியுறுத்தினார்.

தென்னாட்டில் பல மாநிலங்களில் பரவிய வீரசைவம் என்னும் சமயநெறி அன்பின் மூலமே இறைவனின் கருணையைப் பெறலாம் என்று கூறுகின்றது. பசவப்பா என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட இந்தச் சமயம், விலங்குகளைக் கொல்லுவதையும் பலியிடுவதையும் தடைசெய்கின்றது; மனிதநேயப் பண்புகளை வலியுறுத்து கின்றது. கொல்லாமை மட்டுமன்றி, எல்லா உயிர்களிடத்தும் கருணைகாட்டவும் தூண்டுகிறது. "திருடாதே; கொலை செய்யாதே; பொய் சொல்லாதே; சினங்கொள்ளாதே; யாரையும் வெறுக்காதே" என்று கூறுவார் பசவப்பா.

சமயப் பொறை, உலகப் பொதுச்சமயம் உருவாக்கல் ஆகியவற்றின் அடிப்படையில் உழைத்தவர் *இராஜாராம் மோகன்ராய்* தாம் உருவாக்கிய பிரம்ம சமாஜத்தில் உருவமற்ற ஒரே கடவுள் என்ற கொள்கையை ஏற்றுக்கொண்டவர்களை இணைத்துக் கொண்டார். இறந்த கணவனின் சிதையில் அவன் மனைவியையும் உயிரோடு சேர்த்து வைத்துக் கொளுத்தும் கொடுமையை ஒழிப்பதில் முயன்று வெற்றி கண்டார்.

தென்னிந்தியாவில் வாழ்ந்த மாதவாச்சாரியா என்னும் தத்துவ ஞானி, விலங்குகளைப் பலியிடாமல், வேள்வி செய்யும் ஒரு புது நெறியைக் கூறினார். அரிசி மாவினால் விலங்கு உருவங்களைச் செய்து பலியிடுமாறு வேண்டினார். மதச் சடங்குகளிலும் கூட உயிர்ப்பலி கூடாது என்ற அவருடைய கருத்து இங்கே புலனாகிறது. எனவே, 'தன்னைப் போல் பிற உயிர்களிடத்தும் அன்பும் கருணையும் பாராட்டுகின்றவனே, இறையடியான் ஆவதற்குத் தகுதியுடையோன்' என்ற மரபைப் பின்பற்றி மாதவாச்சாரியார் அறம் வலியுறுத்துகின்றார்.

குற்றம் செய்தோரை அன்பினாலன்றித் தண்டனையால் திருத்த முடியாது என்று நம்பியவர் *நாராயண குரு*. மனிதாபிமானம், ஒருமித்த உணர்வு, ஒற்றுமை ஆகிய பண்புகளை மக்களுக்குப் புகட்டி வந்தார். உண்மை பேசுதல், தீயது செய்ய அஞ்சுதல் ஆகியவற்றையும் உணர்த்தினார். தீண்டாமைக் கொடுமையை ஒழிப்பதில் இவர் எடுத்துக்கொண்ட பங்கு மிகப் பெரியதாகும்.

ஆரிய சமாஜம் என்ற அமைப்பினை ஏற்படுத்திய *தயானந்த சரஸ்வதி* பொய்மையை வெறுத்துச் சத்தியத்தைத் துணிந்து சொன்னவர். உலக மக்களை ஒரு தாய் மக்களாகப் பார்த்தவர். சாதி என்னும் தீயை எந்தச் சமயமும் ஏற்கவில்லை என்றும், தீண்டாமை என்னும் அவலம் மனித இனத்திற்கே கேவலம் என்றும் சொன்னார். கலப்பு மணத்திற்கு ஆதரவு கொடுத்தார். தாழ்ந்த சாதி மக்களுக்கும் வேதங்களைப் படிக்கவும், கேட்கவும் உரிமை உண்டு என்றார்.

'இந்தியாவின் சாக்ரடீஸ்' என்று புகழும் அளவிற்கு வாழ்ந்த, '*சுவாமி ராம் தீர்த்தர்*' மக்களை எண்ணிப் பார்க்க வேண்டினார்; உண்மையைக் காணத் தூண்டினார். உலகம் முழுவதும் ஒரு குடும்பந்தான் என்பதே இவருடைய உயரிய குறிக்கோள். வேறுபடு சமயமெல்லாம் புகுந்து பார்த்து ஒரே கடவுளையே அவையெல்லாம் பலகோணங்களில் பார்க்கின்றன என்று பறை சாற்றினார்.

அகிம்சைக் கோட்பாட்டை அடிப்படையாக வைத்துக் கொண்டு தம்முடைய கருத்துகளைச் சொன்னவர் *ஸ்ரீஅரவிந்தர்.* மனித ஒற்றுமையின் மேன்மை பற்றி அவர் எழுதியுள்ள நூல் மதிப்பிற்குரியதாகும். போர், கொடிய தண்டனை, உயிர்க்கொலை, உடலாலோ உள்ளத்தாலோ இழைக்கப்படும் கொடுமைகள், மனிதனை மனிதன் கீழ்மைப்படுத்திச் சுரண்டுவது ஆகியவற்றை அவர் வெறுக்கிறார். மனிதமனங்களை இணைக்கும் உயர்ந்த கோட்பாடாகவே அகிம்சை நெறியை அவர் போற்றினார்.

உலக சகோதரத்துவத்தை வலியுறுத்தி அகிம்சை நெறிக்குத் துணை நின்றவர் *இராமகிருஷ்ண பரமஹம்சர்.* நல்லிணக்கம், அன்பு, உலகத் தோழமை ஆகியவற்றைப் பரப்பினார். உலகம் தழுவிய மக்கள் இயக்கத்தில் சாதிப் பிரிவுகள், மத நம்பிக்கை, நிறவேறுபாடு, இனப்பாகுபாடுகள் ஆகியவற்றிற்கு இடமில்லை என்பதே அவர் நம்பிக்கை அவர் வகுத்த தூய்மையான சகோதரத்துவ நெறிக்கு முன்யாரையும் அயலானாக அவர் கருதியதில்லை. தீண்டத்தகாதார், ஏழையர், பணக்காரர் என்று யாராயினும் பரம் பொருளுக்கு முன்னே வேறுபாடு அற்றவர் என்று கருதினார். அவர் வன்முறையை வெறுத்தார். அகிம்சை என்றும் ஆன்மபலம் உடையவனின் ஆயுதம் என்று வருணித்தார்.

இராமகிருஷ்ண பரமஹம்சரின் சீடரான *விவேகானந்தர்* கர்மயோகத்தை வலியுறுத்தினார். மக்களுக்குச் செய்யும் தொண்டுதான் இறைவனுக்குச் செய்யும் தொண்டாகும் என்று எடுத்துரைத்தார். ஏழைகளுக்கும், கேளார், காணார், கால் முடம்பட்டோர் ஆகியோருக்கும் எழுத்தறிவில்லாதார்க்கும் தொண்டு செய்யத் தூண்டினார். சர்வசமய சமரசம், மனிதர்களிடையே சமத்துவமும் சகோதரத்துவமும், உயிர்களிடத்து இரக்கம், பற்றில்லாத உழைப்பு, பலனை எதிர்பாராத பக்தி, தனக்கென வாழாப் பிறற்குரியர் ஆகும் பண்பு, பணிவு ஆகியனவே அவர் தந்த கோட்பாடுகளின் பிழிவு ஆகும். கர்மயோகம் என்னும் தத்துவத்தின்

உள்ளுறையாகவே அகிம்சைக் கோட்பாட்டை அவர் ஏற்றுக்கொண்டார்.

*இரவீந்தரநாத் தாகூர்* தந்த கருத்துகளுக்கு அகிம்சை வரலாற்றில் இடமுண்டு. வாழ்க்கையில் மகிழ்ச்சி, மனித நேயம், உலக அமைதியில் நாட்டம் ஆகியவற்றையே அவர் எழுத்துகள் வலியுறுத்தின. சுற்றியுள்ள உயிர்களிடத்துக் காட்டுகின்ற தீவிரமான அன்புதான் அகிம்சை என்பது அவர்கருத்து. "பண்பாடு என்பதை, அது வகுத்துள்ள சட்டங்கள், நிறுவனங்கள் மூலம் மனித நேயத்தை எந்த அளவுக்கு உருவாக்கியுள்ளது என்பதைக் கொண்டே எடைபோடவும் பாராட்டவும் வேண்டுமே அன்றி அது வளர்த்திருக்கும் ஆற்றலின் அடிப்படையில் அன்று" என்ற அவர் கருத்து எண்ணிப் பார்க்கத்தக்கது.

கிரேக்கப் பெரியார் *சாக்ரடீஸ்* அகிம்சைக் கோட்பாட்டின் படி நடந்த அறிஞர்களுள் ஒருவர். தாம் உண்மை என்று கண்ட கொள்கைக்காக உயிரையும் கொடுத்தார் என்பதால்தான் இன்றும் அவர் இறவாது வாழும் பெரியவர் ஆகிறார். அவர் கேட்டதெல்லாம் சிந்தனைச் சுதந்திரந்தான். அமைதி வழியில் இளைஞர்களைத் திரட்டி எதையும் ஏன் எதற்கு என்று கேட்டுச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டினார். ஆனால் அவர் இளைஞர்களைக் கெடுக்கிறார் என்று குற்றம் சாட்டி அன்றைய அரசு மரண தண்டனை விதித்தது. அவர் மன்னிப்புக் கேட்டிருந்தால் விடுதலை கிடைத்திருக்கும். நண்பர்கள் துணையுடன் தப்பிச் செல்லவும் வாய்ப்பிருந்தது. ஆனால் சாக்ரடீஸ் மறுத்துத் தம்முடைய குறிக்கோளுக்காக நஞ்சையுண்டு புன்முறுவலோடு மரணத்தைத் தழுவினார்.

தனி மனிதனுக்கும் ஆட்சியாளருக்கும் இடையே இருக்க வேண்டிய தொடர்புகள் பற்றி *ஹென்றி டேவிட் தோரோ* ஆற்றியுள்ள சொற்பொழிவு, பலருடைய உள்ளங்களைக் கவர்ந்து, அநீதியான சட்டங்களை அமைதி வழியில் எதிர்க்க

அவர்களைத் தூண்டியது. "சட்ட மறுப்பு" என்ற அகிம்சைப் போராட்டக் கருவியை அமெரிக்கருக்கு வழங்கி உலகைச் சிந்திக்க வைத்தார். இந்தக் கருவியைக் கொண்டு போராடினால் அரசின் அத்து மீறிய போக்குகளைக் கட்டுப்படுத்துவதோடு காலப் போக்கில் அரசையே அகற்றி விடலாம் என்பது அவர் கருத்து. இந்த வகையில் போராடும் போது ஏற்படும் தண்டனைகளையும் இழப்புகளையும் விருப்பத்தோடு ஏற்றுத் தாங்கிகொள்ள வேண்டும் என்றும் கூறினார். வாழ்க்கையில் எளிமையும், விடுதலை வேட்கையும் கொண்ட அவர், இந்தியச் செல்வங்களான உபநிஷத்துகள், கீதை ஆகியவற்றின் ஆங்கில மொழி பெயர்ப்புகளைக் கற்று தெளிந்தவர். மெக்ஸிகோவிற்கு எதிராக அமெரிக்கா படையெடுத்ததை எதிர்த்துச் சிறைப்பட்டார். அங்கே இருந்து கொண்டு "சாத்வீக எதிர்ப்பின் மேன்மை" (Essay on Vertue of Civil Disobedience) என்ற கட்டுரையை எழுதினார்.

சிறந்த சிந்தனையாளரான தோரோ, நீக்ரோக்கள் அடிமைப்பட்டிருந்ததை வெறுத்தார். உடலுழைப்புக் கோட்பாட்டில் ஆர்வம் கொண்ட அவர் தம் உழைப்பை கொண்டே தேவைகளை நிறைவு செய்து தன்னிறைவு பெற்று வாழ்ந்தார். நல்லது, கெட்டது எவை என்பதைப் பகுத்தறிந்து சரியானதையே ஆதரிக்க வேண்டும் என்பார். பெரும்பாலோர் முடிவே ஜனநாயகம் என்றாலும், சிறு பான்மையர்க்கும் அவர் மதிப்புக் கொடுத்தார். ஒரு கோட்பாடு செயல்பாட்டுக்கு வந்தால் மட்டுமே அவர் ஏற்றுக் கொள்வார். வெற்றுப் பிரசாரத்தை அவர் விரும்புவதில்லை. அதே போல நோக்கமும் அதனை அடையும் வழிமுறைகளுக்குமிடையே நெருங்கிய உறவு இருக்க வேண்டும் என்பதை வலியுறுத்தினார்.

ரஷிய ஞானியான *லியோ டால்ஸ்டாய்*, கதைகள், கட்டுரைகள், நாவல்கள் மூலம் அகிம்சை நெறியை மக்களுக்குப் பரப்பினார். போரையும், இராணுவத்தையும் முற்றிலுமாகப் புறக்கணித்தார். அமைதி வழியில் புதியதோர்

உலகம் உருவாக்க விழைந்தார். 'கொல்லாமை' அறத்தை முழுமையாகப் பின்பற்றுமாறு வேண்டினார். எளிய வாழ்வு, உடைமை இன்மை, உடலுழைப்பு, அன்பு முதலிய அகிம்சை நெறிகளை அவர் வலியுறுத்தினார். அன்பு வழியில் தீமைகளை எதிர்த்துப் போராட வேண்டும் என்றார்.

டால்ஸ்டாய், கிறிஸ்துவக் கோட்பாடான மனித நேயம் என்பதை மட்டும் வலியுறுத்தாமல், நியாயம் சுதந்திரம் ஆகியவற்றிற்காகவும் வாதாடினார். வாழ்க்கையின் புத்தாக்க நெறியாகக் கிறிஸ்துவ சமயத்தைக் கொள்ள வேண்டும் என்ற கருத்தைத் தம்முடைய "இறைவனின் ஆட்சி உன்னுள்ளே உள்ளது" (The Kingdom of God is within you) என்ற ஆய்வின் மூலம் வெளிப்படுத்தினார். சகோதரத்துவம், அமைதி ஆகிய கருத்துக்களை உள்ளடக்கமாகக் கொண்டு அமைந்தவையே கிறித்துவ போதனைகள் என்பதை அவர் படைப்புகள் மூலம் பறைசாற்றினார். குவாக்கர் இயக்கத்திற்கு ஆதரவு கொடுத்த அவர், உலகச் சகோதரத்துவம், போரின்மை ஆகியவற்றைப் பரப்புவதே கிறிஸ்துவ சமயத்தின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என்றார்.

"ஒரு கிறிஸ்துவன், தன் அயலவனைப் பகைக்க மாட்டான்; அவனைத் தாக்கவோ, இன்னாதன சொல்லி இகழவோ மாட்டான். மாறாக எதிர்ப்பினைக் காட்டாமல் தனக்குத் தானே துன்பத்தை ஏற்றுக் கொள்வான். தன்னை மட்டுமின்றி உலகத்தையும் துன்பத் தளையிலிருந்து மீட்கும் வகையில் அவனுடைய ஒவ்வொரு செயலும் அமையும்" என்று கிறிஸ்துவ சமயத்திற்கு டால்ஸ்டாய் தந்த புதுவிளக்கம் அண்ணல் காந்தியைப் கவர்ந்தது. தண்டனைகள் வழங்குவதற்காக வகுக்கப்பட்டுள்ள எல்லாச் சட்டப் பிரிவுகளையும் அகற்றி, மன்னிப்பு அளித்துத் திருத்துவதையே நடைமுறையாகக் கொள்ள வேண்டும் என்றார்.

*பயன்பாட்டு விதி* (Utilitarianism), வன்முறை ஆகியவற்றை அகிம்சை, உலக அன்பு ஆகிய

கோட்பாடுகளைக் கொண்டு வென்றுவிடலாம் என்று உறுதியாக நம்பினார். அகிம்சை வழியாக அநீதிகளை எதிர்ப்பது எல்லாக் காலத்திற்கும் பொருந்தும் என்று கூறினார். ''அவருக்கு முன்னரும் அன்றிப் பின்னரும் அவரைப் போல வேறு எந்த மேனாட்டினரும் பலாத்காரமின்மையைப் பற்றி நிறைவாகவும் உறுதியாகவும் ஆழ்ந்த கருத்துடனும் ஞானத்துடனும் எழுதியதோ பேசியதோ கிடையாது'' என்று டால்ஸ்டாய் பற்றிக் கூறியுள்ள அண்ணல் காந்தியின் கருத்து எண்ணிப் பார்க்கத் தக்கது.

எளிய வாழ்வே உயர்வெனக் கருதிய டால்ஸ்டாய் தம் பெருஞ்செல்வத்தையும் ஆடம்பர வாழ்வையும் முற்றிலுமாக நீத்தார். வன்முறை நீங்கிய எளிமை வாழ்வு அவரை ஆட்கொண்டது. தன் தேவைகளை மிக மிகக் குறைந்த அளவுக்குச் சுருக்கிக் கொண்டார். தமக்கு வந்த நோபல் பரிசைக் கூடப் புறக்கணித்தது-செல்வ நுகர்ச்சியை அவர் விரும்பவில்லை என்பதை எண்பித்தது.

எளிமை, உடல் உழைப்பு, ஏற்றத்தாழ்வு இல்லாத முதலாளி-தொழிலாளி உறவு ஆகியவற்றை வற்புறுத்தியவர் *ஜான் ரஸ்கின்*. மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் இடையே நியாயமான இணக்கநிலை இருக்க வேண்டும் என்பது அவர் கருத்து. அந்த நிலை ஏற்பட அன்பும், நேர்மையும் அடித்தளங்களாக அமையும் என்றார். மனிதன் உயர்வாகக் மதிக்கப்பட வேண்டும் என்றும் அறிவை விட ஒழுக்கமே உயர்ந்தது என்றும் சொன்னார்.

*புத்தாக்கம் :* இவ்வாறு உலகின் உயர்ந்த சமயங்கள் அனைத்திலும் இடம்பெற்றுள்ள அகிம்சை நெறி ஆன்றோர் பலராலும் வளர்க்கப் பெற்று அண்ணல் காந்தியின் வாழ்க்கையிலும், போராட்டங்களிலும் ஆழமாகப் பதிந்தது. அவர் அகிம்சை நெறிக்குத் தந்த புது விளக்கம் போராட்ட வடிவங்கள் ஆகியவற்றை அவருடைய வரலாறும் வாக்குகளும் தெளிவுபடுத்துகின்றன..

# 2. அகிம்சையின் பொருளும் சிறப்பும்

### *எதிர் மறைப் பொருள் :*

சமஸ்கிருத சொற்களுக்கு முன்னே அமைகின்ற 'அ' என்னும் முன்னொட்டு எதிர்மறைப் பொருளைத் தந்துவிடும். நல்லன, அல்லனவாகவும் அல்லன நல்லனவாகவும் மாறிவிடும். கெளரவம்-அகெளரவம், சத்தியம்-அசத்தியம், சரீரி-அசரீரி, சாதாரணம்-அசாதாரணம், சாத்தியம்-அசாத்தியம், சிரத்தை-அசிரத்தை, சுத்தம்-அசுத்தம், சைவம்-அசைவம், தர்மம்-அதர்மம், திருப்தி-அதிருப்தி, தைரியம்-அதைரியம், மங்கலம்-அமங்கலம், யோக்கியன்-அயோக்கியன், ரூபம்-அரூபம், லட்சியம்-அலட்சியம், பாக்கியவதி-அபாக்கியவதி, ஜாக்கிரதை-அஜாக்கிரதை, ஜீரணம்-அஜீரணம், நாகரிகம்-அநாகரிகம், நீதி-அநீதி ஆகிய இணைச் சொற்களில் நன்மைச் செயல்கள் எல்லாம் தீமையானதாக மாறியிருப்பதைக் காணலாம். பயம்-அபயம், மலம்-அமலம், ஹிம்சை-அஹிம்சை ஆகிய இணைச் சொற்களில் தீய நிலைகள் நல்லனவாக மாறியிருப்பதையும் காணலாம்.

### *எதிர் மறைச் சொல் :*

அஹிம்சை என்பது, அ+ஹிம்சை என்று பிரிகிறது. ஹிம்சை என்பதற்கு வேர்ச்சொல் 'ஹன்' ஆகும். அதன் பொருள் 'கொல்', 'துன்புறுத்து', 'அழி' என்பதாகும். எனவே அஹிம்சை என்றால் கொல்லாதிருத்தல், துன்புறுத்தாமை, சேதப்படுத்தாமை என்று பொருள்படும். இவ்வாறு 'அகிம்சை' என்பது எதிர்நிலைச் சொல்லாக இருப்பதற்கு என்ன காரணம்? இதற்கான விடையை அண்ணல்காந்தி கூறுகிறார். உலகெங்கும் இம்சைச் செயல்களே பரவியிருக்கின்றன. எனவே மனிதன் அவற்றை எதிர்த்துப் போராடித் தன் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்பதே அவர் கருத்து.

### *அகிம்சையும் கொல்லாமையும் :*

இம்சைச் செயல்களில் கொல்லுதல் என்ற பகுதியை எடுத்துக் கொள்வோம். துன்பத்தை எதிர்க்கத் துணிவில்லாமல் தன்னைத்தானே மனிதன் மாய்த்துக் கொள்கிறான். தூக்கில் தொங்குதல், நஞ்சுண்ணல், தூக்க மாத்திரையை விழுங்கல், தண்டவாளத்தில் படுத்தல், தன் உடலின் மீது தீயிட்டு வெந்து போதல், மின்சாரத்தைப் பயன்படுத்துதல் என்றெல்லாம் பல உத்திகளைக் கையாண்டு தற்கொலை செய்கிறான். மனிதனை மனிதனே வீழ்த்தும் வெறிச் செயல்களுக்கு அளவே இல்லை. பழைய கருவிகளும், புதிய கருவிகளும் கொலை செய்வதற்குத் தக்க துணையாகின்றன. இன்னும் போர்க்குரல் ஒலித்துக்கொண்டுதான் உள்ளது. எத்தனை உயிர்கள் அதற்கு இரையாகின்றன. நாள் தோறும் துப்பாக்கிச் சூடு பற்றிய செய்திகள், சாதிக் கலவரம் என்ற பெயரால் உயிர் இழப்புகள். மறியல் போராட்டங்கள் என்ற பெயரால் சாவுகள். கொடிய குற்றவாளிகள் தூக்கிலிடப்பட்டுக் கொல்லப்படுகின்றனர். போக்குவரத்து வாகனங்கள் பெருகிய அளவுக்குச் சாலைச் சீரமைப்புகள் இல்லாமையால் எத்தனையோ மனித உயிர்கள் விபத்துக்குள்ளாகிப் பலியாகின்றன. கருக்கலைப்பு என்ற கொடிய செயலாலும் கொலைகள் பெருகிவருகின்றன. பெண்சிசுக்களைக் கொன்று புதைக்கும் கொடுமையும் இன்றும் நிகழாமல் இல்லை. உலகில் சில இடங்களில் பரிவுக் கொலை என்ற பெயரில் கொடுமைகள் நடக்கின்றன. தீராத நோயாளியாக ஒருவர் இருந்தால் அவர் விரைந்து சாக வகை செய்ய வேண்டுமெனச் சுற்றத்தாரே வேண்டுகின்றனர். அதேபோல நோயின் கொடுமையைத் தாங்காத நோயாளியே தான் விரைவாகச் சாக வேண்டுமெனப் பிறர் உதவியை நாடுகின்றான். இரண்டுமே கொலைச் செயல்களே. இவ்வாறு விரிந்து பரந்து நடக்கும் எல்லா வகையான கொலைக் கொடுமைகளும் இல்லாதிருப்பதே அகிம்சை நெறியாகும்.

### *பிறவுயிர்க் கொலைகள் :*

மனித உயிர்களைக் கொல்லா திருப்பது மட்டுமா அகிம்சை? நீரிலும் நிலத்திலும் வாழ்கின்ற விலங்குகள், பறவைகள், பூச்சிகள், செடிகள் ஆகியனவும் உயிருள்ளவை எனக் கருதி அவற்றைக் கொல்லாதிருக்க வேண்டும். ஜீவகாருண்யம் என்று வடலூர் வள்ளலார் கூறுவது வாய் பேசாத உயிர்களையும் சேர்த்துத்தான். வாடிய பயிர்களைக் கண்ட போதும் அவர் உள்ளம் வாடியது. உணவில் சைவ நெறியைப் பின்பற்றினால் இந்தக் கொலைகளைத் தவிர்த்துவிடலாம். உணவிற்காக விலங்குகளைக் கொன்று குவிப்பதை விட்டொழிக்க வேண்டும்.

### *வள்ளுவர் வகுத்தவை :*

கொல்லாமையையும், புலால் மறுத்தலையும் பற்றித் திருவள்ளுவர் சொல்லும் கருத்துக்களைச் சிந்திக்க வேண்டும். ''நல்ல வழி என்பது எதுவென்றால், எந்த உயிரையும் கொல்லாமையைக் கடைபிடிக்கும் நெறியாகும்'' என்று கூறி மனித உயிர்களையும் பிற உயிர்களையும் கொல்லுவது தீய வழியாகும் என்று எச்சரிக்கின்றார். ஒரு மனிதன் தன்னுடைய உயிர் போய்விடுகின்ற நிலை வந்தாலும், பிற உயிர்களைப் போக்கும் செயலைச் செய்யக் கூடாது என்று வலியுறுத்துகின்றார். அருள் எது? பாவம் எது? என்பவற்றை விளக்க வந்த வள்ளுவர், கொல்லாமையே அருள் என்கின்றார். கொன்றவற்றின் ஊனைத் தின்பதே பாவம் என்கின்றார்.

### *கலையும் கொலையும் :*

கொலை வெறியைத் தூண்டுகின்ற சாதனங்களை முற்றிலுமாகத் தடைசெய்ய வேண்டும். மது, போதைப் பொருள்கள் முதலியன கொலை செய்வதற்கு உரிய தூண்டு சக்திகளாக அமைகின்றன. உலகம் முழுவதும் அவற்றை

முற்றிலுமாக ஒழிக்க வேண்டும். கலை என்ற பெயரில் வரும் திரைப்படங்கள் மூலம் வன்முறைக்காட்சிகளும், கொலை செய்யும் காட்சிகளும் மிகுந்த அளவு காட்டப்படுகின்றன. இவைகளும் கட்டுப்படுத்தப்படுமானால், வன்முறைச் செயல்களும் கொலைகளுமே சிக்கல் தீர்க்கும் வழிகள் என்று கருதுவதைப் போக்கி விடலாம்.

## கெட்ட போரிடும் உலகம் :

உயிர்ப்பலி கொள்ளும் போர்கள் இன்றும் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. ஒருவனைக் கொலை செய்த கொடுமை நிரூபிக்கப்பட்டால் அவனுக்கு மரணதண்டனை வழங்கச் சட்டத்தில் இடமுண்டு. ஆனால் போர்க்களத்தில் ஆயிரக் கணக்கான உயிர்களைக் கொல்லுகின்றவனுக்கு மாவீரன் என்ற பெருமை ஏற்படுகின்றது. ஒரு காலத்தில் போர்க்களம் என்ற ஒன்றைக் குறிப்பிட்டு அங்கே வீரர்களுக்கிடையே போரினை நடத்தினர். பொதுமக்கள் பத்திரமாகவே இருந்தனர். ஆனால் இன்றோ போர் என்றால் முழுமையான அழிவு என்பதே நடைமுறை. போட்டி போட்டுக் கொண்டு வலிமையுள்ள புதிய ஆயுதங்களைக் கண்டு பிடித்துக் குவிக்கத் தொடங்கிவிட்டனர். தம் கருவிகள் விற்பனையாக வேண்டும் என்பதற்காகவே நாடுகளுக்கிடையே போர்களை மூட்டிவிட அந்தப் பெரியநாடுகள் தயங்குவதில்லை.

## படைக்கல ஒழிப்பு :

படைக்கலங்களைத் தயாரித்துக் குவித்து வைப்பதும் கொலை செய்யத் தூண்டும் முயற்சியே ஆகும். படைகளைப் பெருக்கவும் ஆயுதங்களை உற்பத்தி செய்யவும் கோடிக்கணக்கான பணத்தை அரசுகள் முதலீடு செய்கின்றன. இந்தச் செலவில் ஒரு பகுதியை ஒதுக்கினால் கூட ''உறுபசியும் ஓவாப் பிணியும்'' இன்றிப் பல நாடுகள் வளர்ச்சியடையும். கல்வித்துறை, தொழில்துறை

முன்னேற்றங்கள் மேலோங்கும் ஆகவே படைகளையும் படைக்கலங்களையும் பெருக்குகின்ற போக்கு மாறுமானால் கோடிக்கணக்கான உயிர்க் கொலைகளைத் தவிர்க்க முடியும். அண்ணல் காந்தி மனித இனத்தை அகிம்சை வழி மூலமே காப்பாற்ற முடியும் என்றும், ஆயுத ஒழிப்பு அல்லது படைக்கல ஒழிப்பு என்பது அகிம்சையின் மறுபெயர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## *போரா ? புரட்டா ? :*

உயிர்ப்பலிகளும், உடைமைகளுக்கு அழிவும் ஏற்பட்டதன்றிப் போரினால் என்ன நன்மைகள் விளைந்துள்ளன? ஐரோப்பிய நாட்டைச் சான்றுக்கு எடுத்துக்கொள்வோம். 17-ஆம் நூற்றாண்டில் அங்கே நடந்த சண்டையில் 30,00,000 மக்களும், 18-ஆம் நூற்றாண்டில் 52,00,000 மக்களும், 19-ஆம் நூற்றாண்டில் 55,00,000 மக்களும், போர்க்களத்தில் கொல்லப்பட்டனர் என்பதே வரலாறு. நூற்றாண்டுக்கு நூற்றாண்டு உயிர்க்கொலைகள் பெருகின என்பதே வரலாறு. அதே போல முதல் உலகப் போரில் 1,00,00,000 மக்கள் கொல்லப்பட்டனர். அதற்கும் இரண்டு மடங்கு எண்ணிக்கையுள்ளோர் காயமுற்றனர். இரண்டாம் உலகப் போரில் இறந்தோர் 5,60,00,000 பேர். காயமுற்றோர் 9,00,00,000 பேர். முதல் உலகப் போரில் ஏற்பட்ட பொருட் சேதத்தின் மதிப்பு 38,000 கோடி பவுன். இரண்டாம் உலகப் போரில் ஏற்பட்ட பொருட்சேதத்தின் மதிப்பு 4,00,000 கோடி பவுன். நேரடியான போர்ச் செலவுகளாக முதல் உலகப் போரில் 28,000 கோடி பவுன் என்றும் இரண்டாம் உலகப் போரில் 1,38,000 கோடி பவுன் என்றும் கணக்கிடப்பட்டுள்ளன. எல்லா வகையான அழிவுகளையும் தவிரப் பசியாலும், பட்டினியாலும், நோயினாலும், சுரண்டல், விலையேற்றம் முதலிய கொடுமைகளாலும் அவதிக்குள்ளானோர் தொகை, கணக்கிலடங்காது. எனவே போர் என்பது அறிவுடைமை

யாகுமா? அது சிக்கல்களைத் தீர்த்துள்ளதா? கொலைகளின் எண்ணிக்கைக்கு ஏற்பச் சிக்கல்களும் பெருகியுள்ளன. சமயங்கள் போற்றும் மறைகளின் அடிப்படையில், உயிர்களைப் பறிப்பது நியாயம் என்று வாதாடுவதை ஏமாற்றுவித்தை என்கிறார் லியோ டால்ஸ்டாய். "படைவீரர்கள், போரிலும் வேறு சில சூழ்நிலைகளிலும் பிற உயிர்களைப் பறிக்க அனுமதி உண்டு என்று போதிக்கப்படுகிறார்கள். ஆனால் இப்படிப் போதிப்பவர்களால் புனிதமானது எனப் போற்றப்படும் மறைகளில் இதற்குச் சிறிதும் இடமில்லை. உனக்கு எது கூடாது என விரும்புவாயோ அதைப் பிறருக்கும் செய்யாதே எனத் தடை விதிக்கப்பட்டுள்ளது. அப்படியானால் இது ஏமாற்று இல்லையா?" என்பது அவர் வினாவாகும்.

அண்ணல் காந்திக்கு முன் அயலார் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுவிக்கப் போராடியோர் இரத்தம் சிந்தினர். உயிர்க்கொலை மிகுதியாக இருந்தது. ஆனால் பிரிட்டிஷாருக்கும் இந்தியருக்கும் இடையே நடைபெற்ற அகிம்சை வழியிலான ஒத்துழையாமை, நட்புணர்வுடன் இருவரையும் பிரித்தது. இந்தப் புரட்சியில் சாவோ துன்பமோ இல்லை; வாழ்வும் நன்மையும் இருந்தன.

### *தூக்கிலிடுதல் சரியா?*

தூக்குத் தண்டனை விதிப்பதன் மூலமும் மனிதனின் உயிர் பறிக்கப்படுகிறது. இதுவும் கொலையோடு சேரும். இதனை முற்றிலுமாக ஒழிக்கும் முயற்சி இன்று நடைபெற்று வருகின்றது. சில நாடுகளில் இந்தத் தண்டனை ஒழிக்கப்பட்டுள்ளது. அங்கெல்லாம் கொலைக் கொடுமைகள் குறைந்துவிட்டன. ஆனால் இந்தத் தண்டனை நடைமுறையில் உள்ள நாடுகளில் கொலைக் குற்றங்கள் குறைந்தபாடில்லை. தூக்குத் தண்டனை பெறுவோரில் 90 விழுக்காட்டினர் ஏழைகளும் தாழ்த்தப்பட்டோரும் என்ற உண்மை வெளியாகியுள்ளது. எனவே ஏழ்மையை ஒழித்துச்

சமத்துவத்தை ஏற்படுத்தும் முயற்சிகளால் கொலைக் குற்றங்கள் நிகழ்வதைப் படிப்படியே குறைக்கலாம்.

## *அகிம்சையும் கொடுமை செய்யாமையும் :*

இனி இம்சைச் செயல்களில் 'கொடுமைப்படுத்துதல்' அல்லது 'துன்புறுத்துதல்' என்பதைப் பார்ப்போம். சினத்தையும், வெறுப்பையும் பேராசையையும் மனத்துள் வளர்த்துக் கொண்ட மனிதன் பிறரைத் தாக்கித் தன்தேவைகளை நிறைசெய்கிறான். அவர்களை அடைத்து வைத்துச் சித்திரவதை செய்கிறான். கொத்தடிமைகள் ஆக்கிக் கொடுமைப்படுத்துகிறான். தன் மனத்துக்குள்ளேயே திட்டுகிறான். சில நேரங்களில் கொடிய சொற்கள் மூலமும் தன் வெறுப்பை வெளிப்படுத்துகின்றான். உடலால் தாக்கியதோடு உள்ளத்தாலும் சாபமிடுகின்றோரும் உண்டு. இவையெல்லாம் நேர்முகமாகக் கொடுமைப்படுத்துவதற்குச் சான்றுகள். மறைமுகமாக நடக்கும் கொடுமைகள் நாட்டில் எத்தனையோ உண்டு. சுரண்டல் என்ற ஒரு சொல்லுக்குள் இவற்றை அடக்கிவிடலாம். குறைந்த கூலியைக் கொடுத்துக் குழந்தைகளை வேலைக்கமர்த்திக் கோடி கோடியாக வருவாய் தேடும் கொடுமை நடக்கின்றது. எட்டு மணி நேரத்திற்கு மேலும் வேலைவாங்கி ஊதியத்தைக் குறைத்துக் கொடுக்கும் மனச்சாட்சி இல்லாதவரும் உண்டு. பொருள்கள் பற்றாக்குறை வந்த காலத்தில் பதுக்கிவைத்துக் கொள்ளை லாபம் பெறும் கொடுமையும் நடக்கிறது. எங்கும் எதிலும் கலப்படம் என்பது இன்று வாடிக்கையாகிவிட்டது. அங்கெங்கிலாது எங்குமிருக்கும் கையூட்டு அல்லது லஞ்சம் தலைவிரித்தாடுகிறது. கள்ளக் கடத்தல் என்பது ஒரு கலையாகவே அமைந்து விட்டது. பணஇரட்டிப்பு மோசடி, தவணைச் சீட்டு என்ற பெயரில் ஏமாற்றுதல், வெளிநாடுகளுக்குக் கூட்டிப் போவதாகக் கூறிப்பணம் பறித்தல் ஆகியனவும் அன்றாடக் காட்சிகளாகிவிட்டன. ஏழை-பணக்காரன், ஆண்டான்-அடிமை, உயர்ந்த சாதி-தாழ்ந்த சாதி என்ற ஏற்றத் தாழ்வுகள் குறைந்தபாடில்லை. சாதிச் சண்டை போச்சோ? உங்கள்

சமயசண்டை போச்சோ? என்று பாரதி கேட்டது இன்றைக்கும் பொருந்தும். சமயச்சார்பின்மை என்பது ஏட்டில் காணும் எழுத்துகளாகவே இருக்கின்றன. பெண்ணடிமை இல்லாமல் இல்லை. அவர்கள் சமத்துவம் பெறுவது முழுமையாக நிறைவேறவில்லை. அவர்களின் உரிமைகளும் முற்றிலுமாகக் கொடுக்கப்படவில்லை.

### *காந்தி காட்டும் கொடுமைகள் :*

மறைமுகமாகவும் நேர்முகமாகவும் அமையும் தீய செயல்களை அண்ணல் காந்தி இன்னும் விரிவாகப்பேசுவார். "மனத்தில் தீய எண்ணம் கொள்வது, பொறுமையிழந்து ஆத்திரம் அடைவது, பொய் பேசுவது, பிறர்மேல் துவேஷம் கொள்வது, பிறருக்குத் தீங்கு நினைப்பது உலகமக்களுக்குத் தேவையான ஒரு பொருளின் மீது ஆதிக்கம் கொள்வது ஆகியனவும் ஹிம்சையே என்பது அவர் கருத்து.

மேலும் அவர் ஹிம்சையின் பட்டியலை விரிவாக்கிக் கொண்டே செல்வார். "நான் இன்று எந்த நண்பனையாவது அவமதித்தேனா? அவனுக்குத் தரம் குறைந்த கதர்த் துணியைக் கொடுத்து நல்லதை நான் வைத்துக் கொண்டேனா? அரைகுறையாகச் சுட்ட ரொட்டியை அவனுக்குக் கொடுத்து நல்ல பக்குவமாகச் சுட்டதை நான் எடுத்துக் கொண்டேனா? நான் செய்ய வேண்டிய வேலையைச் செய்யாமல், அதன் பழியைப் பிறர் மேல் சுமத்தினேனா? இன்று நோய்வாய்ப் பட்டிருந்த அண்டை வீட்டாருக்குப் பணிவிடை செய்ய நான் செல்லவில்லை. அருந்தத் தண்ணீர் கேட்டவர்களுக்குத் தண்ணீர் கொடுக்கவில்லை. வந்த விருந்தினரை 'வணக்கம்' என்று சொல்லி வரவேற்கக் கூட இல்லை. தொழிலாளியை அவமதித்தேன். சற்றும் எண்ணிப் பார்க்காமல் அவன்மேல் தொடர்ந்து வேலைப்பளுவைச் சுமத்தினேன். தார்க்குச்சியால் குத்தி எருதைத் துன்புறுத்தினேன். சோறு கொஞ்சம் வேகாமல் இருந்தது என்பதால் கோபமடைந்தேன் - இவையெல்லாம் ஹிம்சையாகும்". எனவே மிகச் சிறிய அளவிலிருந்து பெரிய

அளவு வரை மற்றவர் உள்ளங்களை வருந்தச் செய்யும் இன்னாச் செயல்கள் இருப்பதையே அண்ணல் காந்தி நினைவு படுத்துகின்றார்.

## *வினோபா காட்டும் கொடுமைகள் :*

கட்டாயப்படுத்துதல், பிடிவாதம் செய்தல், பலத்தைக் காட்டிப் பிறரைப் பணிய வைத்தல் ஆகியவற்றையும் ஹிம்சைச் செயல்கள் என்றே வினோபா குறிப்பிடுவார். எனவே எல்லா வகையான கொலைச் செயல்களும் ஹிம்சை. அதுபோல மனித உயிர்களுக்கும் பிற உயிர்களுக்கும் இன்னா, ஊறு, தீங்கு, நோவு செய்வதும் ஹிம்சை. இத்தகைய இருவகைக் கொடுமைகளும் இல்லாதிருப்பது அல்லது இவற்றைச் செய்யாதிருப்பது அகிம்சை ஆகும்.

## *அகிம்சையின் உடன் பாட்டு நிலை :*

கொல்லாமை, கொடுமை செய்யாமை என்று அகிம்சை என்ற சொல்லுக்குப் பொருள் கொள்வது, அச்சொல், 'எதிர்மறை அமைப்பில்' இருப்பதால்தான். ஆனால் உலகில் எத்தனை வகையான பாவச் செயல்கள் உள்ளனவோ அவற்றை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு வாழ்க்கை நடத்துவது மட்டும் அகிம்சை ஆகிவிடுமா? இல்லை. அகிம்சையின் மற்றொரு படிநிலையையும் பார்க்க வேண்டும். அந்தச் சொல்லை உடன்பாட்டுக் கருத்தாகவும் கொள்ள வேண்டும். அப்போது அது செயல்படத் தூண்டும் சிறந்த சொல்லாக அமையும். ''நல்லது செய்தல் ஆற்றீராயினும், அல்லது செய்தல் ஓம்புமின்'' என்று கூறும் தமிழ்ப் புறநானூறு, 'ஒருவருக்கு நன்மை செய்ய முடியாவிட்டாலும் தீமைகளையாவது செய்யாதிருங்கள்' என்று அந்த நூல் அறிவுறுத்துகின்றது. ஆனால், 'தீமைகளையும் செய்யாதீர்; அதே நேரத்தில் ஒதுங்கியிருக்காமல் நன்மைகளையும் செய்க' என்பதே அகிம்சையின் எதிர்மறை, உடன்பாட்டு நிலைகளால் கொள்ளத் தகும் பொருள் கோள் ஆகும். இவ்விரண்டையும்

விழிப்புணர்வோடு அணுகி அறிதல் நலம். அவை வெறும் கருத்துநிலை மட்டுமன்று, சமுதாயச் சீரமைப்புக்குத் தேவையான செயலாற்றல் என்பதை உணரல் வேண்டும். அதேபோல் ஒரு பண்பாட்டுச் சமுதாயம் அமைவதற்கான அடிப்படைக் கூறுகள், அகிம்சையின் எதிர்மறை நிலையைவிட அதன் உடன்பாட்டு நிலையில், முறையாகவும் முழுமையாக வும் அமைந்திருப்பதைக் கூர்ந்து கவனித்தால் புலனாகும்.

### *காந்தியும் உடன்பாடும் :*

அண்ணல் காந்தி அகிம்சையின் எதிர்மறைப் பொருளை ஏற்றுக் கொண்டதோடு, அதன் உடன்பாட்டுப் பொருளுக்கு உயரிய மதிப்புக் கொடுத்தார். "அகிம்சை என்பது எதிர்மறை நிலையில் 'தீங்கு செய்யாமை' என்று பொருள் கொள்ளப்பட்டாலும், உடன்பாட்டு நிலையில் 'எதிரிகள் உட்பட எல்லோரிடமும் காட்டுகின்ற அன்பு' என்று கூறுவதை நான் ஏற்கின்றேன்" என்பது அவருடைய வாய்மொழி.

### *வளமான சொற்கள் :*

இன்னா நாற்பதென்றும், இனியவை நாற்பதென்றும் தமிழில் தனித்தனி நூல்கள் இருப்பதுபோல், செய்யத் தகாதன, செய்யத் தகுவன ஆகிய இரு கூறுகளையும் தன் எதிர்மறை, உடன்பாட்டுப் பொருள் நிலைகளில் 'அகிம்சை' என்ற சொல் அடக்கியுள்ளது. ஹிம்சை, அகிம்சை ஆகிய இரண்டையும் வெறும் சொற்களாகக் (Words) கருதாமல், கருத்துச் சொற்களாகக் (Terms) கொள்வார் வினோபா. கங்கையாற்றின் பெருக்கைப் போல், அந்தச் சொற்கள் வளம் கொண்டவை என்பது அவர் கருத்து.

### *அகிம்சையும் இயங்கு நிலையும் :*

அகிம்சையின் உடன்பாட்டு நிலை செயற்படு மனிதனாக ஒருவனை மாற்றுவதால் அது ஓர் இயங்குநிலைக்

கோட்பாடாகும். அவன் வாழ்வில் ஏற்கவேண்டிய ஒரு மதிப்பீட்டுத் திட்டமாக அதனைக் கொள்ள வேண்டும். சிதறியோடும் மனத்தைக் கட்டுப்படுத்தி உயர்நெறிகளைப் பேணி உள்ளத்தில் ஈரத்தை வளர்ப்பதும் இதில் அடங்கும். வாழ்க்கையில் ஏற்க வேண்டிய கோட்பாடுகளையும் அறவுணர்வையும் உருவாக்கும் உந்துசக்தியாக அமைகின்றது. பிறர்நலம் பேண உழைக்கத் தூண்டுதலால் இதுவே கர்மயோக நெறியுமாகும்; முரண்பாடுகளை அகற்றி பதற்றத்தைத் தணிக்கும் கருவியுமாகும். இந்த உடன்பாட்டு அகிம்சை நிலையை மக்கள் விழிப்புணர்வை வளர்க்கின்ற ஒரு வாழ்க்கை நெறியாகக் கொள்ள வேண்டும்.

### *அகிம்சையும் சமுதாய நீதியும் :*

சமயங்கள் பெரும்பாலும் அகிம்சையின் எதிர்மறைச் செயல்பாட்டு ஆற்றலில் மட்டுமே கவனம் செலுத்தியுள்ளன. இன்னின்னவற்றைச் செய்யாதே எனத் தனிமனித அறங்களாகவே விதிக்கின்றன. ஆனால் அகிம்சையின் உடன்பாட்டுச் செயலாற்றலை உணர்ந்த அண்ணல் காந்தி, அதனைச் சமுதாய அரசியல் வாழ்க்கைக்கும் அடிப்படையாக்கிப் புதிய திருப்பத்தை ஏற்படுத்தினார். இதனை அவரே குறிப்பிடும் போது, "சத்தியமும் அகிம்சையும் மனிதர்கள் தமது தனிப்பட்ட வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகுவதற்கான நியமங்களாக அல்லாமல், ஒரு சமூகமோ, இனமோ, நாடோ கடைப்பிடிக்கக் கூடியனவாக வேண்டும். இதை நடத்திக் காண்பிப்பதற்காகவே நான் உயிர் வாழ்கிறேன். இவ்வழியில் முயற்சி செய்தவாறே நான் மடிவேன். என்னுடைய சிரத்தை நாள்தோறும் புதிய உண்மைகளைக் காண உதவுகிறது. அகிம்சை ஆன்மாவின் பண்பாகும்; எனவே ஒவ்வொரு மனிதனும் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் அதைப் பின்பற்றி நடக்க முடியும்" என்று கூறுகிறார். சொந்த வாழ்வில் அகிம்சையும், பொது வாழ்வில் ஹிம்சையும்

ஒன்றுக்கொன்று முரண்பட்டது என்பதே அவர் முடிவு. இவ்வாறு சமயநீதியாக இருந்த ஒன்றை சமுதாய நீதியாக மாற்றிய செயல் அண்ணல் காந்தியின் செயல்பாட்டில் தனியான இடத்தைப் பெறுகின்றது.

## *அகிம்சையும் அன்பும் :*

வாழு; வாழவிடு என்பதோடன்றி வாழ வகைசெய் என்பது அகிம்சையின் உடன் பாட்டுப் பொருளால் கிடைத்த வளர்ச்சியாகும். இதற்கு அடிப்படையாக அமைவது அன்பாகும். அன்பும் அகிம்சையும் ஒன்றுதான் என்பதே அண்ணல் காந்தியின் முடிவு. "நம்மை தமக்கு எதிரி என்று எண்ணிக் கொண்டு இருப்பவர் இடத்தும் அன்பு செலுத்த வேண்டும்" என்பார். அன்பு செலுத்தி அவரைத் திருத்த முயல வேண்டும் என்பதே அவர் கருத்து. உடன்பாடில்லாத கருத்துக்களை எதிர்க்கலாமேயன்றி அவற்றைக் கொண்ட மனிதரை அன்று. அன்பு வழியில் செயல்படும் போது ஏற்படும் உடல், உள்ளத்துன்பங்களைத் தாங்கிக் கொண்டு ஆன்ம பலத்தால் கொடுமைகளையும் குற்றங்களையும் எதிர்க்க வேண்டும்.

## *அன்பின் மேன்மை :*

அன்பிருந்தால் மட்டுமே சமுதாயத்திற்கு வலிந்து சென்று தொண்டாற்றும் உணர்வு ஏற்படும். 'அனைவருக்கும் அனைத்தும் கிடைப்பதற்காகத் தன்னலம் மறந்து உழைக்கும் அவா உருவாகும் அன்பு என்னும் உயர்ந்த பண்பு உருவாகாவிட்டால், வன்முறை தலைவிரித்தாடும்' என்ற டால்ஸ்டாயின் கருத்து உணரத்தக்கது. "அன்புதனில் தழைத்திடும் இவ்வையம்" என்ற பாரதியின் பாட்டு அன்பின் மேன்மையை உணர்த்தும். உலகை வாழவைத்து உயர்த்தும் கருவியே அன்பென்பது புலனாகும்.

### *அன்பும் அருளும் :*

அன்பைத் தாயென்று கொண்டால் கருணை என்பது அதன் குழந்தையாகும். கருணை என்ற சொல்லுக்கு அருள், ஈவு, இரக்கம் என்றெல்லாம் பொருள் விரிகின்றது. அன்புக்கும் அருளுக்கும் உள்ள தொடர்பை ''அருளென்னும் அன்பின் குழவி'' என்று வள்ளுவர் வெளிப்படுத்துவார். இராமலிங்க வள்ளலார், 'வாடுகின்ற மனித இனங்களுக்கு உதவுவதே அருள்' என்றும் 'அருள் உள்ளமே இறைவன் நடமிடும் இடம்' என்றும், 'கருணையே கடவுளின் பெயர்' என்றும் குறிப்பிடுவார். எனவே அன்பாலும் அருளாலும் உந்தப்பட்டு இல்லார்க்கும், எளியார்க்கும் துன்பங்களால் துடிப்போர்க்கும் உதவ முன் வர வேண்டும்.

### *அன்பே எல்லாம் :*

வெறும் தத்துவங்கள், அல்லல்படும் மனிதர்களைக் காத்துவிடாது. அனுபவம், ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளுதல், அன்பு ஆகியனவே காக்கும். ''உயிர்களிடத்து அன்பு செய்ய வேண்டும்'' என்பது பாரதியின் விருப்பம். அன்பின் வழியாக அருள் பிறத்தல் போல, அல்லன அகற்றி நல்லன செய்யும் அறவுணர்வு மேலோங்கும். அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் அகன்று உள்ளம் தூய்மை பெறும். எதையும் தாங்கும் இதயம் அமையும். தம்மை இகழ்வாரைப் பொறுத்துக் கொள்ளும் பண்பு உருவாகும். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் இயல்பு நிலை கொள்ளும். கொன்றன்ன இன்னா செய்தாரையும் மன்னித்து மறந்து விடும் மனம் வளரும். வெறுப்பு, போட்டி மனப்பான்மை வேரோடு நீங்கி விடும். இத்தகைய அன்புதான் எல்லாவற்றிலும் முதன்மையானது என்று பாடுவார் மாயூரம் வேதநாயகம்.

''சாந்தமும், தயவும், சகல நற்குணமும்
போந்த சத்தியமும் பொறுமையுமுள்ள
அன்பே பிரதானம்,''

என்பது அவருடைய பாடல் வரியாகும். "அன்பு ஒரு போதும் உரிமை பாராட்டாது; மாறாக அஃது ஈந்து கொண்டே இருக்கும். தொல்லைகளே தொடர்ந்தாலும் ஏற்கத் தயங்காது. அன்பு மனம் ஆத்திரமடையாது; பழி வாங்காது'' என்ற அண்ணல் காந்தியின் மொழியால், ஈகை, துன்பத்தை வலிந்தேற்கும் துணிவு, நிதானம், பெருந்தன்மை ஆகிய அன்பின் ஆற்றல்கள் வெளிப்படுகின்றன.

## *அன்பும் தொண்டுள்ளமும்*

''தன்னைத்தான் வருத்திக் கொண்டு சமுதாயப் பணியாற்ற முன்வருவதே அன்பைச் சோதிக்கும் வழி" என்பார் அண்ணல்காந்தி. தன்னுடைய புலன்களைத் தன்னோடும், தன்னைப் பிற உயிர்களோடும், தன்னை இறைவனோடும் இணைப்பது என்பதே 'யோகா' என்பதன் பொருள். (இணைத்தல் என்ற பொருள் உடை 'யுஜ்' என்ற சொல்லில் இருந்தே 'யோகா' பிறந்துள்ளது, ஆனால் பாரதியார் "ஊருக்குழைத்திடல் யோகம்" என்று புதுப்பொருள் கூறுவார். அவரைப் பொறுத்த வரையில் ஊராருக்குத் தொண்டு செய்வதே இறைவனுக்குச் செய்வது என்று அமையும். மக்களுக்குச் செய்யும் தொண்டே மகேசனுக்குச் செய்யும் தொண்டு என்பது போல திருமூலரும் ''நடமாடும் நம்பர்க்கொன்று ஈயில், படமாடும் கோயில் பகலவற்கங் காமே" என்று கூறியுள்ளார். எனவே மண்ணில் உள்ளோரை மதித்துத் தொண்டு செய்வோர் மரிப்பதில்லை. அனாதைக் 'குழந்தைகட்குக் காப்பகம்' (சிசுபவன்), 'முதியோர் காப்பகம்' (பிரேம் தான்), தொழுநோயர் இல்லம்' முதலிய புகலிடங்களை உருவாக்கி உழைக்கும், தொண்டிற்கோர் தூய அன்னையாம் தெரசா என்றும் வாழ்பவர் அல்லவா? ''ஆவி, உடல், பொருள், தன்னலம் தனைத்தியாகம் செய்தெந்நாளுமே சேவை செய்தாலே வாழலாம், உண்மையாய்ச் சேவை செய்தாலே வாழலாம்'' என்ற கவிஞரின் வரிகளை மறக்க முடியுமா? 'வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும் - இங்கு வாழும்

மனிதருக்கெல்லாம்' என்று பாரதி கூறுவது போலவும், ''பசியென்று வந்தால் ஒருபிடி சோறு புசியென்று தந்து பாரப்பா'' என்று பாரதிதாசன் சொல்லுவது போலவும் ''பசிப்பிணி மருத்துவர்களாய்'' மனிதன் மாறுவது அன்பின் வெளிப்பாடுதான். ஆயினும், பசியையே, ஏழ்மையையே அடியோடு ஒழித்து ''வன்மை இல்லை ஓர் வறுமை இன்மையால்'' என்ற கம்பர் கனவை நனவாக்குவது அதன் உயர்நிலையாகும்.

## *அகிம்சையும் விட்டுக் கொடுத்தலும் :*

ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதும், உதவிகள் செய்வதும் அன்பின் வெளிப்பாடுகளே. பிறரிடம் குறைகளையே கண்டு பிணங்குவது பேதமை. குறைபாடுகள் யாரிடமில்லை. குறை காண்போரிடம் இல்லையா? ''தன் முதுகு ஒரு போதும் தனக்கேதான் தெரியாது பிறரென்றால் நையாண்டி'' பேசுவது நியாயமா? ஏதிலார் குற்றம்போல் தம் குற்றம் காண்கிற்பின் தீதுமுண்டோ என்ற வள்ளுவத்தை உணர்ந்தால் 'குற்றம் பார்க்கில் சுற்றமில்லை என்ற எண்ணம் மேலோங்கும்; ஒருவரையொருவர் புரிந்து கொண்டு உதவுகின்ற உள்ளம் வளரும்.

## *அகிம்சையும் சார்ந்தொழுகலும் :*

ஒருவரையொருவர் சார்ந்து ஒருவருக்கொருவர் உதவுகின்ற பண்பாடும் அன்பும் பொதுநலம் பேணும் உணர்வு உடையாரின் செயல்பாடு ஆகும். காலத்தின் வளர்ச்சி விரைவாக மாறியுள்ளது. மனிதத் தேவைகள் குறைவாக இருந்த கால கட்டத்தில் தன் உழைப்பால் கிடைத்த பொருள்களைக் கொண்டு தன்னிறைவோடு வாழ்ந்தான். அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சி காரணமாக நாடு முன்னேறியபோது மனிதத் தேவைகள் பலமடங்கு வளரத்

தொடங்கி விட்டன. தனி மனிதன் தன் தேவைகளை நிறைவு செய்ய முடியாமல் திணறினான். அதற்கேற்ப அவனால் பொருள்களை உற்பத்தி செய்ய முடியவில்லை. மற்றவரைச் சார்ந்து நிற்க வேண்டிய கட்டாயநிலையும் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் கொடுத்து வாங்கும் பண்பாடும் இப்போதுதான் உருவாகத் தொடங்கின. தமக்காகவும் பிறருக்காகவும் மனிதர்கள் பொருள்களை உருவாக்கினர். தமக்குப் போக எஞ்சியதை மற்றவர்க்குக் கொடுத்து, அவர்களிடமிருந்து தமக்குத் தேவையானதைப் பெற்றுக் கொண்டனர். இதைத்தான் பண்டமாற்றுப் பொருளாதாரம் என்கின்றனர். இது கிராமத்திற்குக் கிராமம், மாநிலத்திற்கு மாநிலம், நாட்டிற்கு நாடு என உலகளாவிய வளர்ச்சியினைப் பெற்றது.

### *அகிம்சையும் கூட்டுறவும் :*

நிலவுடைமைச் சமுதாயம் மலர்ந்தபோது மக்கள் நிலங்களைச் சொந்தமாக்கி அவற்றில் பொருள் உற்பத்தி செய்யப் புதிய புதிய கருவிகளைக் கண்டுபிடிக்கத் தொடங்கினர். தங்களுக்குரிய வீடுகளைக் கட்டிக்கொண்டனர். இந்த நிலையில் பண்டமாற்றுப் பொருளாதாரத்தின் செயல்பாட்டில் சில தடைகள் இருப்பது அனுபவத்தால் தெளிவாகத் தெரிந்தது. எனவே அதற்குப் பதில், பணப்பொருளாதாரம் உருவெடுத்தது. இதுவே கூட்டுறவு என்னும் அமைப்பு ஏற்படத் தோற்றுவாய் ஆயிற்று. தங்கள் பொருளாதார வளர்ச்சியை மனத்திற்கொண்ட சமத்துவம் என்ற அடிப்படையில் மக்கள் தாமாகவே இணைந்து செயல்படும் அமைப்பே கூட்டுறவு ஆகும். இங்கே வேலை கொடுப்பவர் வேலைபார்ப்பவர், பொருள் உற்பத்தியாளர் பொருள் நுகர்வோருக்கிடையே முழுமையான பிணைப்பு ஏற்படுகிறது. இந்த ஒருங்கிணைப்பு மூலம், ஒருவருக்கொருவர் பயன்தரும் கொள்கைகளை வகுக்க முடிகிறது. 'தான் பிறருக்கு, பிறர் தமக்கு' என்ற உயர்ந்த கோட்பாட்டின்படி ஒவ்வொருவரும் செயல்பட வழி ஏற்படுகிறது.

### *அகிம்சையும் மன அமைதியும் :*

கட்டுப்பாடுகளின் மூலம் மனத்தை அமைதி நிலைக்குக் கொண்டுவருவது செயல்களின் வெற்றிக்குத்துணை செய்யும். ஏனெனில் ஒருவனின் எண்ணமே செயலாக உருவெடுக்கிறது. அந்த உள்ளம் உறுதியாக இருந்தால்தான். அவன் பேச்சிலும் இனிமை இருக்கும் என்பார் பாரதி. அமைதியான உள்ளத்தில் உயர்ந்த சிந்தனைகள் உருவாகும்; நல்ல செயல்களைச் செய்யும் உந்துதல் ஏற்படும். அந்த உள்ளம் உறங்காது, எப்போதும் செயல்படும் துடிப்புடன் இருக்கும். ஏனென்றால் ஒதுங்கியிருப்பதும் கோழைத்தனமும் அகிம்சை ஆகா. ஆகவே மன அமைதி, பிறர் நலம் நாடி உழைக்க உறுதுணையாக அமையும்.

எனவே அகிம்சை வேறு, அன்பு வேறு என்பதில்லை. "அன்புடையார் என்பும் உரியர்பிறர்க்கு" என்பதால் அவர்கள் அருள் உணர்வோடு தாமே முன்வந்து செயல்படுகின்றனர். அந்தச் செயல்கள் பசியும் பிணியும் போக்கும் அறங்களாக மலர்கின்றன. ஒருவர் தேவைக்கு ஒருவர் உழைக்கும் உறவாக மாறுகின்றன. இவையெல்லாம், அகிம்சை என்பதை உடன்பாட்டு நிலையாகக் கொள்வதால் உருவாகும் நடைமுறைகளாகும்.

# 3. அகிம்சைத்தத்துவம்

*முன்னுரை :*

மக்கள் பின்பற்றும் மதத்தின் முக்கியமான பகுதி தத்துவம் ஆகும். தத்துவம் என்பது இந்தியாவில் ஒரு சில தத்துவ ஞானிகளோடு நின்றுவிடவில்லை. அகிம்சை-இந்து, சமண, புத்தமதக் கோட்பாடுகளில் மிகவும் வலியுறுத்தப்பட்ட ஒன்றாகும்.

*அகிம்சை—சொல்லின் விளக்கம் :*

'இம்சை' என்னும் சொல் ஹன் என்ற சொல்லை அடியாகக் கொண்டு பிறந்ததாகும். இந்த வேர்ச்சொல்லின் பொருள் 'அழித்தல்' அல்லது 'கொல்லுதல்' என்பதாகும். அகிம்சை என்பது இம்சையின் எதிர்ச்சொல்லாகும். அகிம்சையின் பொருள் கொல்லாமை எனக்கொள்ளலாம். அதாவது எந்தவிதத் தீமையையும் விளைவிக்காத செயல்களைச் செய்தல் என்பதாகும். அதன் விரிவான பொருள் முன் கட்டுரைகளில் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

*வரலாறு :*

சாந்தோக்கிய உபநிஷத்தில், அகிம்சை, சத்தியம், அஸ்தேயம் (கள்ளாமை), பிரம்மச்சரியம், அபரிகிரகம் என்ற ஐந்து கோட்பாடுகள் கூறப்படுகின்றன. மகாபாரதத்தில் அகிம்சையே மிகப்பெரிய தர்மம் என்று கூறப்பட்டுள்ளது. சமணமதத்தில் அகிம்சை ஐந்து முக்கிய விரதங்களில் ஒன்றாகக் கடைபிடிக்கப்படுகின்றது. புத்தமதத்திலும் அகிம்சை மிகச் சிறந்த உறுதிப் பொருளாக வலியுறுத்தப்படுகின்றது.

---

1. Philosophy was an essential Part of the religion of the masses; the business of philosophy in India was not confined to a few philosophers.

- Pandit Jawaharlal Nehru

காந்தியடிகள் அகிம்சைக்குப் புத்துயிர் கொடுத்தார் எனலாம். அகிம்சை தன் வாழ்வின் ஒருபகுதியாகவே அமைந்துவிட்டதென அவரே குறிப்பிடுகின்றார். சமய நெறிகளோடு மட்டுமே தொடர்பு கொண்டிருந்த அகிம்சைக் கோட்பாட்டைக் காந்தியடிகள் சமுதாய, அரசியல், பொருளாதாரத் துறைகளிலும் பொருளுடையதாக மாற்றினார். அகிம்சை என்பது அவருக்குப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ஒருவழியாக ஆகிவிட்டது. அவரை ஒரு நடைமுறைத் தத்துவஞானி என்றே கூறிவிடலாம்.

### *தத்துவத்தின் பொருள் :*

தத்துவம் என்ற சொல்லைத் தத்+த்வம் என்று பிரித்துப் பரம்பொருளும் ஆன்மாவும் ஒன்று என்று உணர வைக்கும் சொல்லாகக் கொள்வர் சான்றோர். ஆகையால் எந்த ஒரு மார்க்கம், 'பரம் பொருளும் ஆன்மாவும் ஒன்று' என உணர வகை செய்கின்றதோ அதனைத் தத்துவம் எனல் பொருந்தும். அகிம்சை, பரம்பொருளை அடைய அதாவது சத்தியத்தைத் தேடுவதற்கு வழிவகுப்பதால் 'அகிம்சைத் தத்துவம்' என்று பேசுவது பொருளுடையதாகும். அகிம்சையே ஒரு மதம் எனச் சொல்லுவதும் சாலப்பொருந்தும். "மதம் என்பதன் பொருள் என்னைப் பொறுத்தவரை அகிம்சை சத்தியமாகும்"1 என்று காந்தியடிகள் குறிப்பிடுகின்றார்; பின்வரும் பகுதிகளில் இந்தப் பொருளில்தான் அகிம்சைத் தத்துவம் விரிவு படுத்தப்படுகின்றது.

### *அகிம்சையின் கூறுகள் :*

அகிம்சைத் தத்துவத்தை முழுவதும் உணர அதன் கூறுகளான சத்தியம், தபஸ்யம், (Self-suffering) அநாசக்தி (Non-attachment) ஆகியவற்றைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுதல் நலம்.

---

1. "To me a religion means Truth and Ahimsa".

Gandhiji - Young India 6-12-1928

*சத்தியம் :*

சத்தியத்தை விட மேலான தர்மம் ஒன்றும் கிடையாது என மகாபாரதம் கூறுகின்றது சத்தியத்தைக் கடைப்பிடிப்பதே தலையாய கடமையாகும். வேதங்கள், 'சத்தியம்பேசு, தர்மத்தின் வழிநட' என்று முழக்குகின்றன. மனுநீதி நூற்களிலும் சத்தியத்திற்கு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது. எல்லா உயிர்களும் ஒன்றே என்ற உண்மையை உணர்வதற்கு வழி சத்தியத்தைக் கடைப்பிடிப்பதாகும். காந்தியத் தத்துவத்தின் அடிப்படையே சத்தியம் என்று கூறலாம். ''கையினால் நூற்றல்'', கைத்தறி நெசவு, இந்து முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, கள்ளுண்ணாமை முதலியன உள்ளடங்கிய நிர்மாணத்திட்டங்கள் அனைத்தும் சத்தியத்தை உணர்வதற்கு உரிய வழிகள் ஆகும்'' என்று காந்தியடிகள் ''ஹரிஜன்'' பத்திரிகையில் எழுதியுள்ளார்.

சத்தியம் என்ற சொல் 'சத்' என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டு பிறந்ததாகும். இதன்பொருள் 'நிலைத்திருத்தல்' என்பதாகும். பரம்பொருளைத் தவிர மற்ற எதுவும் நிலைத்திருப்பதில்லை. ஆதலால் சத்தியமே பரம்பொருள் எனக் கூறலாம். ''சத்'' அல்லது சத்தியம் என்பதே பரம் பொருளைக் குறித்தற்குரிய முழுவதும் சரியான சொல்லாகும்''[2] என்று காந்தியடிகள் கூறுகின்றார். சத்தியத்தை அடைய அன்புப் பாதையே சரியான வழியாகும். நான் ''கடவுளை நேரடியாகப் பார்க்க விரும்புகிறேன். சத்தியமே கடவுள் என்பது எனக்குத்தெரியும். என்னைப் பொறுத்தவரை கடவுளைத் தெரிந்து கொள்வதற்கு உரிய உறுதியான வழி அகிம்சை, அன்பு வழியாகும்'' எனக் காந்தியடிகள் 'யங் இந்தியா'வில் எழுதியுள்ளார். சத்தியத்தின் வழி பிறந்தனவே சான்றாண்மை, ஒருமைப்பாடு ஆகிய பண்புகள்.

---

2. "It will be realised that Sat, or "Satya' is the only correct and fully significant name for God" Gandhiji, Young India, 30-7-1931

### *அகிம்சையும் சத்தியமும்:*

அகிம்சையும் சத்தியமும் பிரிக்க முடியாத இரு கோட்பாடுகளாகும். அகிம்சையினின்று விலகிச் சத்தியத்தை அடைய முடியாது. "அகிம்சையே வழி, சத்தியமே முடிவு"[3] என்று காந்தியடிகள் கூறுகின்றார்.

### *தபஸ்யம்:*

'தபஸ்' என்ற சொல்லின் முதற்பொருள் வெப்பம் என்பதாகும். புலனுணர்வை அடக்கி, ஆன்ம சக்தியை வளர்த்து, உடற்சிறையில் அடைப்பட்டிருக்கும் ஆன்மாவை விடுவிக்கும் வழியே தபஸ்யம் ஆகும். இக்கோட்பாடு முற்காலத்திலிருந்தே வலியுறுத்தப்பட்டு வருகின்றது. சமண மதத்தில் உடலைவருத்தி வீடுபேறு அடைதல் உணர்த்தப்படுகின்றது. சுயராஜ்யம் என்பதன் பொருள் உள்ளத்தை அடக்கி ஒரு நிலைப்படுத்துதல் என உபநிஷத்தில் கூறப்படுகின்றது. அதற்குத் தவம் செய்தல் வழியாகும். அரசியல் துறையில் சுயராஜ்யம் என்பது விடுதலையைக் குறிப்பதால் தபஸ்யம் என்பதும் புதுப்பொருளைப் பெறுகின்றது. அதாவது வலிய வருந்தி மாற்றானுடைய மதிப்பைப் பெறுதலேயாகும். அதன் வழி விடுதலையும் பெறலாம்.

### *அகிம்சையும் தபஸ்யமும்:*

செயல் நிலையில் அகிம்சையின் பொருள் துன்பத்தை விரும்பி ஏற்றலாகும். ஆனால் கோழைத்தனமாக அடிபணிந்து விடுவது அதன் பொருளன்று. எதிரியின் மன உறுதிக்கு முழுஆன்ம சக்தியையும் பயன்படுத்தி எதிரியின் நிலையை மாற்றுவதே அதன்பொருளாகும். 'அகிம்சை, தபஸ்யம் ஆகியவற்றின் வழி நின்று மிகப் பெரிய அநீதியின் சாம்ராஜ்யத்தையும் தனி மனிதனாக நின்று எதிர்க்கலாம்' என்று காந்தியடிகள் கூறுகின்றார். "அன்பு எதையும் கேட்டுப்

---

3 "Ahimsa is the means and Truth is the end"

பெறுவதில்லை. விட்டுக்கொடுப்பதற்கே தயாராக உள்ளது. அன்பின் வழியில் நிற்பவன் துன்பத்தை விரும்பி ஏற்றுக்கொள்கிறான்; பழிவாங்குவதில்லை''1. ''அன்பின் சோதனையே தபஸ்யம் ஆகும். தபஸ்யத்தின் பொருள், தானே வலிந்து துன்பத்தை ஏற்பதாகும்.''2

துன்பத்தை ஏற்றுக்கொள்ளுதல் கோழையின் ஆயுதமன்று. துன்பத்தை ஒருவன் வலிந்து ஏற்பதால் அவனுடைய உடலுக்கு ஊறு ஏற்படுகின்றதே; ஆகவே அது இம்சையாகாதா எனில், இல்லை. அவ்வாறு தாங்கிக் கொள்ளும் துன்பம் பல்லாயிரம் உயிர்களை வாழவைப்பதால் அஃது அகிம்சையின் பாற்பட்டதாகும். துன்பத்தை ஏற்பதை வேறு வழியில்லையே என்று கொள்வதைவிட, அத்துன்பத்தை ஏற்பதை ஆக்க பூர்வமான கொள்கையாகக் கொள்வதே தபஸ்யமாகும். இறப்பதற்கு அஞ்சுபவனிடம் அகிம்சையைப் போதிக்க முடியாது என்று காந்தியடிகள் கூறுகின்றார். அகிம்சைக்கு அகப்பொருளாக அன்பு, நல்லெண்ணம் ஆகியவற்றைக் கொள்வதைப் போன்று தப்ஸ்யத்தின் விளைவு அஞ்சாமை எனலாம்.

***அனாசக்தி* (Non-attachment) :**

நல்லசெயல்கள் நல்ல விளைவைத் தருகின்றன, தீயவை தீமைபயப்பன. ஆகவே 'பொதுமக்கட்குச் சேவைசெய்தல் கர்மத்திலிருந்து விடுபடுதற்குரிய வழியாகும்' என உபநிஷத்துக்கள் கூறுகின்றன. 'நான் கர்மவிதியில் மிக்க நம்பிக்கை வைத்துள்ளேன்' என்று யங் இந்தியாவில் காந்தியடிகள் கூறுகின்றார். பலன்களைக் கருதாது, செயல்களைச் செய்வதே கீதையில் வலியுறுத்தப்படுகின்றது.

---

1. "Love never claims; it ever gives; Love ever suffers; never revenges itself". - Young India 9-2-1925

2. The test of love is 'Tapasya' and Tapasya means self-suffering - Young India 12-6-1922

கர்மத்திலிருந்து விடுபடுவதற்குப் பலன்களை எதிர்பாராது செயல்களைச் செய்யும் முறையே சிறந்தவழியாகும். கர்மயோகத்தின் சிறந்த அம்சம் அநாசக்தியாகும். அதாவது செயல்களின் பயனைக் கருதாது செயலாற்றுவதாகும். ''பலன்களின் மேல் ஆசை வைக்காது செயல் புரிபவனுக்கு இம்சை அல்லது அசத்தியத்தில் இச்சை இருக்காது. எந்த ஒரு இம்சைச் செயலையும், அசத்தியச் செயலையும் எடுத்துக்கொண்டாலும் அவற்றின் புறத்தே பலனை எதிர்பார்க்கும் ஆசை இருப்பதைக் காணலாம்''1 என்று காந்தியடிகள் கூறுகின்றார்.

### *அகிம்சையும் தனிமனிதனும் :*

தனிமனிதனுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்காமல் சமுதாயத்திற்கும் பிற நிறுவனங்கட்கும் முக்கியத்துவம் கொடுப்பதை மறுத்துத் தனிமனிதனுக்குக் காந்தியடிகள் முதன்மை தருவதோடு அவனுடைய விருப்பத்திற்கு எதிராகச் செயல்பட வைக்கும் எந்தச் சக்தியையும் அவர் விரும்பவில்லை. தனி மனிதன் இல்லாவிடில் சமுதாயம் ஏது? தனிமனிதனுக்குச் சுதந்திரம் அளித்தால், அவன் தானாகவே சமுதாய சேவை செய்வதில் ஈடுபடுகின்றான். அது அவனுக்கு மறுக்கப்பட்டால், சமுதாயத்தை அழிக்கும் கருவியாக அவன் மாறிவிடுகின்றான். தனி மனித சுதந்திரத்தை மறுத்து எந்தவித சமுதாயத்தையும் அமைத்துவிட முடியாது என ஹரிஜன் பத்திரிகையில் காந்தியடிகள் எழுதியுள்ளார். ஆனால் சமுதாய அமைப்புகட்கு அவர் முக்கியத்துவம் அளிக்கவில்லை எனக் கருதக்கூடாது. ''குண்டர்கள் ஆகாயத்திலிருந்து குதிப்பதில்லை; மோசமான அரசியல் சூழ்நிலையின் அடையாளங்கள்தான் அவர்கள்'' என்று காந்தியடிகள்

---

1. When there is no desire for fruit; there is no temptation for untruth or himsa, Take an instance of truth or violence and it will be found that its back is the desire attain the cherished end.

"The Gospel of selfless Action or Gita according to Gandhi"

கூறுகின்றார். அகிம்சையைக் கடைப்பிடிப்பதால் தனிமனிதன் சத்தியத்தைத் தேடும் முயற்சியில் ஈடுபடுகின்றான். அவன் சார்ந்திருக்கும் சமுதாயத்தையும் சீர்திருத்தித் தான் மட்டும் வீடு பேறு அடையவேண்டுமென்று எண்ணாமல் உலகத்திலுள்ள அனைவரும் பரம்பொருளைக் காணும் நிலையை அடைய வேண்டும் என விரும்புகின்றான் முற்காலத்தில் தத்துவங்கள் அனைத்தும் தனிமனிதன் வீடு பேறு அடைவதற்கே வழி வகுத்தன. ஆனால் காந்தியடிகள் கொடுத்த அகிம்சைத் தத்துவம் உலக சமுதாயமே வீடுபேறு அடைவதற்கு வழி வகுக்கின்றது.

### *அகிம்சை ஒரு நடைமுறைத் தத்துவம்:*

"நடைமுறைப் பிரச்சினைகளைக் கருதாமல், அவற்றைத் தீர்ப்பதற்கு எந்த வழியும் கூறாமல் இருக்கும் எந்த ஒரு மதத்தையும் மதம் எனல் பொருந்தாது"2 என்பது காந்தியடிகளின் கருத்து. இந்த வகையில் அகிம்சைத் தத்துவம் நடை முறைப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குச் சிறந்த வழி வகுத்து 'அகிம்சை மதம்' எனக் கூறுமாறு அமைகிறது அகிம்சையின் அடிப்படையில் பிறந்த கருவியே சத்தியாக்கிரகமாகும். சத்தியாக்கிரகத்தையும், அதன் வழிகளையும் பற்றி முன்னரே கூறியுள்ளோம்.

### *மார்க்ஸியமும் அகிம்சை தத்துவமும்:*

மார்க்ஸியத்தில் பிரச்சினை என்பது வர்க்க போராட்டமாகும். இதை அடிப்படையாகக் கொண்டுதான் அத்தத்துவம் அமைக்கப்படுகிறது. ஆனால் அகிம்சைத் தத்துவத்தை எந்த ஒரு பிரச்சினையிலும் வெற்றிகரமாகக் கையாளலாம். இந்தியரல்லாதாரும் கடைப்பிடித்து வெற்றி

---

1. Non voilence in peace and War. Page, 390-01

2. "Religion that takes no count of practical affairs and does not hely to solve them is no religion" _ Gandhiji - Young India, 7-5-25

காணலாம். மார்க்ஸியத் தத்துவத்தில் அமைப்புகட்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. தனிமனிதனுக்கு மிகுந்த இடம் இல்லை. ஆனால் அகிம்சை தத்துவத்தில் தனிமனிதனுக்கு முதன்மை இடம் உண்டு சுருங்கக் கூறின் காந்திய சத்தியாக்கிரகத்தில், தனிமனிதனின் பகுத்தறிவிற்கு மிகுந்த இடம் தரப்படுகின்றது. எதிரியும் அறிவுடை மனிதன்தான் என்று கருதிச் செயல்படுவதால் இருசாரார்க்கும் திருப்தியளிக்கக் கூடிய முடிவு கிடைக்கின்றது. மார்க்ஸியப் போராட்டத்தில் இருக்கும் அழிவு இங்கில்லை. மேலும் காந்திய சத்தியாக்கிரகத்தில் வழிகள் தாம் வளர்க்கப் படுகின்றன. முடிவைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால் வர்க்க மற்ற சமுதாய அமைப்பு என்னும் முடிவைக் கொண்டுள்ள மார்க்ஸியத்தில் முடிவு மட்டுமே முக்கியம். வழிமுறை பற்றிக்கவலை இல்லை என்ற போக்குக் காணப்படுகிறது.

*வழிகளும் முடிவும் :*

வழிகள் பற்றியும் முடிவு பற்றியும் காந்தியடிகள் மிகுதியாகக் கூறியுள்ளார். ஒவ்வொருமுறையும் வழிகட்கே அதிக முக்கியத்துவம் அளித்துள்ளார். சாதாரணமாக நாம் ஒவ்வொருவரும் முடிவைக் கருத்தில் கொண்டுதான் சிந்திக்கிறோம்; . வழிகளைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. இதனால் விரும்பிய முடிவும் கிடைப்பதில்லை. பிரச்சினையும் தீர்வதில்லை, புதியபல பிரச்சினைகள் அரும்புகின்றன. இம்சையின் மூலமும் போரின் மூலமும் பிரச்சினையைத் தீர்த்துவிடலாம் என்பதில் பலர் தவறான நம்பிக்கை வைத்துள்ளனர். இதற்கு மாறாகப் புதிய வழியொன்றைக் காந்தியடிகள் காண்பித்தார். காண்பித்ததோடு நிற்காமல், அதன் வழிநடந்து சாதனைகள் பல புரிந்தார். இந்தப் புதிய வழிதான் சத்தியாக்கிரகமாகும்.

சத்தியம் என்பது முடிவாகும். அதற்கு வழி அகிம்சையாகும். ஆனால் முழுமைபெற்ற அகிம்சையே

சத்தியமாகும். ஆதலால் அகிம்சையே முதலாகவும் முடிவாகவும் ஆகின்றது. கட்டாயமான கொள்கையாகக் காந்தியடிகள் யாதேனும் கூறியுள்ளார் என்றால் அதுவே முடிவைப் பற்றி எண்ணாமல், வழிகளைப் பின்பற்றுக என்பதாகும். 'ஓர் அரசியல்வாதியின் முதல் தேவை, உயர்ந்த முடிவு அன்று; திட்டவட்டமான ஆக்கபூர்வமான வழிகளேயாகும்' என ஸ்பெங்லர் (Spengler) என்பார் கூறுகின்றார்.

மார்க்ஸியம் அல்லது பாஸிஸத் தத்துவங்களில் முடிவு நிர்ணயிக்கப்பட்டு, இம்சையும் வழிகளாகக் கொள்ளப்படுகின்றன. நிர்ணயிக்கப்பட்ட முடிவைக் கொண்டு செயல்படுவதில் உள்ள தீமையை 'டீவே' (Dewey) என்பவர் விளக்கியுள்ளார். பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கமைந்த ஆக்கபூர்வமான தத்துவமே அகிம்சைத் தத்துவம் என்பதில் ஐயமில்லை.

*முடிவுரை:*

மதங்களில் கூறப்படும் கோட்பாடுகட்குக் காந்தியடிகள் புதிய விளக்கங்கள் கொடுத்தார். தனிமனித வீடு பேற்றிற்கு மட்டும் பயன்படுத்தப்பட்ட உறுதிப்பாடுகள், சமுதாயச் சீர்திருத்தத்திற்கும், அரசியல் முன்னேற்றத்திற்கும் பயன்படுத்தப்பட்டன. 'துறவு மனப்பான்மையும், தவமும் சமுதாயத்திலிருந்து விலகி வனத்தில் வாழ்பவர்க்கு அல்ல, சமுதாயத்திற்கலந்து சமுதாய உயர்வுக்குப் பாடுபடுவோர்க்கும் உரியது' என்று காந்தியடிகள் வாழ்ந்து காட்டி உணர்த்தினார். இந்த வகையில் அகிம்சை, தபஸ்யம், அனாசக்தி ஆகியவற்றிற்குப் புதிய பொருள் கொடுத்து, அகிம்சைத் தத்துவம் என்ற புதிய தத்துவம் உருவாகுவதற்கு வழிவகுத்தார். சத்தியமே கடவுளாகும்; அகிம்சையே அதனுடைய வழியாகும்

# 4. அகிம்சை வழியில் சத்தியாக்கிரகமும் நிர்மாணத் திட்டப் பணிகளும்

*இரண்டு செயல்பாடுகள் :*

சமுதாயக் கட்டமைப்பில் ஹிம்சைச் செயல்கள் முற்றிலும் மறையவில்லை. சில செயல்களைத் தவிர்ப்பதும் அரிதாக இருக்கிறது. உணவுக்காகப் பிறவிலங்குகளையும் பறவைகளையும் கொல்லுவது தடையின்றி நடக்கிறது. சிலர் குறைந்த நேரம் வேலை செய்து நிறைந்த இன்பம் பெறுகின்றனர். நாளெல்லாம் உழைத்தும் வறுமையில் வாடிமடிகின்றனர். பலர் கொடுமை செய்வதும் சித்திரவதை செய்வதும் குறைந்தபாடில்லை. சமத்துவமின்மை, அநீதி, வெறுப்புணர்வு, பூசல், பதற்ற நிலை, குழப்பம், சுரண்டல் ஆகிய இம்சைகள் தொடர்ந்து கொண்டே இருக்கின்றன. இத்தகைய கொடிய நிலைகள் மனித வாழ்க்கையில் இயற்கையாகவே அமைந்தவையோ என்று சிந்திக்க வேண்டியதுள்ளது. அகிம்சைக் கோட்பாட்டிற்குப் புறம்பான இந்த இம்சைச் செயல்களை எவ்வாறு போக்குவது? இப்போது இருக்கின்ற சமுதாயக் கட்டமைப்பை மாற்றுவது, புதிய உலகைச் சமைப்பது என்ற இரண்டு செயல்பாடுகளையும் நாட்டுக்குத் தந்தவர் அண்ணல் காந்தி. அகிம்சை வழியில் அமைந்த அந்தச் செயல்பாடுகளுக்கு அவர் தந்த பெயர்களே சத்தியாக்கிரகம், நிர்மாணத்திட்டப் பணிகள் ஆகும். இவற்றை உருவாக்கியதோடு தம் வாழ்நாளில் செயல்படுத்தி வெற்றி கண்ட பெருமையும் அவருக்கு உண்டு. இரண்டும் ஒன்றையொன்று சார்ந்து நிற்கும் செயல்களே என்பது அவர் கருத்து.

### இரண்டும் ஒன்றே :

அகிம்சைக் கோட்பாட்டைச் செயலாக்கிக் காட்டும் அமைப்பே சத்தியாக்கிரகம் என்பது. எனவே இது அகிம்சையின் இயங்கு நிலைக்கு எடுத்துக் காட்டு ஆகும். இங்கே அகிம்சைக்கும் சத்தியத்திற்குமுள்ள தொடர்பினை எண்ணிப் பார்க்க வேண்டும். சத்தியம் என்பதைக் கடவுளாகவே கொண்டார் அண்ணல் காந்தி. அதனை அடைவதற்கான வழியாகத் தான் அகிம்சையைப் பயன்படுத்தினார். இறைவன் என்ற எல்லையற்ற முடிவை அன்பு என்னும் அகிம்சைவழியில் காண்பதைப் பொருத்தமாகவே கருதினார். அவருடைய சத்தியத் தேட்டத்தில் கிடைத்த அகிம்சையை அதனோடு இணைத்து ஒன்றிலிருந்து ஒன்றை வேறுபடுத்தாமல் சத்தியாக்கிரகம் என்னும் செயல்பாட்டு நெறியை உருவாக்கினார்.

### இரண்டின் பிணைப்பு :

அண்ணல் காந்தியின் இதயம் அன்பாலும் கருணையாலும் நிறைந்தது. தென்னாப்பிரிக்காவிலும் இந்தியாவிலும் அவர் வாழ்ந்த காலத்தில் அநீதிகளை எதிர்த்து அகிம்சைப்போர் நடத்த அவர் பின் வாங்கியதில்லை. ஒரு தனிமனிதனோ நிறுவனமோ நடத்தும் அநீதிகளின் கீழிருந்து அவதிப்படுவதை அவர் பாவச் செயல் என்று கருதினார். எனவே தன்னிகரற்ற அன்பையும், தீமைகளை ஒழிப்பதற்கான ஒப்பற்ற எதிர்ப்பையும் ஒன்றோடொன்றாய்ப் பிணைத்தார். ''தீமை செய்தவனைப் பழிவாங்கத் தீமையையே செய்தால் மேலும் மேலும் தீமைகளே வளரும்; ஆனால் அதனை விடுத்து கொடுமைகளை எதிர்த்து அகிம்சை வழியாகப் போராடினால் அதுவே ஆற்றல் வாய்ந்த, உண்மையான போராக அமையும்'' என்பது அவர் கருத்து.

## *சாத்வீக எதிர்ப்பு சரியா?*

தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்தியருக்கு எதிராகவுள்ள கொடுமைகளை அகிம்சை வழியில் போர் நடத்தும் இயக்கத்திற்கு அண்ணல் காந்தி வைத்த பெயர் தான் சத்தியாக்கிரகம். இதுவே அவர் இந்திய நாட்டிற்கு விட்டுச் சென்ற ஆற்றல் மிக்க நினைவுச் சின்னமாகும். 'சாத்வீக எதிர்ப்பு' என்று ஏற்கனவே இருந்த அமைப்பிற்கு மாற்றான இயக்கமாகவே சத்தியாக்கிரகத்தைக் கண்டுபிடித்தார். சாத்வீக எதிர்ப்பில் அன்பிற்கு இடமில்லை. ஆனால் சத்தியாக்கிரகத்தில் வெறுப்புணர்ச்சிக்கு இடமில்லை. தகுந்த வேளை ஏற்பட்டால், ஆயுதங்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதைச் சாத்வீக எதிர்ப்பு ஆதரிக்கிறது. ஆனால் வாய்ப்புள்ள நேரத்தில் கூட வன்முறையில் ஈடுபடுவதைச் சத்தியாக்கிரகம் விலக்குகிறது. எனென்றால் வன்முறை என்பது மிருக பலம். இந்தப் பலமும் சத்தியாக்கிரகமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை. அன்பர்கள் விரோதிகளானால் மட்டுமே சாத்வீக எதிர்ப்புக்குச் சாத்தியம் உண்டு. ஆனால் உற்ற உறவினரிடத்தும் உழுவலன் பரிடத்தும் சத்தியாக்கிரகம் செய்யலாம். எதிரிகளுக்குத் துன்பம் இழைப்பதும், அதனால் ஏற்படும் இழப்புகளைத் தாங்கிக் கொள்வதும் சாத்வீக எதிர்ப்பாளியிடம் காணப்படுகின்ற செயல். ஆனால், சத்தியாக்கிரகிகளுக்குப் பகைவர்களுக்குத் துன்பம் செய்ய வேண்டும் என்ற எண்ணமே இல்லை. தம்மையே துன்பங்களுக்கு உட்படுத்தி எதிரியை வெல்லுவதற்குச் சத்தியாக்கிரகியும் தயாராகின்றான். எனவே அண்ணல் காந்தி கண்ட சத்தியாக்கிரகம் சாத்வீக எதிர்ப்பைப்போல் கோழையின் ஆயுதமன்று, வீரனின் கூர்வாள்.

### *பின்னணி :*

சாத்வீக எதிர்ப்பு என்ற பெயரில் பல இடங்களில் நடைபெற்ற போராட்டங்களில் வன்முறை கையாளப்

பெற்றதை அறிந்ததாலும், அகிம்சை வழியே அனைத்திற்கும் மேலானது என்பதைக் குஜராத் கவிஞர் சாமல் பட்டின் பாடல், பைபிளின் மலைப்பிரசங்கம், பகவத் கீதை, டால்ஸ்டாயின் நூல்கள் ஆகியவற்றின் மூலமாகத் தெளிந்தமையாலும் அன்பு, உண்மை, ஆற்றல் அனைத்தையும் உள்ளடக்கிய சத்தியாக்கிரக இயக்கத்தை உருவாக்குவதில் அண்ணல் காந்தி வெற்றி கண்டார். இதன் கொள்கைகளும் நடைமுறைகளும் அடுத்து வரும் காலக் கட்டங்களில் உருவாகிவிடும் என்பதில் நம்பிக்கை கொண்டார். ஏனென்றால் 'கொள்கை என்பது அவரைப் பொறுத்த வரையில் செயல் முறைகளின் பணியாளாக அமைந்திருந்தது'.

### *மூன்று கூறுகள் :*

சத்தியத்தை உறுதியுடன் பற்றிக்கொள்வது என்பது சத்தியாக்கிரகம் என்ற சொல்லின் பொருளாக இருந்தாலும், அதனை 'ஆன்ம பலம்' என்றே அண்ணல் காந்தி அழைத்தார். அநீதிகளைப் போக்குவதற்காக இணங்க வைத்தல் போன்ற பிற முயற்சிகளும் பலனளிக்காமல் போன பிறகுதான், தம்முடைய கடைசி ஆயுதமாக அதனைப் பயன்படுத்தினார். 'சத்தியம்', 'அகிம்சை', 'தன்னையே வருத்துதல்', ஆகியனவே சத்தியாக்கிரகத்தில் அடங்கியுள்ள கூறுகள். ஒழுக்கம் தழுவிய மனிதாபிமான உணர்வைச் 'சத்தியம்' வளர்க்கிறது. சமுதாயத்திற்குத் தொண்டு செய்யும் உணர்வை 'அகிம்சை' தூண்டுகின்றது. சாவே என்றாலும் தயங்காமல் ஏற்றுக்கொள்ளும் தியாகவுணர்வை வளர்த்துக் கொள்வதை உள்ளடக்கியதே 'தன்னையே வருத்துதல்' என்னும் பகுதி.

அகிம்சை நெறியில் அண்ணல் காந்தி கொண்ட ஆழ்ந்த நம்பிக்கையைச் சத்தியாக்கிரகம் நிலைநாட்டுகிறது. மக்களுக்குக் கற்பிக்கவும், அறிவூட்டவும் மிக முக்கியமான வழிமுறையாக அதனைக் கொண்டார். பகைவர் அல்லது தவறு செய்வோரின் மனங்களை மாற்றுவதே ஒரு சத்தியாக்கிரகியின் தலையாய கொள்கையாதலின், பலாத்காரம், கட்டாயப்படுத்துதல் ஆகியவற்றிற்குச்

சத்தியாக்கிரகத்தில் இடமில்லை என்பது அவர் கருத்து. சத்தியாக்கிரகமும் ஒரு போர்தான். ஆனால் போரில் காணப்படும் இழிசெயல்கள் இதில் இருக்கா. சமுதாய, பொருளியல், அரசியல் துறைகளில் ஏற்படும். கொடுமைகளைத் தீர்க்க அண்ணல் காந்தி கண்ட அற்புத வழியே சத்தியாக்கிரகம். அதனைத் தம்முடைய தனி வாழ்க்கையில் சோதித்துப் பார்த்துப் பொது வாழ்விற்கு விரிவுபடுத்தினார்.

***வாழ்க்கை முழுவதற்கும் :***

அன்பு, அறம், சத்தியம், அகிம்சை ஆகிய முன்னோர் பேணிய பண்புகளைச் சத்தியாக்கிரகத்தில் இணைத்து மனித வாழ்க்கையின் எல்லாத்துறைகளிலும் அண்ணல் காந்தி அதனைக் கையாண்டார். தனிப்பட்டவர் மட்டுமன்றி, மனித இனம் முழுவதும் அதனைச் செயல்படுத்த முடியும் என்றார். சமயத் துறைக்கு மட்டுமே முன்னோர் பயன்படுத்தி வந்த நெறியை, மனித வாழ்க்கையின் அன்றாட நடவடிக்கைகளுக்கும் விரிவு படுத்தினார். இவ்வகையில் சத்தியாக்கிரகம் என்பது வாழ்க்கை முழுவதற்கும் சத்தியத்தையும் அகிம்சையையும் எவ்வாறு பயன்படுத்துவது என்பதற்கு வழி காட்டுகிறது; கொடுமைகளையும் அநீதிகளையும் எதிர்க்கிறது. எல்லா வகையான கொடுமை களுக்கும் எதிராக முழு ஆற்றலோடு போராடுவதற்கு மனிதனின் தன்னம்பிக்கையைத் தூண்டும் கருவியாகிறது. நடைமுறைச் சாத்தியம் உடையதே சத்தியாக்கிரகம். வன்முறைச் செயல்களுக்கு மட்டுமன்று, போருக்குமே அது மாற்று வழியாகும். எனவேதான், ஹார்ஸ்பர்க் போன்ற மேலை நாட்டுச் சிந்தனையாளர்கள், சத்தியாக்கிரகத்தைப் "போருக்கு நிகரான ஓர் அறவழி" என்று குறிப்பிட்டுள்ளனர்.

***எல்லோரும் சமம் :***

மனிதர்க்கிடையே அமைய வேண்டிய சகோதரத்துவ உணர்வையே சத்தியாக்கிரகம் நம்புகிறது. "வலிமை

யுடையோரே வாழ்வர்'' என்ற கோட்பாட்டை அது புறக்கணிக்கிறது. ''எல்லோரும் சேர்ந்து எல்லாரையும் எதிர்த்துப் போரிடுவது'' என்ற கொள்கையையும் அது ஏற்பதில்லை. அன்பு ஒருவரையொருவர் சார்ந்திருத்தல், கூட்டுறவு ஆகியவற்றிலேயே அது நம்பிக்கை கொள்கிறது. மேலும், ''எல்லாருடைய வாழ்க்கையும் ஒரே மதிப்புடையன'' என்ற வேத காலக் கோட்பாட்டையோ, ''நாம் அனைவரும் ஒரு குடும்பத்து உறுப்பினர்'' என்ற கிறிஸ்துவக் கோட்பாட்டையோ அது முற்றிலுமாக ஏற்கின்றது என்று கொள்ளலாம்.

### *வழியும் முடிவும் :*

அகிம்சையையும் சத்தியத்தையும் அடிப்படையாகக் கொண்ட சத்தியாக்கிரகம், ஒரு நேரடி நடவடிக்கையாகும். அகிம்சையின் செயல்பாட்டு நிலைக்குச் சான்றாகவும் அஃது அமையும். இதனை எவ்வாறெல்லாம் செய்வது என்பதற்கு அண்ணல் காந்தியும், சில அறிஞர்களும் அருமையான வழிமுறைகளைத் தந்துள்ளனர். எல்லாமே தூய்மையான வழிமுறைகள். ஏனென்றால், ஒருவர் அடையப் போகும் லட்சியத்திற்கும், அதற்குப் பயன்படுத்தும் வழிமுறைக்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டுமென அண்ணல் காந்தி கருதினார். நல்ல முடிவுகள் ஏற்பட அடிப்படை ஆதாரமாக அமைவது நல்ல வழிமுறைகள் அல்லாமல் வேறில்லை. முடிவுகள் ஒருவனின் கட்டுப்பாட்டை மீறிப்போனாலும், வழிமுறைகளில் அவன் கவனம் செலுத்தித் தன் கட்டுப் பாட்டுக்குள் வைத்திருந்தால் அவை முடிவுகளை நெறிப்படுத்தி விடும். தவறான வழிமுறைகளைக் கொண்டு சரியான முடிவுகளைப் பெறலாம் என்பது முடியாத ஒன்றாகும். எனவே வழிமுறைகளும் முடிவுகளும் தூய்மையும் அறமும் சார்ந்தவைகளாக அமைய வேண்டும். லட்சியத்தை அல்லது குறிக்கோளை அடைய வேண்டும் என்பதற்காக அறநெறி சார்ந்த அல்லது அகிம்சையின் பாற்பட்ட வழிமுறைகளை

எப்போதும் அண்ணல் காந்தி விட்டுக் கொடுத்ததில்லை. முடிவைப் பற்றிக் கவலைப்பட்டால் போதும். ஏனென்றால் அது வழிமுறையை நியாயமென்று மெய்ப்பித்துவிடும் என்ற பொதுவுடைமை இயக்கக் கோட்பாட்டை அவர் மறுதலிக்கிறார். அரசியல் சூழ்நிலை சீராக இருப்பதே ஒருவரின் வளர்ச்சி என்பதை அவர் உணர்ந்தே இருந்தார். ஆனால், கைக்குக் கிட்டிய வழிமுறைகளைப் பயன்படுத்தி அரசியலில் மாற்றம் ஏற்படுத்த அவர் அனுமதித்ததே இல்லை. தூய்மையான வழிமுறைகளைப் பயன்படுத்தி, அரசியல் துறையில் புரட்சிகரமான மாற்றத்தை ஏற்படுத்தியது அவருடைய சாதனையாகும். எந்தச் சக்தியாலும் பிரிக்க முடியாத ஓர் உயிர் இணைப்பை அவர் வழிமுறைகளுக்கும் முடிவுகளுக்கும் இடையே ஏற்படுத்தினார். வழிமுறைகள் தூயனவாக இருந்தால் முடிவுகளும் வெற்றியாக முடியும் என்பது அவர் உலகிற்குத் தந்த ஒப்பற்ற கருத்தாகும். அவர் வகுத்துத் தந்த பதினொரு விரதங்களும் சிறந்த வழிமுறைகளே.

இனித் தூய வழிமுறையாக அமைந்துள்ள சத்தியாக்கிரகத்தின் நடைமுறைப் பிரிவுகளையும், செயல்பாட்டையும் எண்ணிப் பார்க்கலாம்.

### *அலசி ஆய்தல் :*

ஒரு சத்தியாக்கிரகத்தின் அடிப்படைச் சிக்கல்களை அலசி ஆய்தல் வேண்டும். நடுவு நிலைமையோடு முடிவெடுக்க இந்தச் செயல் உதவும். சம்பராண், கேடா, அகமதாபாத் ஆகிய இடங்களில் நடந்த சத்தியாக்கிரகங்களில், உண்மை நிலையை அறிய அண்ணல் காந்தி மேற்கொண்ட முயற்சிகளை இதற்குச் சான்றாகக் காட்டலாம்

### *பேச்சு வார்த்தையும் நடுவர் தீர்ப்பும் :*

பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கும் நல்லெண்ண நடவடிக்கையாக இஃது அமையும் தெளிவாகப் புரிந்து

கொள்ளவும், ஒருவர்க் கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பாங்கை வளர்க்கவும் இஃது உதவும். எதிர் நிலையில் உள்ளோரின் கருத்துக்களைக் கவனமாகக் கேட்க வேண்டும். அவர்கள் பக்கம் நீதியில்லை என்பதைப் பக்குவமாக உணர்த்த வேண்டும். பழிவாங்கும் உணர்வோ, காழ்ப்புணர்வோ கூடாது. தேவையேற்பட்டால், இருசாராரும் ஏற்றுக்கொள்கின்ற நடுவர் தீர்ப்புக்கும் விட்டுவிடலாம். அகமதாபாத் ஆலைத் தொழிலாளர் போராட்டம், ராஜ்கோட் சத்தியாக்கிரகம் ஆகியவற்றில் இந்த முறை கையாளப்பெற்றது.

### *கிளர்ச்சி :*

பேச்சு வார்த்தை தோல்வியில் முடிந்தால் அடுத்த நடவடிக்கையாக இதனை மேற்கொள்ளலாம். பிரச்சினையால் பாதிக்கப்பட்டோர் உணர்ந்து கொள்ளும் வகையில், அவற்றை விளக்கித் துண்டுப் பிரசுரங்கள், கட்டுரைகள், நூல்கள் வாயிலாக வெளியிடலாம். பொதுக் கூட்டங்கள், குழுநிலைக் கூட்டங்கள், மாநாடுகள் ஏற்பாடு செய்து விளக்கலாம். விவாதங்கள், கருத்துப் பரிமாற்றங்கள் மூலமும் தெளிவுபடுத்தலாம். பத்திரிகை போன்ற தகவல் சாதனங்களைப் பயன் படுத்தலாம். பேரணிகள் நடத்தி விளம்பரப்படுத்தலாம். தென்னாப்பிரிக்காவில் நடத்திய சத்தியாக்கிரகத்தில் இந்த நடைமுறைகளில் பலவற்றை அண்ணல் காந்தி பயன்படுத்தினார். இந்த நடவடிக்கைகள் மூலம் தன் நிலையை மறு பரிசீலனை செய்துகொள்ளும் வாய்ப்பு எதிராளிக்கு ஏற்படுகின்றது. கிளர்ச்சியில் ஈடுபடும் சத்தியாக்கிரகிகளுக்கு ஆதிக்கவாசிகளின் அச்சுறுத்தலும் தொல்லைகளும் ஏற்பட வாய்ப்புண்டு.

### *ஆர்ப்பாட்டமும் இறுதி எச்சரிக்கையும் :*

பிரச்சினைகள் உள்ள இடங்கள் முன்போ, அதிகாரம் உள்ள இடங்கள் முன்போ கூடி ஆர்ப்பாட்டம் நடத்தலாம். அட்டை அணிந்தோ குரல்கள் எழுப்பியோ கோரிக்கைகளை

வெளிப்படுத்தலாம். ஒரே வகையான உடை அணிந்திருந்து திரண்டு நின்று செயல்பட்டால் சிறப்பு. ஆர்ப்பாட்டத்திற்கு முன்பாக நீண்ட ஊர்வலம் நடத்தி முழக்கங்கள் மூலமோ பாடல்கள் வழியோ பொதுமக்களுக்கு நிலைமைகளை விளக்கலாம். முடிவு கிடைக்கவில்லை என்றால் தொடர் நடவடிக்கைகள் குறித்து இறுதி எச்சரிக்கை விடுக்கலாம்.

### *தன்னைத் தூய்மைப்படுத்தல் :*

அகிம்சைப் போராளிகள் தங்கள் உள்ளங்களைத் தூய்மைப்படுத்தி மனத்திண்மையை வளர்த்தால், போராட்ட காலம் முழுவதும், வெறுப்புணர்வு, வன்முறை ஆகியவற்றை அகற்றிச் செயல்பட முடியும். தியானம், உணவுக் கட்டுப்பாடு, கூட்டுவழிபாடு, உண்ணா நோன்பு, தன்னல மறுப்பு உறுதி மேற்கொள்ளல் ஆகியன சுய தூய்மைக்கான சிலவழிகள்.

### *வேலை நிறுத்தம் :*

குறிப்பிட்ட நிறுவனத்திற்கு அல்லது துறையைச் சார்ந்தவர்களுக்குத் தங்கள் அதிருப்தியை உணர்த்திட வேலை நிறுத்தம் செய்யலாம். அரசு போன்ற உயர் அமைப்பை எதிர்த்துப் பொது வேலைநிறுத்தத்தை உருவாக்கலாம். அகமதாபாத் தொழிலாளர் போராட்டம் வேலை நிறுத்தத் திற்குச் சான்றாகும். அந்த வேலைநிறுத்தத்தில்தான் உண்ணா நோன்புக்குத் தோற்றுவாய் செய்து, சத்தியாக்கிரகத்தில் அதற்குச் சக்தி உண்டு என்று சாதித்தார் அண்ணல் காந்தி. நடுவர். குழு அமைப்பதால் நன்மையுண்டு என்று காட்டினார்.

### *மறியல் :*

வேலை நிறுத்தத்தின் தொடர் நடவடிக்கையாக இதனைக் கொள்ளலாம். ஒரு வகையில் இந்தச் செயல் வேலை நிறுத்தத்திற்கு நல்ல விளம்பரத்தைத் தேடித் தருகிறது. பிரச்சினைகளுக்குரிய இடங்களுக்கோ, கடைகளுக்கோ

செல்லாதிருக்குமாறு பொதுமக்களை அமைதியாகத் தடுத்து நிறுத்துதல் மறியல் ஆகும். இந்தியாவில் கள்ளுக்கடை அயல்நாட்டுத் துணிக் கடைகள் முன்பு நடந்த மறியல்களைக் குறிப்பிடலாம். வன்முறைக்கு ஆட்படாமல் மரியாதை, நல்லொழுக்கம் பேணி இதில் ஈடுபட வேண்டும். கொடும்பாவி எரித்தல் போன்ற செயல்களில் ஈடுபடக் கூடாது.

### *தர்ணா :*

அலுவலகங்களுக்கு முன்பு அமர்ந்து வேலை நிறுத்தம் செய்வதே தர்ணா ஆகும். மக்களின் ஆதரவைத் திரட்டுவதோடு ஒத்துழையாமையைக் காட்டவும் இது பயன்படுகிறது.

### *பொருளாதாரப் புறக்கணிப்பு :*

அரசுக்குச் செலுத்த வேண்டிய பணத்தைச் செலுத்த மறுப்பது, பொருளாதாரப் புறக்கணிப்பாகும். மின் கட்டணம், கல்விக் கட்டணம், தீர்வை போன்றவற்றைச் செலுத்த மறுப்பதும் இதில் அடங்கும். பிரச்சனைக்குரிய நபரோ அரசோ உற்பத்தி செய்யும் பொருள்களை வாங்க மறுப்பதையும் இதில் சேர்க்கலாம்.

### *வரிகொடா இயக்கம் :*

அதிருப்தி ஏற்படும் காலங்களில் அரசாங்கம் விதிக்கும் வீட்டுவரி, நிலவரி, தொழில்வரி, வருமான வரி, விற்பனைவரி போன்ற வரிகளைச் செலுத்த மறுப்பதாகும். கேடாச் சத்தியாக்கிரகம், பர்தோலிச் சத்தியாக்கிரகம் என்பன இதற்குச் சான்றுகளாகும்.

### *வெளியேறுதல் :*

இது பிரச்சினைகளைத் தீர்க்க முடியாத நிலையில் அங்கிருந்து வெளியேறி விடுவதைக் குறிக்கும் வரிகளைச்

செலுத்த முடியாத நிலையில் விவசாயிகள் வெளியேறி விடலாம். ஒரு குறிப்பிட்ட இடத்தில் சுயமரியாதையுடன் வாழ முடியாதவர்கள் இதனை மேற்கொள்ளலாம். பர்தோலி சத்தியாக்கிரகத்தின் போது இந்த முறையைக் கையாளுமாறு சத்தியாக்கிரகிகளை அண்ணல் காந்தி அறிவுறுத்தினார். மேலும், கெய்தா என்னும் இடத்தில் இந்துக்களால் கொடுமைக்காளான ஹரிஜனங்களை அங்கிருந்து வெளியேறுமாறு கூறினார்.

### *ஒத்துழையாமை :*

அரசு அல்லது நிறுவனத்தின் கொள்கையோடு ஒத்துப்போகாமல் இருப்பது இந்தப் போராட்டமாகும். அரசு அளித்த பட்டம் பதவிகளைத் துறத்தல், நீதிமன்றங்களைப் புறக்கணித்தல், கல்வி நிலையங்களுக்குப் போகாதிருத்தல், இராணுவம், காவல்துறைப் பணிகளிலிருந்து வெளியேறல் ஆகியன ஒத்துழையாமை இயக்கத்தின் உட்கூறுகளாகும் இந்தியாவில் 1920-இல் நடந்த ஒத்துழையாமை இயக்கத்தை இங்கே நினைவு கூரலாம்.

### *சமுதாயப் புறக்கணிப்பு :*

நியாயமான போராட்டத்தில் பங்கு கொள்ளாதவர்களைப் புறக்கணித்து விடுவது.

### *சட்டத்திற்குக் கீழ்ப்படியாமை :*

அநீதியான சட்டங்கள் என்று தெரிந்தால் அதற்கு அடிபணிய மறுப்பது; மனித நலன்களுக்குப் புறம்பாக அமைந்த எந்தச் சட்டத்தையும், மரியாதையுடனும், நெறிபிறழாப் பண்பாட்டுடனும் எதிர்ப்பதே இந்தத் திட்டம். இதனைத் திட்டமிட்டுப் படிப்படியாக நிறைவேற்ற வேண்டும். முதலில், உரிமைகளைப் பாதிக்கின்ற கடுமையான சட்டங்களை தேர்ந்தெடுத்து எதிர்க்க வேண்டும்.

## இணையரசு நடத்தல் :

மேற்கண்ட நடவடிக்கைகளால், சில பணிகளின் முன்னேற்றத்தில் பின்னடைவு ஏற்படுவதுண்டு. அப்போது சத்தியாக்கிரகிகளின் ஒரு பகுதியினர் அந்தத் தேக்க நிலையினைச் சரிக்கட்ட ஆக்கப்பணிகளில் ஈடுபட வேண்டும். எதிர்ப்புக்குள்ளாகும் அரசு நடத்தும் கல்விக் கூடங்களுக்குப் போவதை விடுத்தால், தேசீயக் கல்வி நிலையங்களை நிறுவிக் கல்விப் பணியைத் தொடரவேண்டும். அந்த அரசுக்குத் தொடர்பான வெளிநாட்டுப் பொருள்களைப் புறக்கணித்தால், உள்நாட்டுப் பொருள்களை உற்பத்தி செய்வதும் பயன்படுத்துவதும் நீடிக்க வேண்டும். வழக்குரைஞர்கள், அரசின் வழக்குமன்றங்களைத் துறந்தால், அந்த மன்றங்களுக்கு வெளியே நடுவர் மன்றங்களை அமைத்து வழக்குகளைச் சுமூகமான பேச்சு வார்த்தைகள் மூலம் தீர்க்க வேண்டும். மக்களும் இந்த மன்றங்களுக்கே தங்கள் வழக்குகளைக் கொண்டு வரவேண்டும்.

## உண்ணா நோன்பு :

சத்தியாக்கிரக உத்திகளில் ஒன்றாக இது கருதப்பட்டாலும், இதுவே கடைசி ஆயுதமாக அமைதல் நல்லது. ஒருவகையில் தன்னைத் தூய்மைப்படுத்தும் சாதனமாக இந்த நோன்பு அமைந்தாலும், எதிராளியின் மனச்சாட்சிக்கு வேலை கொடுக்கும் ஆற்றலையும் கொண்டுள்ளது. இதனை விழிப்போடு பயன்படுத்தினால், சிக்கல்களுக்குத் தீர்வு காண இதனை விட உறுதியான கருவி வேறெதுவுமில்லை. தன்னை வருத்திக் கொள்ளும் ஒரு சத்தியாக்கிரகி, உண்மை, நேர்மை ஆகியவற்றின் பக்கத்திற்கு வரும் வகையில் எதிராளியின் உள்ளத்தில் தார்மீக மாற்றம் ஏற்படக் காரணமாகிறான்.

## தேவைக்கு ஏற்ப :

மேலே கண்டபடி நிலைகள் எல்லாம் ஒரு சத்தியாக்கிரகப் போராட்டத்தில் இடம்பெற வேண்டும் என்பதில்லை. போராட்டத்தின் இயல்புக்குத் தக்கவாறு அவை இடம் பெறலாம். தொழில்துறைத் தொடர்பான போராட்டங்களில், வேலை நிறுத்தம், மறியல், பொது வேலை நிறுத்தம் போன்றன சிறப்பிடம் பெற முடியும். வேளாண்மை முதலிய பொதுமக்களைப் பாதிக்கும் துறைகளில் வரிகொடா இயக்கத்தைச் செயல் படுத்தலாம். பொருளியல் பிரச்சினைகளில் பொருளாதாரப் புறக்கணிப்புச் செய்யலாம். அரசியல் துறையில் ஒத்துழையாமை, சட்டமறுப்பு, இணையரசு நடத்துதல் போன்றவற்றைப் பின்பற்றலாம். இவற்றிற்கு மேலும் காலத்திற்கு ஏற்பச் சிலபடி நிலைகளை உருவாக்கலாம். ஆனால் அவை அகிம்சை, சத்தியம், தன்னல மறுப்பு, தன்னையே தியாகம் செய்தல், வெறுப்படையாமை, ஆகிய வரையறைகளை மீறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

## நிர்மாணத் திட்டம் :

சத்தியாக்கிரகத்திற்கும் நிர்மாணத் திட்டப் பணிகளுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. சத்தியாக்கிரகம் நடத்துவோர் இத்திட்டங்களைப் புரிந்து செயல்படும் ஆற்றல் மிக்கவராய் இருப்பது சிறப்பு. கொடுமைகள் நிறைந்த சமுதாய அமைப்பை மாற்றுவதற்கும் புதிய உலகைப் படைப்பதற்கும் சத்தியாக்கிரகத்தையும் நிர்மாணத் திட்டத்தையும் இணைத்துத் திட்டுமிட்டுச் செயலாற்ற வேண்டும். இரண்டும் அகிம்சை நெறியின் செயல்பாட்டுத் துறைகளே. சமுதாய, அரசியல், பொருளியல் துறைகளில் நியாயங்களை நிலைநாட்ட சட்ட மறுப்பு, ஒத்துழையாமை, அகிம்சை தழுவிய வேலை நிறுத்தம் ஆகியன பயன்படுவது போல நிர்மாணத் திட்டங்களும் உதவுகின்றன. எனவே சத்தியாக்கிரகத்தின் கிளை என்றே இத்திட்டத்தினைக் கூறலாம்.

### ஆக்கச்செயல் :

மறுத்தல், மறியல் செய்தல், தடுத்தல், நீங்குதல், புறக்கணித்தல், வேலை நிறுத்தம் செய்தல் முதலிய செயல்பாடுகள் அகிம்சை, சத்திய நெறிகளை மீறாமல் சத்தியாக்கிரகத்தில் அமைகின்றன. அந்தச் செயல்களால் உருவாகும் மந்தநிலை, முடக்க நிலை, தேக்க நிலைகளைச் சமாளிக்க நிர்மாணத் திட்டப் பணிகள் தேவையாகின்றன. இவையும் அகிம்சை, சத்திய நெறிகளுக்கு உட்பட்டே நடக்கின்றன. இந்த திட்டத்தில் அமைந்த செயல்பாடுகள் பெரும்பாலும் ஆக்கபூர்வமாக அமைந்தவையே. இவற்றை நெறிப்படுத்தித் தந்த பெருமையும் அண்ணல் காந்தியையே சாரும்.

### சத்தியாக்கிரகம் வெற்றிபெற :

அண்ணல் காந்தி வகுத்துத் தந்த நிர்மாணத் திட்டம் பெரிதும் உழைப்பைச் சார்ந்தே அமைந்துள்ளது. ‘கடையனுக்கும் கடைத் தேற்றம்’ என்ற ரஸ்கினின் நூலால் ஈர்க்கப்பட்ட அண்ணல் காந்தி, உடலுழைப்புத் தத்துவத்தை அதிலிருந்து தெளிவாக உணர்ந்து கொண்டார். அதனைச் செயல்படுத்தவும் துணிந்தார். அதன் விளைவுதான் தென்னாப்பிரிக்காவில் அவர் உருவாக்கிய ‘போனிக்ஸ் குடியிருப்பு’. சில நாள்களுக்குப் பிறகு அங்கேயே அவர் தொடங்கிய ‘டால்ஸ்டாய் பண்ணையில்’, எல்லாச் சமயத்தவரும் இணைந்து வாழ்தல், சமய வெறுப்பின்றிப் பரந்த மனப்பான்மையுடன் வளர்தல், கைத்தொழில்களுக்கு முதன்மை கொடுத்தல், ஒழுக்கக்கல்வியைக் கற்றுத்தருதல், இயற்கை மருத்துவம் பேணுதல் ஆகிய செயல் திட்டங்களை நடைமுறைப்படுத்தினார். இந்தியாவில், சம்பராண் சத்தியாக்கிரகம் நடந்து கொண்டிருந்தபோது நிர்மாணத் திட்டப் பணிகளையும் மேற்கொண்டு மக்களின் மனங்களைத் தூய்மைப்படுத்தினார். ஏழைக் குடியானவர்களின்

அறியாமையைக் கண்டு வருந்தி அதனைப் போக்கக் கிராமக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார். மக்களுக்குத் தூய்மை. நற்பண்புகள் ஆகியவற்றைக் கற்றுக் கொடுக்க ஏற்பாடு செய்தார். கிணற்றைச் சுற்றிச் சேறும், ஊரைச் சுற்றித் தண்ணீர் தேங்கி முடைநாற்றமுமாக இருந்ததால், நோய்கள் பரவின. அவற்றைத் தூய்மைப்படுத்தவும், எளிய முறையில் நோய்களைத் தீர்க்கும் மருந்துகள் பற்றியும் அவர்களுக்கு எடுத்துரைக்கப் பெற்றன. இந்த பணிகளின் மூலம், சத்தியாக்கிரகிகள் மீது மக்களின் நம்பிக்கை வளர்ந்தது. சத்தியாக்கிரகம் வெற்றி பெற்ற பிறகும் நிர்மாணத் திட்டப் பணிகள் அங்கே நடந்து கொண்டிருந்தன. பொதுவாகச் சத்தியாக்கிரக வெற்றிக்கு நிர்மாணத்திட்டப் பணிகளே அடித்தளம் என்பதே சம்பராண் சத்தியாக்கிரகம் மூலம், அண்ணல் காந்தி உணர்ந்த பாடம்.

### *முழுமை விடுதலை :*

அரசியல் மட்டுமன்றிச் சமுதாய, பொருளாதார விடுதலைகளும் சேர்ந்தே வர வேண்டும் என்பதே அண்ணல் காந்தியின் விருப்பமாகும். அதனையே அவர் முழுமையான விடுதலை என்று கருதினார். எனவே. ஒத்துழையாமைத் திட்டம் என்பது, ஆக்கப்பணிகளுடன் இணைந்தே செயல்பட வேண்டும் என்று அவர் விரும்பினார். அதற்கெனவே, சமூக ஒற்றுமை, தீண்டாமை நீக்கம், கதர், சுதேசி, கிராமத் தொழில் வளர்ச்சி, கிராமப் பொருளாதாரம், தேசிய கல்வி, மது விலக்கு போன்ற நிர்மாணத் திட்டங்களில் ஈடுபடுமாறு அவர் கேட்டுக் கொண்டார். சாதிவுணர்வு, தீண்டாமை, மதுவருந்தல் கட்டாயப்படுத்தி வேலை வாங்குதல் போன்ற சமுதாயத் தீமைகளை மக்கள் விட்டொழிக்க வேண்டுமென அறிவுறுத்தினார். ஓராண்டுக்குள் மக்கள் ஆறுகோடி ரூபாய்க்கு நிகரான கதராடையை நெய்து விடுவார்களேயானால், அந்த ஆண்டு முடிவதற்குள் இந்தியா விடுதலை பெற்றுவிடும் என்று கூறிக் கதர் கிராமத்தொழில் வளர்ச்சிக்கு வித்திட்டார்.

### *கிராம வளர்ச்சி :*

சத்தியாக்கிரகம் என்பது தேவை ஏற்படும் நேரத்தில் மட்டும் செய்யப்படும் ஒன்று. ஆனால் நிர்மாணத் திட்டங்கள் தொடர்ந்து செய்யப்பட வேண்டியவை. ஒவ்வொரு இடத்தின் சூழ்நிலைகளை மனத்திற் கொண்டு அந்தத் திட்டங்களை வகுத்துக் கொள்ளலாம். சில திட்டங்களுக்குத் தேவை ஏற்படாமல் போனால் அவற்றை நீக்கிவிடலாம். புதியவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். இந்தியாவில் நடைபெற்ற நீண்டகால விடுதலைப் போராட்டத்தின் நடுவே, இந்தியச் சூழ்நிலைக்கு ஏற்பத் தாம் ஏற்கனவே நடைமுறைப்படுத்தி வந்த திட்டங்களை ஒழுங்குப்படுத்தி செயல்பட வைத்தார். அண்ணல் காந்தி அந்தப் புரட்சிகரமான போராட்டத்தின் அங்கமாகவே அவை அமைந்தன என்பதே வரலாறு. "முழுமையான விடுதலையை அடைவதற்கு நிர்மாணத் திட்டந்தான் சத்தியமும் அகிம்சையும் பொருந்திய வழி" என்பதே அவர் நம்பிக்கையாகும். தேவைக்கேற்ப அவ்வப்போது சேர்க்க வேண்டிய திட்டங்களைச் சேர்த்து விரிவுபடுத்தினார். இந்தியா தலை நிமிர்ந்து நிற்க வேண்டும் என்றால், கிராமங்கள் மறுமலர்ச்சி பெறவேண்டும் என்பதை நோக்கமாகக் கொண்டுதான், அவர் திட்டங்களை வரையறை செய்தார். தனிமனித மேம்பாட்டிற்காகப் பதினொரு விரதங்களை அவர் வகுத்துத் தந்தது போல், கிராமத்தை உருவாக்க நிர்மாணத் திட்டத்தை அளித்திருக்கின்றார் என்பதே அறிஞர் கருத்து.

### *புதிய சமுதாயம் புலர :*

கிராம வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் ஆக்கத்தை ஏற்படுத்துவதற்கு, அண்ணல் காந்தி அளித்த திட்டங்கள் பதினெட்டு. அவை 1) சமுதாய ஒற்றுமை 2) தீண்டாமை ஒழிப்பு 3) மதுவிலக்கு 4) கதர் 5) கிராமத் தொழில்கள் 6) தனிமனிதத் துப்புரவு 7) ஆதாரக் கல்வி 8) சமுதாயக் கல்வி 9) பொதுச் சுகாதாரம் 10) மகளிர்

முன்னேற்றம் 11) தாய்மொழி 12) நாட்டுப் பொதுமொழி 13) பொருளாதாரச் சமத்துவம் 14) உழவர்கள் 15) தொழிலாளர்கள் 16) ஆதிவாசிகள் 17) தொழுநோயாளருக்குத் தொண்டு. இவற்றைக் கூர்ந்து கவனித்தால் சில உண்மைகள் புலனாகும். இவை பல துறை முன்னேற்றங்களுக்கும் அடிப்படையானவை. சமுதாய ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு, மது விலக்கு, தனி மனிதத் துப்புரவு, ஆதாரக் கல்வி, சமுதாயக் கல்வி, பொதுச் சுகாதாரம், மகளிர் முன்னேற்றம், ஆதிவாசிகள், தொழு நோயாளருக்குத் தொண்டு, மாணவர்கள் ஆகியன சமுதாய முன்னேற்றத்திற்குத் தேவையானவை. மதுவிலக்கு, கதர் கிராமத் தொழில்கள், பொருளாதாரச் சமத்துவம், உழவர்கள், தொழிலாளர்கள் ஆகிய திட்டங்கள் பொருளாதார வளர்ச்சிக்குத் துணைபுரிவன. சமுதாய ஒற்றுமை, தாய்மொழி, நாட்டுப் பொதுமொழி, சமுதாயக் கல்வி ஆகியவை நாட்டின் அரசியல் மேம்பாட்டிற்கு உதவக் கூடியன. ''மனிதன் முழுமையானவன். அவனுக்கு ஆறு அடிப்படைத் தேவைகள் உண்டு. தன்னை நம்பி வாழ்வதற்காக அவனுக்கெனப் பொருளாதாரத் தத்துவம் தேவை. தன்னைப் போல பிறரையும் நேசிப்பதற்காகச் சமூகத் தத்துவம் அவனுக்கு இன்றியமையாதது. தன்னைச் சகல அறிவும் ஆற்றலும் உள்ளவனாக ஆக்குவதற்குக் கல்வித் தத்துவத்தை அவன் பின்பற்ற வேண்டும். கற்றதனாலாய பயன் வாலறிவன் நற்றாள் தொழுவதில் அடக்கமானதால் அவனுக்கென ஒரு சமயத்தத்துவம் வேண்டும். சமயாச்சாரங்களைப் பின்பற்றி நன்னெறித் தத்துவத்திற்கு வித்திட முடியும் . இவ்வைந்தையும் ஒரு சேரக் கொணர்ந்து பயனளிக்கும் வண்ணம் மலரச் செய்ய ஓர் அரசியல் தத்துவம் பிறக்க வேண்டும். ஆக, இந்த அறுபடை வீடுகளையும் தன்னகத்தே கொண்டது தான் நிர்மாணத் திட்டம்'' என்று கா.முனியாண்டி அவர்கள் கூறும் கருத்தின் மூலம் நிர்மாணத் திட்டத்தின் பன்னோக்குப் பார்வையை உணரலாம். சமுதாய மக்களின் அடிப்படையான சீரழிவுக்கு எவை காரணங்கள் என்பதைக் கண்டறிந்து அவற்றைப் போக்கத் திட்டங்களை அறிமுகப்படுத்தியுள்ளார்

அண்ணல் காந்தி. இந்தத் திட்டங்களை முறையாக உணர்ந்து செயல்படுத்தினால், புதிய சமுதாயம் உருவாகும் என்பதே உண்மை. அகிம்சைக் கோட்பாட்டிற்குச் செயலுருவம் தந்த அண்ணல் காந்தி, நிர்மாணத் திட்டங்களையும் வகுத்துச் செயல்படுத்தித் தம்முடைய பெருமையை, அறிவுத் திறனை நிலை நாட்டிக் கொண்டார்.

### *கதர்த்திட்டம் :*

சமுதாயக் கொடுமைகளை நிர்மாணத் திட்டப் பணிகளால் அண்ணல்காந்தி எப்படி அகற்றினார் என்பதைச் சில சான்றுகள் மூலம் காணலாம். பரம்பரை பரம்பரையாக உழவும் கைத்தொழிலும் இந்தியரின் சொத்துக்களாக இருந்தவை. ஆனால் பிரிட்டிஷார் ஆட்சிக் காலத்தில் அவை நலியத் தொடங்கின. இங்கிலாந்து நாட்டிற்குரிய வணிகச் சந்தையாக அவர்கள் இந்தியாவை மாற்றினர். இங்குள்ள மூலப் பொருள்களைக் குறைந்த விலைக்கு வாங்கிக் கொண்டு சென்றனர். இங்கிலாந்தில் பெரிய ஆலைகளைப் பயன்படுத்திப் பொருள்களை உருவாக்கி மிகுந்த விலைக்கு இந்தியாவில் விற்றனர். இந்த வகையில் இந்தியாவின் வளம் சுரண்டப்பட்டது. இதனைத்தான் "பொருளெல்லாம் கொள்ளை கொண்டு போகவோ நாங்கள் சாகவோ" என்று மனம் புழுங்கிப் பாடினான் பாரதி. இந்தியாவின் வேளாண்மைத் தொழிலில் மாற்றங்கள் ஏற்பட்டன. பிரிட்டிஷாரின் வளர்ச்சிக்கு ஏற்ப இங்குள்ள உழவர்களை வேலை வாங்கினர். புகழ்பெற்ற இந்தியக் குடிசைத் தொழில்கள் குலைந்து போயின. சிற்றூர் மக்கள் வறுமையால் வாடினர். இப்போதுதான் இராட்டையை அறிமுகப்படுத்திக் கதர் வளர்ச்சியில் ஆர்வர் காட்டினார். காந்தி அடிகள். 'அனைத்திந்திய நூற்போர் சங்கம்' ஒன்றை அமைத்தார். இதன் பணி, பத்து ஆண்டுகளில் 5,300 கிராமங்களில் விரிவாக்கம் பெற்றது. நூற்போர் தொகை

2,20,000 ஆகவும், நெசவாளர் தொகை 20,000 ஆகவும் வளர்ந்தது. இந்தியா முழுவதுமாக ஒரு கோடி ரூபாய் வருவாய் ஈட்டித்தந்தது. இந்தச் சங்கம் கிராமங்களின் வறுமையைத் துடைப்பதில் ஈடுபட்டதோடு, கிராமத்தொழில்களைப் புத்துயிர் பெற வைக்கவும் முயற்சி செய்தது.

பிரிட்டிஷாரின் சுரண்டலைத் தடுப்பதற்குக் கதர்த் தொழிலின் வளர்ச்சி கணிசமான வெற்றியைத்தந்தது. அத்துடன், பரவல் முறை, உடல் உழைப்பு, கிராமத்திற்குரிய பொருளாதாரம், பொருத்தமான தொழில் நுட்பம், சுரண்டல் இல்லாத தொழில் அமைப்பு ஆகிய உத்திகளை இந்தியப் பொருளாதார வளர்ச்சிக்கு வழிவகுத்தார் அண்ணல் காந்தி. இதனாலும் இந்தியர் உழைப்பையும் செல்வங்களையும் உறிஞ்சிக் கொழுக்கும் பிரிட்டிஷாரின் போக்கைக் கட்டுப்படுத்த முடிந்தது.

### *ஹரிஜன முன்னேற்றம் :*

தாழ்த்தப்பட்ட மக்கள் என்று சிலரைத் தள்ளிவைத்து, அவர்களைத் தீண்டுவதும் பாவமென்று கருதினர். சமயத்தால் அவர்கள் இந்துக்களே. இந்தக் கொடுமையை நீக்க அண்ணல் காந்தி முயற்சி மேற்கொண்டார். தேர்தலில் போட்டியிட அவர்களுக்கென ஒதுக்கப்பட்ட தனித்தொகுதி முறையினை எதிர்த்து உண்ணா நோன்பிருந்தார். சாந்திநிகேதத்தில் கூடிய பெருங்கூட்டத்தில் கறுப்புடை அணிந்த கவிஞர் தாகூர், நீண்ட காலக் கொடுமையாக விளங்கும் தீண்டாமையை எதிர்த்துத் தீவிரப் போராட்டம் தேவை என்றார். அண்ணல் காந்தியின் எண்ணத்தைச் செயல்படுத்துமாறு இந்துக்களை வேண்டிக் கொண்டார். காங்கிரஸ் இயக்கத் தலைவர்கள் தீண்டத்தகாதாருக்குக் கோயில்களைத் திறந்துவிடுமாறும் இந்து

சமுதாயத்தில் ஏற்பட்டு விட்ட தீண்டாமைக் கறையைக் களைவதற்குக் கடிது உழைக்குமாறும் வேண்டுகோள் விடுத்தனர். அதற்கு நல்ல பயன் இருந்தது. பல மாநிலங்களின் கோயில்கள் தீண்டத்தகாதவருக்காகத் திறந்துவிடப்பட்டன. பொதுவிடங்களையும் கிணறுகளையும் அவர்கள் பயன்படுத்த அனுமதித்தனர். அவர்களோடு இணைந்து விழாக்கள் நடத்தினர்; விருந்துண்டு மகிழ்ந்தனர். கடவுளின் குழந்தைகள் என்று பொருள்படும் 'ஹரிஜன்' என்ற சொல்லைத் தீண்டத்தகாதாருக்கு அண்ணல் காந்தி சூட்டினார். தாம் தொடங்கவிருந்த செய்தித்தாளுக்கு 'ஹரிஜன்' என்று பெயர் வைத்தார். 'ஹரிஜன சேவா சங்கம்' என்ற அமைப்பை இந்திய அளவில் தொடங்கினார். எல்லாருக்கும் உள்ள உரிமைகள் அவர்களுக்கும் உண்டு என்று வாதாடினார். இதன் காரணமாகச் சமூக, சமய பொருளாதாரத் துறைகளில் அவர்களுக்கு உரிய பங்கு கிடைத்தது.

### *சர்வோதயமும் நிர்மாணத் திட்டமும் :*

சர்வோதயம் என்ற தத்துவத்தைத் தாம் வாழ்ந்த காலத்திலேயே அண்ணல் காந்தி அறிந்து அதற்கு உருவம் கொடுத்திருந்தார். அவர் காண விரும்பியதும் சர்வோதய சமுதாயமே. முழு மனிதனின் எல்லாத் துறைகளின் சமநிலை நலனையும் வளர்ச்சியையும் அதே போன்று சமுதாயத்திலுள்ள எல்லா மனிதர்களின் நலனையும் ஏற்படுத்துவதே அவரின் நோக்கம். அதுகுறித்து மிகுந்த கருத்துக்களை வெளியிட்டார். 'சர்வோதயம்' என்ற இதழ் ஒன்றை வெளியிட்டார். என்றாலும் தம் தத்துவத்தைச் செயல்படுத்த அமைப்பெதையும் அவர் ஏற்படுத்தவில்லை. அவர் மறைவுக்கு பிறகு வார்தாவில் உள்ள சேவா கிராமத்தில் கூடியவர்கள் அண்ணல் காந்திக்கு அமைய வேண்டிய நினைவுச் சின்னம் பற்றிக் கலந்து பேசினர். அவர்

காண விழைந்த சர்வோதயச் சமுதாய அமைப்பில் ஈடுபட வேண்டும் என்றும் அதனை அடைவதற்குரிய வழியாக நிர்மாணத் திட்டப் பணிகளைத் தீவிரப்படுத்த வேண்டும் என்றும் முடிவு செய்தனர். 'சர்வோதய சமாஜ்' என்ற அமைப்பினை ஏற்படுத்தினர். நாடெங்கும் அதன் கிளைகள் உருவெடுத்தன. பசுப்பாதுகாப்பு, இயற்கை வைத்தியம், அகதிகள் பாதுகாப்பு ஆகிய மூன்றையும் இணைத்துக் கொண்டனர். பின்னர் பூமிதானம், சாந்தி சேனை ஆகிய இரண்டையும் சேர்த்தார் வினோபாபாவே. கதர், கிராமத்தொழில்கள் உட்படப் பல நிர்மாணத் திட்டங்கள் அவைகள் மூலம் செயல்படுத்தப் படுகின்றன. "காந்தியடிகளின் நிர்மாணத் திட்டம் மக்களுக்காக மக்களாலேயே நடத்தப்பெறும் இயக்கம் என்று" சர்வோதயத் தலைவர் ஜி. ராமச்சந்திரனின் கருத்து உண்மையாகி வருவதை உணரலாம்.

# 5. இந்தியாவில் நடந்த அகிம்சை வழி எதிர்ப்புகள்

## *1. சம்பராண் சத்தியாக்கிரகம் (1917) :*

சம்பராண் ஜனக மகாராஜா ஆண்ட நாடாகும். கங்கைக்கு வடக்கே வெகுதூரத்தில் உள்ளது. இந்தியாவின் மற்றப்பகுதிகளிலிருந்து பிரிக்கப்பட்டுள்ளது. இங்கு மாந்தோப்புக்களும், அவுரித் தோட்டங்களும் ஏராளம்.

“தீன் கதியா” என்ற கேவலமான முறை, பல காலமாகப் பழக்கத்தில் இருந்து வந்தது. இதன்படி அங்குள்ள ஒவ்வொரு குடியானவனும் தான் சாகுபடி செய்யும் நிலத்தில் நிலச் சொந்தக்காரனுக்கு வரியாக இருபதில் மூன்று பாகத்தில் அவுரியைக் கட்டாயமாகப் பயிரிட வேண்டும். இருபது கதியா, ஓர் ஏக்கர். ஆதலால், மூன்று கதியாக்களில் அவுரி பயிரிட வேண்டும். அதனால் இதற்கு “தீன்கதியா” என்ற பெயர் வந்தது.

அவுரி ஒரு வாணிபப் பயிராகும். சாயம் தயாரிப்பது போன்ற பல தொழில்கட்கு அவுரி தேவைப்பட்டதால் நில உரிமையாளர்கள், தங்கள் நிலங்களில் கட்டாய அவுரிப் பயிர் செய்வதை வலியுறுத்தினர். இதனால் அவர்கட்கு ஏராளமான வருமானம் கிடைத்தது. ஒன்றும் அறியாத ஏழை விவசாயிகள் இருவிதப் பயிர்சாகுபடி செய்து துன்பப்பட்டனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஜெர்மனியில் செயற்கை அவுரியைத் (Synthetic Indigo) தயாரிக்கும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. இதனால், தோட்ட முதலாளிகளின் அவுரிப்பயிர் விலை போகவில்லை. வருமானம் குறையத் தொடங்கியது. அவுரிப் பயிரும் தேவையில்லாமற் போய்விட்டது. இதனால் விவசாயிகள் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்தால் அவுரிப் பயிர் செய்வதிலிருந்து

விடுபடலாம் என்று மிகுந்த தாராள மனப்பான்மையுடன் கூறுவது போல உண்மைக் காரணத்தை மறைத்துப் பணம் பறிக்க வழி செய்தனர். அறியாமையில் மூழ்கியிருக்கும் விவசாயிகளில் சக்தியுள்ளவர்கள் பணத்தைக் கொடுத்து அவுரிப் பயிர் செய்வதினின்றும் விடுபட்டனர். பணம் கொடுக்க முடியாத ஏழைகள் தொடர்ந்து துன்பப்பட்டனர்.

சிறிது காலத்திற்குப் பிறகு, உண்மைக் காரணம் விவசாயிகட்குத் தெரிய வந்தது. பணத்தை இழந்த விவசாயிகள் திரும்ப அதனைத் தரவேண்டுமென்று வற்புறுத்தினர். நீதி மன்றங்களிலும் வழக்குத் தொடுத்தனர். ஏழை விவசாயிகள் அவுரிப் பயிர் செய்வதினின்றும் தங்களை விடுவிக்கவேண்டினர். இதுவே அவுரி அநீதிக்கு அடிப்படையாகும். தகுந்த தலைவர்கள் இல்லாததாலும், பலர் அறியாமையில் மூழ்கியிருந்ததாலும், விவசாயிகளால் ஒன்றும் செய்ய இயலாமல் இருந்தது. இத்துன்ப நிலைக்கு உள்ளான ஒரு விவசாயி ராஜ்குமார் சுக்லா என்பவர். இவர் ஆர்வமும் உறுதியும் மிக்கவர். இத்துன்ப நிலையை நீக்க வேண்டும் என்பதற்காகப் பல தலைவர்களையும் சென்று பார்த்தார்.

சம்பராணில் பாபுபிரஜ்கிஷோர் பிரசாத் ஒரு பிரபல வக்கீல். சம்பராண் விவசாயிகளின் துன்பநிலைக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானம் ஒன்றைக் காங்கிரசில் கொண்டு வந்தார். இது ஏகமனதாக நிறைவேறியது.

சுக்லா, காந்தியடிகளைப் பல தடவை வற்புறுத்திக் கட்டாயம் சம்பராணுக்கு ஒரு தடவை வந்து பார்க்க வேண்டுமென்று அழைத்தார். 1917-ஆம் ஆண்டு தொடக்கத்தில், காந்தியடிகள் சுக்லாவுடன் சம்பராண் சென்றார். வழியில் பாட்னாவில் ராஜேந்திரபாபு வீட்டில் தங்கினார். முஜாபர்பூரில், ஆச்சார்யாகிருபளானி, மல்கானி ஆகியோருடன் தொடர்பு கொண்டு, சம்பரானியில் உள்ள இழிவான நிலையை பற்றி அறிந்தார். சம்பராண் பீகாரில் திர்கூத் பகுதியில் உள்ள ஒரு மாவட்டமாகும். இதன் தலை நகரம் மோதிகாரி.

அம்மாவட்டத்திலுள்ள வக்கீல்களுடன், காந்தியடிகள் தொடர்பு கொண்டார். வக்கீல்கள் அவரை கயாபாபு என்ற புகழ் பெற்ற வக்கீல் வீட்டில் தங்க வற்புறுத்தினர். அங்கு இருந்து கொண்டு, இராஜேந்திரபாபு, பிரஜ்கிஷோரி பாபு ஆகிய வக்கீல்களைச் சந்தித்தார். நிலைமையைத் தெளிவாக எடுத்துக் கூறினார். விவசாயிகள் மிகவும் நசுக்கப் பட்டுள்ளதாயும், நீதி மன்றங்களில் முறையிடுவதால் பயன் ஏற்படாதென்றும் நீண்ட காலப் போராட்டம் நடத்த வேண்டியிருக்கும் என்றும் கூறி வக்கீல்களின் உதவியை வேண்டினார். எழுத்து வேலைக்கும், ஊதியம் பெறாது உழைப்பவர்கள் வேண்டுமென்று கூறினார். அன்பு, சேவை உணர்ச்சி கொண்ட பலர் முன்வந்தனர். முதற்காரியமாகத் தோட்ட முதலாளிகளின் சங்கச் செயலாளரைக் கண்டு பேசினார். இப்பிரச்சனையில் தலையிட அவருக்கு உரிமையில்லையென்றும், உடனடியாக நகரை விட்டுப் போய்விடவேண்டுமென்றும், செயலாளர் காந்தியடிகளிடம் கூறினார். பின்னர் அவர் டிவிஷனல் கமிஷனரைச் சந்தித்தார். அவர் காந்தியடிகளை அச்சுறுத்தி திர்கூத்திலிருந்து உடனே போய்விடுமாறு அறிவுறுத்தினார். இவற்றையெல்லாம் காந்தியடிகள் தம் சகஊழியர்கட்குத் தெரியப்படுத்தினார். விவசாயிகளை நேரில் கண்டு அறிய வேண்டுமென்று கருதி மோதிகாரிக்கு புறப்பட முடிவு செய்தார்.

மோதிகாரிக்கு ஐந்துமைல் தொலைவில் ஒரு விவசாயி துன்புறுத்தப்பட்டார் என்று அறிந்த காந்தியடிகள், மறு நாட் காலை பாபு தரணீதர் பிரசாத்துடன், யானை மீது பயணம் செய்து அவ்விடத்திற்குச் சென்றார். போகும் வழியில், அவ்வூரை விட்டுப் போய்விட வேண்டுமென்ற போலீஸ் அதிகாரியின் வாரண்ட் கொடுக்கப்பட்டது. 'சம்பராணை விட்டுச் செல்ல .முடியாது. உத்தரவுக்குக் கீழ்ப்படிய முடியாது' என்று காந்தியடிகள் எழுதிக் கொடுத்தார். உத்தரவை மீறியதற்காக நீதிமன்றத்தில் ஆஜராகுமாறு, அவருக்குச் சம்மன் கொடுக்கப்பட்டது. இச் செய்தி பரபரப்பை உண்டு பண்ணியது. மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியது.

நீதிமன்றத்தில், காந்தியடிகள் உத்தரவை மீறியதை ஒத்துக் கொண்டு, மனச்சாட்சியின்படி நடந்தேன் என்று கூறினார். தன்னால் எந்தச் சமூக ஆபத்தும் ஏற்படாது என உறுதியளித்து. உத்தரவை மீறியதற்கு எத்தகைய தண்டனையளித்தாலும், அதை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளத் தயார் என்றும் சொன்னார். மாஜிஸ்டிரேட் தீர்ப்பை ஒத்திப் போட்டார். பின்னர் கவர்னர் உத்தரவின் பேரில் வழக்கு வாபஸ் பெறப்பட்டது.

பின்னர் காந்தியடிகள், கலெக்டர் ஸ்ரீஹோகாக்கைச் சந்தித்தார். அவரிடம் உண்மை நிலையைக் கூறி, அவரது நன்மதிப்பைப் பெற்றார். தோட்டக்காரர்கள், காந்தியடிகளைப் பற்றியும், தொண்டர்களைப் பற்றியும், அவதூறாகப் பேசினர். வதந்திகளால் விளையும் தீமைகளை நீக்க, பத்திரிகைகட்கு உண்மையான செய்திகளைக் காந்தியடிகளே அனுப்பினார். ஒவ்வொரு இடத்திலும், வாடகைவீடு பிடித்துக் குடியேறிச் சிக்கனமாக வாழ்க்கை நடத்தினார். எல்லா ஊழியர்கட்கும், பொதுவான எளிய சைவச் சாப்பாடு அளிக்கப்பட்டது. வக்கீல்கள் நண்பர்களிடமிருந்து பண உதவி பெற்றார். விவசாயிகளிடமிருந்து எந்தவித உதவி பெறுவதையும் விரும்பவில்லை.

விவசாயிகள் கூட்டம் கூட்டமாக வந்து தங்களுடைய நிலைகளை வாக்குமூலங்களாகக் கூறினர்; அவை பதிவு செய்யப்பட்டன. பதிவு செய்யும்போது, ஒரு ஸி.ஐ.டி. அதிகாரியும் உடனிருக்க அனுமதிக்கப்பட்டார். விவசாயிகள் தங்களுடைய குறைகளை மிகைப்படுத்திக் கூறாமல் இருக்கப் பல தடவை குறுக்கு விசாரணை செய்யப்பட்டனர். ஸி.ஐ.டி. அதிகாரி இருந்ததால், விவசாயிகள் தங்களின் உண்மையான குறைகளையே எடுத்துச் சொல்ல வாய்ப்பாயிருந்தது; முதலாளிகள், மிகுந்த எரிச்சல் அடைந்தனர். முதலாளிகள் சங்க உறுப்பினர்களைச் சந்தித்து, விவசாயிகளின் குறைகள் எடுத்துக் கூறப்பட்டன. ஒரு சிலரே மரியாதை தந்தனர். மற்றவர்கள் அவமதித்தனர்.

### *நிர்மாணப் பணிகள் :*

ஏழை விவசாயிகளின் அறியாமையைக் கண்டு காந்தியடிகள் வருந்தினார். பல இடங்களில் குறைவான கூலிக்கு மிகுந்த உழைப்பு வாங்கப்பட்டது. அறியாமையை நீக்கக் கிராமக் கல்வித் திட்டத்தைக் கொண்டு வந்தார். ஆறு தொடக்கப் பள்ளிகளைத் தொடங்கினார். ஆசிரியர்களின் உணவு, உறைவிடம், ஆகியவற்றிற்குக் கிராமமே பொறுப்பாகும். ஆசிரியர்களின் ஒழுக்கத் தகுதிக்கு முதன்மை கொடுக்கப்பட்டதால், ஒழுக்கத்தில் சிறந்த ஆசிரியர்களே நியமிக்கப்பட்டனர். புண்டலீகர், பாபாசாகிப் ஸ்ரீமதி அவந்திகாபாய் கோகலே, சுரேந்திரநாத், தேவதாஸ், கஸ்தூரி பாய் ஆகியோர் ஆசிரியர்களாய் நியமிக்கப்பட்டனர். சுத்தமாக இருப்பது, நல்ல பழக்கங்களைக் கொள்வது- இவைகள் கிராம மக்கட்கு எடுத்துரைக்கப்பட்டன. கிராமங்களின் உண்மையான நிலை அப்போதுதான் பலருக்கும் தெரியவந்தது. சுகாதாரச் சீர்கேடு கிராமங்களில் மிகுந்திருந்தது. கிணறுகளைச் சுற்றிச் சேறும், பலவிடங்களில் தண்ணீர் தேங்கி நாற்றமும் கிராமத்தில் எங்குமிருந்ததால், வியாதிகள் பல பரவின. 'ஆசிரியர்கள் மேற்கூறிய சீர்கேடுகளை நீக்கத் தாங்களே முன்வந்தனர். மக்களுக்கும் ஆர்வத்தை ஊட்டினர். அவந்திகாபாயின் பள்ளிக்கூடம் முன் மாதிரியாக விளங்கியது. டாக்டர் தேவ் என்பவர் இக்கிராமங்களில் ஆறுமாதகாலம் மருத்துவ சேவை செய்தார். ஆசிரியர்களும் எளிய நோய்களைத் தீர்ப்பதற்குப் பயிற்சி பெற்றனர். களிம்பு, விளக்கெண்ணெய், கொய்னா-இவையே அடிப்படை மருந்துகளாகும். இவற்றின் மூலம் பெருவாரியான நோய்கள் தீர்க்கப்பட்டன. இவ்வமைப்புகளால், மக்களின் நம்பிக்கையும். மதிப்பும் தொண்டர்கட்குக் கிடைத்தன.

முதலாளிகள், விரோதச் செயல்களில் ஈடுபட்டனர். விவசாயிகள் அஞ்சவில்லை. விவசாயிகளின் குறைகள் அரசாங்கத்திற்குத் தெரிவிக்கப்பட்டன. முடிவில் கவர்னர் சர் எட்வார்ட் கெய்டு, விசாரணைக் குழு ஒன்றை நியமித்தார்.

அதில் காந்தியடிகளும் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டார். விசாரணைக் குழுவின் தீர்ப்பு சாதகமாக அமையாவிட்டாலும், விவசாயிகட்காகத் தொடர்ந்து போராடுவேன் என்று காந்தியடிகள் கூறினார். விவசாயிகள் கட்சி நியாயமானதே என்றும், தோட்ட முதலாளிகள் பணம் பறித்தது சட்ட விரோதம் என்றும் கூறி, அப்பணத்தில் ஒரு பகுதியை முதலாளிகள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்றும், தீன் கதியா முறையை நீக்கிவிட வேண்டும் என்றும் குழு தீர்ப்பளித்தது. இக்குழுவின் தீர்ப்பு, பல முதலாளிகளின் பலத்த எதிர்ப்புக்கிடையில் நிறைவேற்றப்பட்டது. நூற்றாண்டுக் காலமாக இருந்த இம்முறை இவ்வாறு ஒழிக்கப்பட்டது.

இச்சத்தியாக்கிரகத்தில் காங்கிரஸின் பெயர் பயன் படுத்தப்படவில்லை. காங்கிரசைவிட மக்கள் முக்கியம், மக்கள் ஆதரவு இருக்க வேண்டும் என்று காந்தியடிகள் கருதினார். அவ்வூர் விவசாயிகளைப் பற்றி ஒன்றுமேயறியாத அவருக்கு இப்போராட்டம் முழுவெற்றியாகும். மக்களிடம் கொண்ட அன்பும், அகிம்சை மீது கொண்ட அசைக்க முடியாத உறுதியும் இவ்வெற்றியின் இரகசியமாகும். மக்கட்குச் செய்யும், தன்னலமற்ற தொண்டே தேசத் தொண்டாகும் என்ற உண்மைக்கு இப்போராட்டம் சிறந்த எடுத்துக்காட்டாகும். சத்தியத்திலும் அகிம்சையிலும் செய்த மற்றொரு தைரியமான சோதனை என்றே இதைக்கூறலாம். கிராமங்களின் நிலையை அறிவதற்குச் சிறந்த வாய்ப்புக் கிட்டியது. போராட்டத்தை விட நிர்மாணப் பணிகளே சிறந்தவை என்ற முடிவுக்குக் காந்தியடிகள் வருவதற்குக் களனாக இருந்தது. அகமதாபாத் அழைக்கா விட்டால், தொடர்ந்து நிர்மாணப் பணிகளையே செய்திருப்பார். ஆனால், சிக்கல்களை நீக்குவதற்குக் காந்தியடிகளே சிறந்தவர் என்று அனைவரும் கருதியதால் பல விடங்கட்கும் இவர் செல்ல வேண்டியதாயிற்று. தென்னாப் பிரிக்கச் சத்தியாக்கிரகத்துக்குப் பிறகு நடந்த இந்த முதல் இந்தியச் சத்தியாக்கிரகம், காந்தியடிகட்கு முழு நிறைவையும் வெற்றியையும் கொடுத்தது.

## 2. அகமதாபாத் மில் தொழிலாளர்கள் சத்தியாக்கிரகம்

சம்பராண் சத்தியாக்கிரகம் வெற்றி பெற்று நிர்மாணப்பணிகள் நடந்து கொண்டிருந்தன. இந்நிலையில், அகமதாபாத்திலிருந்து காந்தியடிகட்கு அழைப்பு வந்தது.

அகமதாபாத் மில் தொழிலாளிகள், குறைந்த கூலிக்கு அதிக உழைப்புச் செய்தனர். இவர்களின் நிலையும் பரிதாபமாக இருந்தது. இந்நிலையைச் சீர்திருத்த வேண்டுமெனக் காந்தியடிகள் விரும்பினார். மேலும், பிளேக் நோய் வந்தபோது, தொழிலாளர்கள் மில்களை விட்டு ஓடுவதைத் தடுக்க, அவர்கட்குப் பிளேக் போனஸ் கொடுக்கப்பட்டது. நோய் குறைந்தவுடன், இந்தப் போனசை நிறுத்திவிட முதலாளிகள் விரும்பினர். விலைவாசிகள் இரண்டு மடங்காகிவிட்டதால், தொடர்ந்து இப்போனசைக் கொடுக்க வேண்டும் என்று தொழிலாளிகள் வற்புறுத்தினர். இவர்கள் பக்கம் நியாயம் இருப்பதைக் காந்தியடிகள் உணர்ந்தார்.

அகமதாபாத்தின் கலெக்டர் சமாதானம் செய்யும்படி இவரை அழைத்தார். மில் முதலாளிகளின் தலைவரான அம்பாலால் சாராபாய் காந்தியடிகளின் நண்பர். சபர்மதி ஆசிரமத்தில், தீண்டாதாரை அனுமதித்தபோது ஏற்பட்ட பண நெருக்கடியை, இவர்தான் தீர்த்தார். முதலாளிகளின் பிரதிநிதியாக மூன்று பேரும், தொழிலாளிகளின் சார்பாக மூன்று பேரும் கொண்ட ஒரு மத்தியஸ்தக் குழு அமைக்க முடிவு செய்யப்பட்டது. ஆனால் இக்குழு செயல்படுவதற்கு முன்னால், ஒரு சிறு வேலை நிறுத்தம் நடந்தது. இதைக் காரணமாக வைத்து, முதலாளிகள் மத்தியஸ்தத்திலிருந்து வாபஸ் பெற்றனர். இருபது சதவீதப் போனஸ் வாங்க மறுக்கும் தொழிலாளிகள் நீக்கப்படுவர் என முதலாளிகள் கூறினர். தொழிலாளிகட்கு எதிராக முதலாளிகள் சேர்ந்து செயல்படுவது, எறும்புக் கூட்டத்தை நசுக்க யானைகள் கூட்டமாகச் சேர்ந்து கொண்டது போல் உள்ளது என்று காந்தியடிகள் கூறினார்.

காந்தியடிகள் தொழிலாளர்களை வேலை நிறுத்தம் செய்யச் சொன்னார். அவரே இதற்குத் தலைமை தாங்கவும் முடிவு செய்தார். அம்பாலாலின் தங்கை அனுசூயா பென் இதற்கு மிகவும் உதவி செய்தார். தொழிலாளர்களின் கோரிக்கையை ஏற்றுக் கொள்ளும் வரையிலும் அல்லது உடன்படிக்கைக்கு வரும் வரையிலும் வேலைக்குத் திரும்பக் கூடாது என எல்லாத் தொழிலாளர்களும் சபர்மதி ஆசிரமத்தில் சபதம் எடுத்துக்கொண்டனர். ''உறுதியைக் காப்பாற்று'' (ஏக்தேக்) என்று எழுதப்பட்ட அட்டைகளைத் தாங்கி ஊர்வலம் சென்றனர்.

நாட்கள் சென்றன. முதலாளிகளைக் காந்தியடிகள் அடிக்கடி சந்தித்தார். அவர்கள் வழிக்கு வருவதாகத் தெரியவில்லை. வேலை நிறுத்தம் தளர்ச்சி நிலையடைந்தது. ஆசிரமத்தில் கூட்டத்திற்கு வருவோர் குறைந்தனர். உறுதியெடுத்துக்கொள்ளும் குரலும் பலவீனமாக இருந்தது. கட்டுப்பாட்டை மீறிச் சிலர் வேலைக்குச் சென்றனர். இதனால் வன்முறை ஏற்படுமோ என்று காந்தியடிகள் பயந்தார். தொழிலாளர்கள் உறுதியை விட்டு வேலைக்குத் திரும்பி விடுவரோ என அஞ்சினார்.

சபர்மதி ஆசிரமத்தில், ஆலமரத்தடியில் கூட்டத்தில் பேசும் போது, அவர்கள் வேலைநிறுத்தத்தைத் தொடர்ந்து செய்யாவிட்டால் உண்ணாவிரதம் இருப்பேன் என்று அறிவித்தார். இச்சொல் அவர் அறியாமலேயே அவர் வாயில் வந்து விட்டது. இது மற்றவர்களைத் திடுக்கிட வைத்தது. அனுசூயாபென் மிகவும் வருந்தினார். மற்றவர்களும் உண்ணாவிரதம் இருப்போம் என்றனர். இதைக் காந்தியடிகள் தடுத்துவிட்டார். இதுவே, பொதுநலக் காரணத்திற்காக மேற்கொண்ட முதல் உண்ணாவிரதமாகும். இது முதலாளிகட்கு வருத்தத்தைக் கொடுத்தது. முதலாளிகள் இதனால் எந்த முடிவுக்கும் வரவேண்டாம்; தொழிலாளர்கள் உறுதிகாக்கவே உண்ணாவிரதம் இருக்கின்றேன் என்று அடிகள் கூறினார். ஆனால் இதனால் அவருக்கு ஏதாவது நேரிட்டால்.... அதற்குக்

காரணமாக இருக்க முதலாளிகள் விரும்பவில்லை. மூன்று நாள் உண்ணாவிரதத்திற்குப் பிறகு, உடன்பாட்டிற்குச் சம்மதித்தனர். தொழிலாளர்களின் குறை நீங்கியது.

இந்தச் சத்தியாக்கிரகத்தில், தொண்டர்களாகிய தொழிலாளிகள் சிறந்த முறையில் உறுதியுடன் நிற்கவில்லை. ஆனால் தொழிலாளிகளின் உரிமையைக் காக்கச் சத்தியாக்கிரகம் நடத்தியதால், பல இடங்களில் உள்ள தொழிலாளர்கட்கும் விழிப்புணர்ச்சி ஏற்பட்டது. முதலாளிகளும் தொழிற் சங்கங்களும் சேர்ந்து இயங்குவதற்கு வாய்ப்புக் கிடைத்தது. தொழிற் சங்கங்களை எதிரிகளாகக் கருதாமல், தொழிலாளர்கட்கு வியாபாரத்தில் பங்கு கொடுத்துத் தங்கள் தொழிற்சாலை என்ற எண்ணம் ஏற்பட வழி செய்ய வேண்டும் என்று காந்தியடிகள் கூறினார். ஆட்களை வேலைக்குத் தேர்ந்தெடுப்பதில், தொழிற் சங்கங்களின் ஆலோசனைகளையும் கேட்க வேண்டும். தொழிலாளர்களின் பிள்ளைகட்கு முதலிடம் கொடுக்க வேண்டும், என்பவையும் அவரால் வலியுறுத்தப்பட்டன. இவை அமுலுக்கு வந்தன. சம்பராண் போராட்டத்தைக் காந்தியடிகள் செய்த விவசாய புரட்சி என்று கூறினால், அகமதாபாத் சத்தியாக்கிரகத்தை அவர் நடத்திய தொழில் புரட்சி என்று கூறலாம்.

## 3. கேடாச் சத்தியாக்கிரகம் (1918)

கேடா ஜில்லா குஜராத் மாநிலத்தில் உள்ளது. அம்மாவட்டத்தில், விளைவு இல்லாமற்போன காலத்திலும், நிலவரியைக் கொடுக்க இயலாமற்போன விவசாயிகளிடமிருந்து கட்டாய வரி வசூலிப்பு செய்தனர். ஸ்ரீமோகன் லால் பாண்டியா, ஸ்ரீ சங்கர்லால் பரீக் போன்றவர்கள் இந்த அநீதியை அகற்றுவதற்குப் பாடுபட்டனர். பம்பாய் சட்டமன்றத்திலும் இப்பிரச்சினை பற்றிக் கிளர்ச்சி எழுந்தது. பன்முறை கவர்னரிடம் அனுப்பப்பட்ட தூதுக்குழு தோல்வியில் முடிந்தது. குஜராத்தி சபை அரசாங்கத்திற்கு அனுப்பிய

மனுக்களும் நிராகரிக்கப்பட்டன. அதிகாரிகளின் நடத்தை நம்பமுடியாத அளவுக்கு கேவலமாக இருந்தது.

விவசாயிகளின் கோரிக்கை மிகவும் மிதமானது. மகசூல் இருபத்தைந்து சதவீதத்திற்கும் குறைவாக இருந்ததால், நிலத்தீர்வை வசூலிப்பதை நிறுத்தி வைக்கலாம் என்பதற்கு அரசினர் ஆணையில் விதி இருந்தது. ஆனால் மகசூல் 25 சதவீதத்திற்கும் குறைவு என்ற முடிவு செய்வது அதிகாரிகளின் கையில் இருந்தது. அவர்களோ நீதிக்குப் புறம்பாக விளைச்சல் இருபத்தைந்து சதவீதத்திற்கும் அதிகம் என்று கூறி வரி வசூலிக்க முயன்றனர். இம்முடிவு செய்வதை நடுவு நிலையான ஒரு குழுவிடம் ஒப்படைப்பதையும் அவர்கள் மறுத்தனர். இந்நிலையில் விவசாயிகள் போராட்டம் செய்வது அவசியமாயிற்று.

1918-இல் காந்தியடிகள் இம்மாவட்டத்திற்கு வந்து, விவசாயிகளின் அவல நிலையை அறிந்தார். போராட்டம் நடத்துவதென முடிவுக்கு வந்தார். வல்லபாய் பட்டேல் வக்கீல் தொழிலை விட்டுவிட்டு, காந்தியடிகளுடன் போராட்டக் களத்தில் இறங்கினார். மற்றும் சங்கர்லால் பாங்கர், அனுசூயாபென், மகாதேவ் தேசாய் போன்ற தலைவர்களும் அவருக்கு உறுதுணையாயிருந்தனர். நாதியாத்திலிருந்த அனாதை ஆசிரமம் தலைமை அலுவலகமாக ஆக்கப்பட்டது.

போராட்டத்தில் கலந்து கொள்ளும் விவசாயிகள் உறுதியுடன் கீழ்க்கண்ட சபதங்களைக் கடைப்பிடிப்பதென்று, முடிவு செய்தனர். அச்சபதங்களை நன்கு படித்துப் புரிந்து கொண்டபின், உறுதிப்பத்திரத்தில் கையெழுத்திட வேண்டும். சபதங்கள் வருமாறு : 1) மகசூல் 25 சதவீதத்திற்கும் குறைவு என்பதைக் கூறி அடுத்த ஆண்டு வரை நிலத் தீர்வை வசூலை நிறுத்த அரசினரிடம் முறையிட்டோம்; வேண்டுகோள் நிராகரிக்கப்பட்டது. எனவே நாங்கள் இவ்வாண்டுத் தீர்வை செலுத்துவதற்கில்லை எனச் சத்தியம் செய்கின்றோம். 2)அரசாங்கம் எடுக்கும் சட்ட நடவடிக்கைகளின் விளைவுகளை

மகிழ்ச்சியுடன் ஏற்போம். 3) நிலம் பறிபோனாலும், பொருட்களை இழந்தாலும் வரி செலுத்தி எங்கள் சுயமதிப்பினை இழக்க மாட்டோம். 4) நிலத் தீர்வையின் இரண்டாவது தவணையை அரசு உடனடியாக நிறுத்தி வைத்தால் எங்களில் வரி செலுத்தச் சக்தியுள்ளவர்கள், நிலவரி செலுத்தத் தயார். சக்தியுள்ளவர்கள் இப்போதே வரி செலுத்தாதற்குக் காரணம் அவ்வாறு வரி செலுத்துவதால் சக்தியில்லாத ஏழை மக்களை அது பாதிக்கும் என்பதேயாம்.

பத்திரிகைகள் செய்திகளை வெளியிட்டன. இதற்கு ஆதரவாக குஜராத் வணிகர்கள் போராட்டம் செய்தனர். முதலில் விவசாயிகளின் அறியாமையையும் பயத்தையும் நீக்குவதற்கு முயற்சி எடுக்கப்பட்டது. அதிகாரிகள், விவசாயிகள் செலுத்தும் வரிப்பணத்திலிருந்து ஊதியம் பெறுவதால், அவர்கள் விவசாயிகளின் சேவகர்களே; அதனால் அதிகாரிகட்கு அஞ்ச வேண்டாம்; ஆனால் அதிகாரிகளை அதற்காக அவமதிக்கக்கூடாது. இவ்வாறு விவசாயிகளின் அச்சத்தைப் போக்கினார்.

வரி செலுத்தவில்லை என்று அரசாங்கம் அறிந்ததும், கடுமையான நடவடிக்கை எடுத்தது. கால் நடைகள் ஏலம் விடப்பட்டன. அகப்பட்ட சொத்துக்கள் ஜப்தி செய்யப்பட்டன. சிலவிடங்களில் கடுமையான அபராதம் விதிக்கப்பட்டது. மகசூல்களையும் அப்புறப்படுத்தினர். விவசாயிகளின் உறுதி குலைந்துவிட்டது. சிலர் பயந்து வரி செலுத்தி விட்டனர். ஒரு சிலரே உறுதியுடன் தொடர்ந்து போராடினர்.

சங்கர்லால் பரீக்கின் சாகுபடியாளர் ஒருவர், வரி செலுத்திவிட்டார். இதையறிந்த சங்கர்லால் அந்நிலத்தைத் தானமாகக் கொடுத்துக் கௌரவத்தைக் காத்துக் கொண்டார். ஒரு நிலத்தில் வெங்காய மகசூல் நியாயமின்றி ஜப்தி செய்யப்பட்டது. ஜப்தி செய்யப்பட்ட மகசூலை எடுத்துக் கொண்டு வந்துவிட வேண்டும். இது மக்கள் கடமையாகும் என்று காந்தியடிகள் கூறினார். ஸ்ரீமோகன்லால் பாண்டியா

தலைமையில் எட்டுப்பேர், வெங்காய மகசூலைத் திரும்ப எடுத்துக்கொண்டு வந்து சேர்த்தனர். இதற்காக அவர்கள் தண்டனையடைந்தனர். மோகன்லால் பாண்டியா "வெங்காயக்கள்வர்" என்று அழைக்கப்பட்டார்.

விவசாயிகள் களைத்துவிட்டனர். இந்நிலையில் என்ன செய்வது என்று தவித்திருந்த வேளையில், பண வசதியுள்ளவர்கள் வரி செலுத்தினால், எழைகளிடம் வரிவசூல் நிறுத்தப்படும் என நாதியாத் தாசில்தார் அறிவித்தார். இந்த அறிவிப்பை எழுத்து மூலம் காந்தியடிகள் பெற்றார். பின்னர் கலெக்டரும் இதற்கான ஆணையை வெளியிட்டார். இவ்வாறு போராட்டம் முடிவுக்கு வந்தது.

காந்தியடிகள் மகிழ்ச்சியடையும்படி முடிவு அமையவில்லை. வசதியுள்ளவர்கள் யார்? ஏழைகள் யார்? என்பதை முடிவு செய்ய மக்களால் முடியவில்லை. இதற்குக் காரணம் போதிய பலம் இன்மையாகும். பயத்தினால் ஏழைகளும் வரிசெலுத்திவிட்டனர். போராட்ட முடிவுக்குப்பின் இருக்கும் பெருமிதம் இதில் இல்லை. சத்தியாக்கிரக முடிவில், தொண்டர்கள் மேலும் பலமுள்ளவர்களாகவும், அதிக உற்சாகமுள்ளவர்களாகவும் இருக்க வேண்டும். இந்நிலை இப்போராட்டத்தில் ஏற்படவில்லை.

ஆனால் இப்போராட்டத்தினால் பல நன்மைகள் ஏற்பட்டன. குஜராத் விவசாயிகளிடையே விழிப்புணர்ச்சி ஏற்படக்காரணமாக இருந்தது. உண்மையான தேசீயக் கல்விக்கு இதுவே தொடக்கமாகும். படித்த பொதுஜன ஊழியர்களும் விவசாயிகளின் பக்கத்தில்தான் இருக்கிறார்கள் என்பதையறிந்து விவசாயிகள் உற்சாகம் பெற்றனர். சாத்வீக முறைப் போராட்டம் குஜராத் மண்ணில் ஆழ வேரூன்றியது. இப்போராட்டம் பட்டேலுக்குச் சிறந்த பயிற்சியளித்தது. பின்னர் அவர் பர்தோலி இயக்கத்திற்குத் தலைமை தாங்கி வெற்றி பெறுவதற்குக் காரணமாக அமைந்தது.

### 4. கோட்கார் சத்தியாக்கிரகம் (1921) :

கோட்கார், சிம்லாவிற்கு வடக்கில், இமயமலைச்சாரலில் அமைந்த சிறிய மாவட்டமாகும். இந்தியாவிற்கும் திபேத்திற்கும் இடையிலுள்ள நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது. இயற்கைக் காட்சிகள் நிறைந்த அழகான இடமாகும். வேட்டையாடுவதற்கு வாய்ப்பான பகுதிகளை கொண்டது. இதனால் அரசாங்க அதிகாரிகளும் வேட்டைப் பிரியர்களும் ஐரோப்பியர்களும் இங்கு அடிக்கடி வருவர்.

அங்கும் பேகார் (Beger) என்னும் கேவலமான ஒரு வழக்கம் இருந்தது. இதன்படி அரசாங்க அதிகாரிகளும் ஐரோப்பியர்களும் இங்கு வந்தால், இந்த மாவட்டத்தில் உள்ள கிராம அதிகாரிகள் இவர்கட்குப் பல வசதிகளைச் செய்து கொடுக்கவேண்டும். குறைந்த கூலி பெற்றுப் பல நாட்கள் ஊழியம் செய்வதற்காகப் பல ஆட்களை ஏற்பாடு செய்து கொடுக்க வேண்டும். மூட்டைகள் தூக்குவதும்,கடிதம் எடுத்துச் செல்வதும் இந்த ஆட்களின் வேலையாகும். இதைத் தவிர தேவைக்கு அதிகமான அளவு பாலை, மிக மிகக் குறைந்த விலைக்கு இவ்வதிகாரிகட்குத் தரவேண்டும். இதனால், உழவர்களின் வேலையும், வருமானமும் மிகவும் பாதிக்கப்பட்டது, அம்மாவட்டத்திலுள்ள ஒருவர் இதை எதிர்த்ததற்காகக் கைது செய்யப்பட்டார். மற்றவர்கள் துப்பாக்கி முனையில் அச்சுறுத்தப்பட்டனர்.

S.E. ஸ்டோக்ஸ் என்பவர் ஒரு முன்னாள் அமெரிக்கர். அம்மாவட்டத்தில் தங்கியிருந்த இவர் இந்த அநீதியை கண்டு கொதிப்படைந்து, இதனை எதிர்த்து போராட வேண்டுமென்று முடிவு செய்தார்; காந்தியடிகளின் கொள்கைகளைப் படித்திருந்ததால் அகிம்சா வழியைப் போராட்ட முறையாகத் தேர்ந்தெடுத்தார்.

முதலில் ஒரு மாவட்டப் பஞ்சாயத்து அமைக்கப்பட்டது. இதில் ஸ்டோக்ஸ் ஓர் அங்கத்தினர். பஞ்சாயத்து குழுவின்

முடிவுகட்குக் கட்டுப்பட்டு எல்லாக் கிராம மக்களும் நடக்க வேண்டும் என்று உறுதியெடுக்கப்பட்டது. மக்கள் அரசாங்கத்துடன் எந்தவித நேரடித் தொடர்பும் வைத்துக் கொள்ளக்கூடாது. மேற்கூறிய பேகார் பழக்கத்தை ஒழிப்பது என்று தீர்மானிக்கப்பட்டது.

இத்தீர்மானம் எல்லா அரசாங்க அதிகாரிகட்கும் மாவட்ட ஆணையாளர்க்கும் அறிவிக்கப்பட்டது. அதில் ஒரு முடிவான தேதியும் குறிப்பிடப்பட்டிருந்தது. இத்தேதிக்குப் பின்னர் சமரசத்திற்கு வந்தாலொழிய எந்த உதவியும அதிகாரிகட்குச் செய்வதில்லை என்று கூறப்பட்டது. மாவட்ட ஆணையாளர் வந்தார். அச்சுறுத்தியும், ஜாதி போன்ற பிரிவினைகளைக் கையாண்டும், மக்களைப் பிரிப்பதற்கு முயற்சி செய்தார். ஆனால் மக்கள் உறுதி தளரவில்லை. எந்தக் கேள்விக்கும் நேரடியாகப் பதில் சொல்ல மறுத்தனர். அரசாங்க அதிகாரிகட்கும் மற்றவருக்கும் உணவும் உழைப்பும் நல்க மறுத்தனர். முடிவாக மாவட்ட ஆணையாளர் பணிந்தார். குறைந்த ஆட்களைக் கொடுத்தால் போதும். அதற்கேற்ற ஊதியம் கொடுக்கப்படும். நியாயமான விலைக்குப் பால் கொடுத்தால் போதும் என்று அறிவித்தார். இவைகளை அட்டைகளில் எழுதிப் பாதைகளில் தொங்கவிட்டனர். இவ்வாறு அகிம்சா வழியில் போராட்டம் நடத்தி முழு வெற்றி கண்டனர்.

### *5. வைக்கம் சத்தியாக்கிரகம் (1924–25) :*

திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் 'வைக்கம்' ஒரு சிறு கிராமமாகும். இக்கிராமத்தில் சமூக நீதியினை நிலை நாட்டுதற்காகத் தன்னுடைய தொண்டர்கள் மூலம் காந்தியடிகள் சத்தியாக்கிரகம் நடத்தினார். இக்கிராமத்தில் பிராமணர்கள் குடியிருப்புக்கும், கோயிலுஃக்கும் பக்கமாக ஒரு பாதை சென்றது. தீண்டாதவர்கள் அப்பாதையில் நடக்கக் கூடாது. இப்பழக்கத்தை நீக்கச் சத்தியாக்கிரகம் நடந்தது. காந்தியடிகள் நேரடியாகப் பங்கு கொள்ளவில்லை. ஆனால்

அவரிடமிருந்து கடிதங்களும், தந்திகளும் தொண்டர்கட்குக் கிடைத்தன. பின்னால் ஒரு முறை அவரே அக்கிராமத்தை நேரடியாகப் பார்வையிட்டார்.

தலைவர்கள் தீண்டாதாரை அழைத்துக்கொண்டு அப்பாதை வழியாகச் சென்றனர். பிராமணர்களிடம் அடிபட்டனர். ஒருவர் பலத்த காயம் அடைந்தார். ஆனால் சத்தியாக்கிரகிகள் வன்முறையில் இறங்கவில்லை. பிராமணர்கள் போலீசைக் கொண்டு இவர்களைக் கைது செய்தனர். பலர் சிறையில் அடைக்கப்பட்டனர். தொண்டர்கள் பலபாகங்களில் இருந்தும் வந்து குவிந்தனர். இதனால் அரசாங்கம் சிறை செய்வதை நிறுத்தியது.

ஆனால் அந்தப்பாதையை அடைத்துப் போலீஸார் காவல் செய்தனர். காந்தியடிகளிடமிருந்து தகவல் பெற்றுச் சத்தியாக்கிரகிகள் போலீஸ் காவலுக்கு முன்னால், பிரார்த்தனை நிலையில் நின்றனர். ஆறுமணிக்கு ஒரு முறை தொண்டர்கள் மாற்றப்பட்டனர். அங்கேயே ஒரு குடிசை போடப்பட்டது. அதிக வேலையில்லாத போது நூற்பு வேள்வி நிகழ்ந்தது. வன்முறை முழுவதும் தவிர்க்கப்பெற்றது. போராட்டம் பல மாதங்கட்குத் தொடர்ந்து நடந்தது.

மழைக்காலம் வந்தது. பாதையில் வெள்ளம் நிரம்பி வழிந்தது. போலீஸார் படகுகளில் அமர்ந்து காவல் செய்தனர். அப்போதும் சத்தியாக்கிரகிகள் தளரவில்லை. கழுத்து அளவு தண்ணீரிலும் தொண்டர்கள் நின்று கொண்டு போராட்டம் நடத்தினர். மூன்று மணிக்கு ஒரு தடவை தொண்டர்கள் மாற்றப்பட்டனர்.

தொண்டர்களின் பிரார்த்தனைகளும் துன்பங்களும் பிராமணர்களை உருக்கியது. இனிமேல் அவர்கள் துன்பங்களை நாங்கள் பொறுத்திருக்க முடியாது; தீண்டாதாரை வரவேற்கத் தயார் என்று பிராமணர்கள் அறிவித்தனர்.

இவ்வாறு ஒரு வருடம் நான்கு மாதப் போராட்டத்திற்குப் பின்னர், பாதை அனைவருக்கும் திறந்துவிடப்பட்டது. சமூக அநீதியும் ஒழிக்கப்பட்டது. இந்தியாவிலுள்ள இதுபோன்ற பல தடைகளை நீக்குவதற்கு இச்சத்தியாக்கிரகம் தோற்றுவாயாக அமைந்தது.

### *6. பர்தோலி சத்தியாக்கிரகம் (1928) :*

பர்தோலி, பம்பாய் மாகாணத்தில் சூரத்திற்கு அண்மையில் உள்ள ஒரு சிறிய மாவட்டமாகும். இதில் கிராம வரி அதிகரிப்பை (Rural Tax) எதிர்த்துப் போராட்டம் நடத்தப்பட்டது.

1919-இல் இயற்றிய இந்தியச் சட்டத்திற்குச் சில மாறுதல்கள் செய்வதற்கு ஒரு பாராளுமன்றக்குழு அமைக்கப் பட்டது. அக்குழு சில ஆலோசனைகளைக் கூறியது. இவற்றிற்கு எதிராகவும், பம்பாய் மாகாணச் சட்டசபை வரி மதிப்பு சம்பந்தமாக 1924-இல் எடுத்த முடிவுக்கு மாறாகவும் 1927-இல் பம்பாய் மாகாண அரசு கிராம வரியை மிக அதிகமாக்கியது. சாதாரணமாக 22 சதம் வரி வசூலிக்கப்பட்டது. ஆனால் சிலவிடங்களில் 60 சதம் வரியும் வசூலிக்கப்பட்டது. இது மக்களால் தாங்க முடியாத ஒன்றாகும்.

விவசாயிகள், இந்த வரியேற்றம் அதிகாரிகளின் தவறான கணக்கீட்டால் வந்துள்ள அநீதியாகும் என்று கூறி இதை முழுதும் விசாரிக்க நடுவு நிலைமைக் குழுவொன்று அமைக்கவேண்டும் என அரசினரிடம் வேண்டினர். அரசாங்கம் இதை அலட்சியப்படுத்தியது. அரசாங்கத்திற்குத் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்துவிட்டு, வரிகொடாமல் போராட்டம் நடத்துவது என்று முடிவு செய்தனர். சர்தார் வல்லபாய் பட்டேலை இதற்குத் தலைமை தாங்குமாறு வேண்டிக் கொண்டனர். காந்தியடிகளின் கட்டளையின் பேரில் பட்டேல் தலைமை தாங்கச் சம்மதித்தார். அடிகளிடமிருந்து ஆலோசனைகள் பெற்றனர். எண்பத்தெட்டாயிரத்திற்கு

மேற்பட்ட விவசாயிகள் இப்போராட்டத்தில் கலந்து கொண்டனர்.

பட்டேல் எல்லாக் கிராமங்களிலும் உள்ள மக்களைக் கூட்டினார். ஜாதிமதப் பிரதிநிதிகளும் கலந்து கொண்டனர் கூட்டத்தில், மக்களுக்கு பிரச்சினையை விளக்கமாக எடுத்துரைத்தார். அதில் அவர்கட்கு எந்த அளவுக்கு உரிமை இருக்கிறது என்பதையும் கூறினார். அரசாங்கம் அதிகாரத்தைக் கொண்டு எத்தகைய பயங்கரங்களை உண்டு பண்ணலாம் என்பதையும் விரிவாக விளக்கினார். நீண்டகாலம் போராடவேண்டியிருக்கும் என்றும் கூறினார். பின்னர் மக்களை விளக்கமாகக் கேள்வி கேட்டு அவர்களுடைய தைரியத்தையும் ஒற்றுமையையும் துன்பத்தைத் தாங்கும் சக்தியையும் அறிய எண்ணினார். மக்களுக்கு அவகாசம் அளித்து நன்கு யோசித்து, விவாதித்து முடிவுக்கு வரும்படி கூறினார். பெருமளவு மக்கள் போராட்டத்திற்குச் சம்மதம் தெரிவித்தனர்.

மாவட்டத்தின் பலபாகங்களிலும் பல வருடங்களாகச் சில சமூக சேவை நிலையங்கள், பயிற்சி பெற்ற தொண்டர்களால் நடத்தப்பெற்று வந்தன. இவையே தொடக்கத்தில் சத்தியாக்கிரக நிலையங்களாக மாறின. பின்னர் மாவட்டத்தின் பல்வேறு பாகங்களிலும் பதினாறு முகாம்கள் அமைக்கப்பட்டன. 250 தலைவர்கள் இம்முகாம்களில் இருந்தனர். இவர்களைத் தவிர, ஒவ்வொரு கிராமத்திற்கும் சிலதொண்டர்கள் அனுப்பப்பட்டனர். கிராமங்களில் நடக்கும் நிகழ்ச்சிகளைப்பற்றிய செய்திகளைத் தலைமை நிலையத்திற்கு அனுப்புவதும், அரசாங்க அதிகாரிகளின் நிலைகளை மக்கட்கு முன்கூட்டியே தெரிவித்து, அவர்களைத் தைரியப்படுத்துவதும் தொண்டர்களின் வேலைகளாகும். தலைவர்கள் சொற்படி நடப்போம்; சத்தியத்தை உறுதியுடன் பற்றுவோம், அகிம்சை வழியிற் போராடுவோம் ஆகிய உறுதி மொழிகளை நன்கு புரிந்து கொண்டு விவசாயிகள் உறுதிப்பத்திரத்தில்

கையெழுத்திட்டனர். பெண்களும் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொண்டனர். ஆண்களும் பெண்களும் தனித்தனிக் குழுக்களாகப் பிரிந்து தீவிரமாகச் செயல்பட்டனர்.

ஒவ்வொரு நாளும் செய்திகளை அச்சடித்து கிராமங்கட்கு அனுப்பி வந்தனர். 10,000 பிரதிகள் அனுப்பப் பட்டன. இதைத்தவிர, வெளி மாவட்டத்தார் நாலாயிரத்திற்கும் மேற்பட்ட பிரதிகட்குச் சந்தாதாராயிருந்தனர். பட்டேலின் சொற்பொழிவுகளும் துண்டுப்பிரசுரமாக அச்சடிக்கப்பட்டு வெளியிடப்பட்டன.

அரசாங்கம் விவசாயிகளை வரிசெலுத்தவைக்க ஜாதிப் பிரிவினை, அச்சுறுத்தல், அடி,உதை, கைது செய்தல் போன்ற பல முறைகளைக் கையாண்டது, விவசாயிகளின் சொத்துக்களைப் பறித்து ஏலமிட்டது. பலர் நிலங்களை ஜப்தி செய்தது. பலர் நிலங்களை இழந்தனர். இம்மாவட்டத்தில் இந்துக்கள் மிகுதியாக இருப்பதால் வட மேற்கு மாகாணத்திலிருந்து பத்தான்களையும், முஸ்லீம்களையும் வரவழைத்து மக்களைப் பயமுறுத்தினர்.

ஒருவரும் பணியவில்லை. அரசினர்கொடுமை மிக மிக, மக்களிடையே ஒற்றுமையும் மிகுந்தது. எல்லா அரசாங்கப் பிரதிநிதிகளுடன் ஒத்துழைக்க மறுத்தனர். ஏலம் விடப்பட்ட பொருட்களையும், நிலங்களையும் வாங்கினவர்களும் மக்களால் ஒதுக்கப்பட்டனர்.

இந்தியாவெங்கும் இது பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. சட்டமன்றத்தில் இப்பிரச்சினை விவாதிக்கப் பட்டது. பலர் இராஜிநாமாச் செய்தனர். இலண்டனில் உள்ள பார்லிமெண்டிலும் இப்பிரச்சினை விவாதிக்கப்பட்டது. இந்தியாவில் உள்ள பல பாகங்களில் இருந்தும் ஆதரவு குவிந்தது. எல்லா நிலைகளிலும் விவசாயிகள் அகிம்சை முறையில் தீவிரமாக இருந்தனர்.

ஐந்தரை மாதப் போராட்டத்திற்குப் பிறகு அரசாங்கம், விவசாயிகளின் ஒவ்வொரு கோரிக்கைக்கும்

விட்டுக்கொடுத்தது. கவர்னர் விசாரணைக்குழு ஒன்றை நியமித்தார். இழந்த நிலங்களை விவசாயிகள் திரும்பப் பெற்றனர். பதவியிழந்த கிராம அதிகாரிகள் மீண்டும் பதவி பெற்றனர். விசாரணைக்குழு ஆராய்ந்து, வரியையும், குறைத்தது. இவ்வாறு அகிம்சை வழியில் போராடி விவசாயிகள் முழு வெற்றியடைந்தனர்.

## *7. தண்டியாத்திரை (உப்புச் சத்தியாக்கிரகம்)-(1930)*

1928 டிசம்பரில் கூடிய காங்கிரஸ் மாநாடு, பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு ஒரு வருடத் தவணை கொடுத்தது. 1929க்குள் டொமினியன் அந்தஸ்தாவது கொடுக்காவிட்டால், பூரண சுதந்திரத்திற்குப் போராட்டம் நடத்துவதென்று அம்மாநாடு முடிவு செய்தது. இது அரசாங்கத்திற்கும் தெரிவிக்கப்படடது. 1920-இல், நடத்திய ஒத்துழையாமை இயக்கம், போதிய பயிற்சியின்மையால் நிறுத்தப்பட்டது என்பதைக் காந்தியடிகள் அறிந்திருந்ததால், சுதந்திரப் போராட்டத்திற்கு முன்பு மக்களுக்குத்தகுந்த பயிற்சிதர வேண்டுமென விரும்பினார். பல இடங்கட்கும் பயணம் செய்து, நூல் நூற்றல், அந்நியப்பொருட்களைப் பகிஷ்கரித்தல், கதர் அணிதல், ஆகியவற்றை வலியுறுத்தினார். வெளிநாட்டுத் துணிகளை விற்கும் கடைகட்கு எதிராக மறியல் செய்யப்பட்டது. பேரளவு வெளிநாட்டுத் துணிகளைக் குவித்து எரித்தனர். இதற்கிடையில் பர்மா மக்களின் அழைப்பின் பேரில் காந்தியடிகள் அங்கே சென்று வந்தார்.

அரசாங்கம் மக்களின் ஆவேசத்தை உணரத் தொடங்கியது. தொழிலாளர்களும் வெறுப்புடன் இருக்கிறார்கள் என்பதைப் பம்பாய் ஜாம்ஷெட்பூர் போன்ற இடங்களில் நடந்த வேலை நிறுத்தங்கள் தெளிவாக்கின. சதிச்செயல்கள் பல நடைபெற்றன. இவைகளைத் தடுக்கப் பொதுமக்கள் பாதுகாப்புச் சட்டத்தை (Public Subject Act) அரசாங்கம் கொண்டுவந்தது. இங்கிலாந்தில் வேறு கட்சி அரசு ஏற்பட்டது. இந்தியாவிலுள்ள வைஸ்ராய் இர்வினின்

நிலையும் இங்கிலாந்து அரசின் நோக்கமும் இந்தியர்கட்குச் சாதகமாக இல்லை.

1929 டிசம்பர் மாதம் வந்தது. காங்கிரஸ் கொடுத்த ஒருவருடத் தவணையும் முடிந்தது. அரசாங்கத்தில் எந்த வித மாற்றமும் இல்லை. காங்கிரஸ் கேட்ட டொமினியன் அந்தஸ்தும் அளிக்கப்பெறவில்லை. 1929 டிசம்பரில் லாகூரில் கூடிய காங்கிரஸ் மாநாடு பூரண சுதந்திரமே குறிக்கோள் என முழங்கியது. 1930, ஜனவரி 1-ல் சுதந்திர இந்தியாவின் கொடி பறக்கவிடப்பட்டது. காங்கிரஸ்சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் இராஜிநாமாச் செய்தனர்.

லாகூர் காங்கிரஸ் செய்த முடிவுகளை நிறைவேற்று வதற்குக் காங்கிரஸ் தலைவர்கள், காந்தியடிகளைத்தான் எதிர் பார்த்திருந்தனர். ஆனால் காந்தியடிகளின் வழி அகிம்சையாகும். நாட்டின் பொதுவான சூழ்நிலை அகிம்சைக்கு ஆதரவாக இருந்தால் மற்றொரு சத்தியாக் கிரகத்தை நடத்துகிறேன் என்று காந்தியடிகள் கூறினார். சௌரி சௌரா நிகழ்ச்சியை அவர் மறக்கவில்லை. ஆனால் இத்தடவை கடைசி உயிர் இருக்கும் வரை சத்தியாக்கிரகத்தைக் கைவிடுவதில்லை என உறுதிசெய்து கொண்டார். "1920-இல் வந்த அழைப்பு போராட்டத்திற்கு மக்களைத் தயார் செய்து கொள்வதற்கு வந்ததாகும். 1930-இல் இவ்வழைப்பு முடிவான போராட்டத்தில் ஈடுபட வழிசெய்தது."1 என்று அவர் கூறினார். 1930 ஜனவரி 26-ஆம் நாளைச் சுதந்திர தினமாகக் கொண்டாடுவதென்று முடிவு செய்யப்பட்டது. அன்று இந்திய மக்கள் அனைவரும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குப் பணிவது கடவுளுக்கு எதிராக நடப்பதற்கு ஒப்பாகும் என உறுதியெடுத்துக் கொண்டனர். காங்கிரஸ் செய்யப்போகும் சட்ட மறுப்பு இயக்கத்திற்கும் தயார் என்று மக்கள் கூறினர்.

---

1. The Call of 1920 was a call for preparation. The call in 1930 is for engaging in final Conflict.

தொடக்கத்தில் உப்புவரி சம்பந்தப்பட்ட சட்டங்களை மீறுவது என்று காந்தியடிகள் முடிவு செய்தார். உப்பு வரி ஏழைகளை மிகவும் பாதிக்கின்றது. ஆனால் இந்தச் சத்தியாக்கிரகம் சுதந்திரத்தை தேடித் தருமா என்பதில் பலருக்கும் ஐயம் எழுந்தது. காந்தியடிகள் தானே சத்தியாக்கிரகிகளைக் கடற்கரைக்கு அழைத்துச் சென்று உப்புச் சட்டங்களை மீறுவது என முடிவு செய்தார். அதற்கு முன்னால், வழக்கமாகச் செய்வது போல் வைசிராய்க்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் முக்கியமாக பிரிட்டிஷ் அரசாங்கமும் அதன் கொள்கைகளும் இந்திய ஏழைகளை மிகவும் நசுக்கி விட்டன என்று குறிப்பிட்டிருந்தார். வைசிராய் ஒன்றும் செய்ய இயலாதென்று வருத்தம் தெரிவித்துப் பதில் எழுதிவிட்டார்.

காந்தியடிகள் முதல் சத்தியாக்கிரகக் குழுவினை அகமதாபாத்திலிருந்து தண்டிக்கு அழைத்துச் செல்ல முடிவுசெய்தார். சத்தியாக்கிரகிகள் சபர்மதி ஆசிரமத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். பிரிட்டிஷ் பத்திரிகையின் நிருபர் ஒருவர் உளவறிய வந்தார். அவர் விருந்தாளியாக நடத்தப்பட்டு, எல்லாவற்றையும் நேரில் இருந்து பார்த்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார். அதற்குரிய வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

மார்ச் 11, மாலையில் பிரார்த்தனைக் கூட்டம் நடந்தது. அன்று இரவு, காந்தியடிகள் .ஒருவர்தான் கவலையில்லாமல் தூங்கினார். காலை 6-30க்குப் பாத யாத்திரை தொடங்கியது. செல்ல வேண்டிய தூரம் 241 மைல்கள். 79 சத்தியாக்கிரகிகள் இதில் கலந்து கொண்டனர். அவர்களில் நிருபர்கள், தீண்டாதார், நெசவாளிகள், மாமேதைகள் ஆகியோர் இருந்தனர். அவர்களுள் மிக வயதானவர் 61 வயதுள்ள காந்தியடிகள். மிக இளையவர் 16 வயதுள்ள ஒரு இளைஞன். அகமதாபாத் மக்கள் சாலையின் இருமருங்கும்

கூடி உற்சாக வரவேற்பும் அளித்தனர். சாலையெங்கும் பசுந்தழைகள் பரப்பப்பட்டிருந்தன. வயதான காந்தியின் நடைக்கு மற்றவர்களால் ஈடு கொடுக்க முடியவில்லை. பாதயாத்திரையில் ஒவ்வொரு நாளும் வழக்கம்போல, காலை நான்குமணிக்கு எழுந்துவிடுவார். பின்னர் பிரார்த்தனை செய்வார். அதன்பின் கிராமங்களில் கூடும் கூட்டங்களில் பேசுவார். அன்றாடம் நூற்பு வேள்வி நடக்கும். பத்திரிகைகட்குக் கட்டுரைகளும் நிருபர்கட்குக் கடிதங்களும் எழுதுவார். உப்புச் சட்டங்களை வாபஸ் பெறும்வரை மீண்டும் சபர்மதிக்கு வரமாட்டேன் என்றும் கூறினார்.

அதிகாரிகள் இந்த இயக்கத்தைப் பார்த்துக் கொண்டேயிருந்தனர். இந்தியாவிற்குச் சுதந்திரம் கொடுக்கப் பிரிட்டிஷ் அரசாங்கம் கனவிலும் கருதவில்லை. காங்கிரஸின் பூரண சுதந்திரக் கோரிக்கையைப் பற்றி பேசும்போது, 2"பூரண சுதந்திரத்தைப் பற்றிப் பேசுவது எவ்வளவு முட்டாள்தனம் என்பதை மற்றவர்களைவிட இந்தியர் நன்கறிந்துள்ளனர். டொமினியன் அந்தஸ்து இப்பொழுது கொடுக்க முடியாது. இன்னும் பல காலத்திற்கும் கொடுக்க இயலாது" என்று காலனி நாடுகளின் செயலாளர் ஏரல்ரஸ்ஸல் கூறினார். கெட்டிலில் கடல் தண்ணீரைக் கொதிக்க வைத்து, உப்பு எடுப்பதன் மூலம் மாபெரும் பிரிட்டிஷ் அரசை ஓட்டிவிடலாம் என்று காந்தி நினைக்கிறார் என அரசும், படித்த காங்கிரசாரும் இவ்வியக்கத்தைப் பார்த்துச் சிரித்தனர். அதனால் அவர்கள் இவ்வியக்கத்தைத் தீவிரமாகக் கருதவில்லை. வரிகொடா இயக்கத்திற்கு உப்பை எடுத்துக்கொண்டது சிறந்ததன்று. இதனால் அரசாங்க வருமானம் பாதிக்காது என்று அரசினர் நினைத்துத் தைரியமாக இருந்தனர்.

---

2. None know better than Indians themselves how foolish it is to talk of Complete independence. Dominion status is not possible at the moment and would not be for a long time. - **Earl Russell**

இதுபோன்ற இயக்கங்களைச் சமாளிப்பதற்கு மாநில அரசுகட்குப் பின்வரும்உத்தரவுகள் இடப்பட்டன: (1) அதிகம் பேரைக் கைது செய்யவேண்டாம். (2) தலைவர்களை மட்டும் தேவையிருந்தால் கைதுசெய்யவும். (3) கடுமையான வன்முறைகளில் இறங்க வேண்டாம். (4) சிறுவர்களிடமும், பெண்களிடமும் எச்சரிக்கையாக நடந்து கொள்ளவும்.

ஆனால் இயக்கம் சுறுசுறுப்பு அடைந்தபின்னர், அதிகாரிகளின் கோபம் அதிகரித்ததால், உத்தரவுகள் காற்றில் விடப்பட்டன. மார்ச் 7-ஆம் தேதி பட்டேல் கைது செய்யப்பட்டார். ஏப்ரலில் நேரு அலகாபாத்தில் கைது செய்யப்பட்டார். தண்டியில் காந்தியடிகள் சத்தியாக் கிரகிகளுடன் உப்புக் காய்ச்சினார். 'இந்த ஒரு கைப்பிடி உப்பில்தான் நம்மானம் அடங்கியுள்ளது. கைமுட்டி முறிந்தாலும் உப்பைக் கைவிடவேண்டாம்' என ஆவேசமாக முழங்கினார். அறுபதினாயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் உப்புச் சட்டத்தை மீறியதற்காகக் கைது செய்யப்பட்டனர். முக்கியமான தலைவர்களில் ராஜாஜி, மாளவியா, முன்ஷி, தேவதாஸ் காந்தி, மகாதேவ் தேசாய் ஆகியோரும் கைது செய்யப்பட்டனர். உப்புக் காய்ச்சுவதுடன் வெளிநாட்டுத் துணிகளை விற்பனை செய்யும் கடைக்கு முன்னரும், கள்ளுக்கடைகட்கு முன்னரும் ஏராளமான பெண்கள் மறியல் செய்தனர்.

சிட்டகாங் போன்ற ஒருசில இடங்களைத் தவிர இந்தியா முழுவதும் அகிம்சையே கடைப்பிடிக்கப்பட்டது. இந்தியா முழுவதையும் ஒற்றுமைப்படுத்துவதற்கு உப்பு சத்தியாக்கிரகம் போன்ற ஓர் எளிய சத்தியாக்கிரகம் தான் வெற்றிதேடித் தரும் என்பதையுணர்ந்து காந்தியடிகள் செயல்பட்டார். உப்புசத்தியாக்கிரகத்தைப் பற்றிக் கேலிசெய்த அரசாங்கம், இதை நன்கு உணர்ந்தது. மக்கள் ஒன்றுபட்டுவிட்டால், பின்னர் எந்தப் பெரிய சத்தியாக்கிரகத்தையும் செய்யலாம்

என்பதையும் அரசு உணர்ந்து திகில் அடைந்தது. மிகவும் பயந்து இறுதியாக மே 5-ஆம் தேதி காந்தியைத் தண்டிக்குஅருகில் கைது செய்தனர். கைது செய்யப்படுவதற்கு முன்பு சத்தியாக்கிரகத்தின் அடுத்தபடியான, தர்சனாவில் உள்ள உப்பு மண்டியை முற்றுகை செய்வது என முடிவு செய்திருந்தார். மே 21-ஆம் தேதி, இம்முற்றுகையை அகிம்சை முறையில் இமாம் சாகிப் என்பவர் தலைமையில் சத்தியாக்கிரகிகள் செய்தனர். தலைவர்கள் கைது செய்யப் பட்டனர். தொண்டர்கள் அடித்து நொறுக்கப்பட்டனர். இதை நேரில் கண்ட அமெரிக்க நிருபர் வெப்மில்லர் "நான் 22 நாடுகளில் 18 வருடங்களாக நிருபராகப் பணியாற்றி வருகின்றேன். ஆனால் தர்சனாவில் நடந்தது போலக் கொடூரக் காட்சியைக் கண்டதேயில்லை. சில சமயங்களில் காட்சி மிகவும் தாங்க முடியாததாக இருந்ததால், தலையைத் திருப்பிக் கொள்ள வேண்டியதாயிருந்தது. ஆனால் தொண்டர் களின் கட்டுப்பாடு வியப்பானதொன்றாகும். காந்தியின் அகிம்சைத் தத்துவத்தில் அவர்கள் மிகவும் ஊறியிருந்தனர் என்பது வெளிப்படையாகத் தெரிந்தது" என்று கூறுகின்றார்.

இதற்கிடையில் காங்கிரஸ் கமிட்டி சட்டமறுப்பு இயக்கத்தை விரிவுபடுத்தியது. காடு சம்பந்தப்பட்ட சட்டங்களை மீறுவதும், ரயத்துவாரி வரிகளைக் கட்டமறுப்பதும் வெளிநாட்டுத் துணிகள், வங்கிகள், இன்சூரன்ஸ், கப்பல் கம்பெனிகள் ஆகியவற்றைப் பகிஷ்கரிப்பதும் அடுத்தகட்ட வேலைகளாகச் செய்யப்பட்டன.

வைஸ்ராய் பல அவசர காலச் சட்டங்களைக் கொண்டு வந்தார். இதனால் அதிகாரிகட்கு மிகுந்த அதிகாரம் கொடுக்கப்பட்டது. காங்கிரஸின் திட்டங்கள் நசுக்கப்பட்டன. காந்தியடிகளைக் கைது செய்தது இயக்கத்திற்குத் தளர்ச்சியைத் தராமல், உற்சாகத்தைக் கொடுத்தது. இதை அரசாங்கம் மிகக் குறைவாகப் பிரச்சாரம் செய்தாலும் மக்கள் மீது காங்கிரஸ்

கொண்டிருந்த பிடிப்பை அரசு நன்கு உணர்ந்தது. இதைப் பிரைல்ஸ் போர்டு என்பவர், ''ரிபல் இந்தியா'' என்ற புத்தகத்தில் எழுதியுள்ளார். நகரப்புறங்களில் காங்கிரசிற்கு மிகுந்த ஆதரவு இருந்தது. காங்கிரஸ் தொண்டர்கட்கும் மறியல் செய்பவர்க்கும் மக்கள் இலவசமாக உணவளித்தனர். வியாபாரத் துறையிலும் காங்கிரசிற்கு நல்ல செல்வாக்கு இருந்தது. அழிவு உறுதியாக இருந்தாலும் பல வியாபாரிகள் இயக்கத்தில் கலந்து கொள்ளத் தயாராக இருந்தனர். சுருக்கமாகச் சொன்னால், அரசாங்கத்தைவிடக் காங்கிரஸ் கையில்தான் அதிகாரம் இருந்தது என்று கூறலாம்.

காந்தியடிகள் ஏரவாடாச் சிறையில் இருந்தார். சிறை செய்யப்பட்ட ஒரு வாரத்திற்குப் பிறகு, இர்வின் பிரபு இந்தச் சட்டமறுப்பு இயக்கம், பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவில் செய்யவிருந்த அரசியல் அமைப்புச் சீர்திருத்தங்களை நிறுத்தாது என்று கூறினார். இதற்காக லண்டனில் வட்ட மேஜை மாநாடு கூடியது. காங்கிரஸ் கலந்து கொள்ளவில்லை.

தண்டியாத்திரையும் அதையொட்டி நடைபெற்ற சட்ட மறுப்பு இயக்கமும் இந்தியாவின் சுதந்திரத்திற்கு அடிப்படையாகும். காந்தியடிகள், மக்கள் அகிம்சை வழியில் நம்பிக்கை கொண்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தார். இந்திய மக்கள் ஒன்றுபட்டால் எதையும் சாதித்து விடலாம் என்பதற்கு இதுசான்றாகும்.

# 6. இந்தியாவிற்கு வெளியே நடந்த அகிம்சை வழி எதிர்ப்புகள்

## *1. ஹங்கேரி :*

காந்தியடிகளின் காலத்திற்கு முன் நிகழ்ந்த சத்தியாக்கிரகங்களில் இதற்குத் தனியிடம் உண்டு. இது பத்தொன்பதாம் நூற்றாண்டில் நடந்ததாகும்.

ஹங்கேரிக்கும், ஆஸ்திரியாவுக்கும் உள்ள பழைய ஒப்பந்தத்தின் கோட்பாடுகளை மீறி, ஹங்கேரியை, அந்நாட்டு அரசன் பிரான்ஸ் ஜோசப் ஆஸ்திரியாவுக்கு அடிமைப்படுத்தினான். ஹங்கேரி நாட்டு மிதவாதிகள் இவனை எதிர்ப்பதற்கு வலுவற்றிருந்தனர். பிற நாடுகளிலிருந்து உதவியும் கிடைக்கவில்லை.

இந்நிலையில் பெரங் டீக் (Frenck Deak) என்ற கத்தோலிக்க நிலச்சுவான்தார் எதிர்ப்புத் தெரிவித்தார். **அநீதிகட்கும் கொடுமைகட்கும் எதிர்ப்புத் தெரிவிக்காத நாடு, தன்னைத் தானே அடிமைப்படுத்திக் கொள்கிறது. அந்நாடு அழிவது உறுதி என்று கூறினார்.**

காந்தியடிகளின் நிர்மாணத்திட்டம் போன்று, சுயேச்சையான கல்வி, விவசாயம், தொழில், ஆஸ்திரிய அரசினை ஏற்க மறுத்தல், ஆஸ்திரிய நாட்டுப் பொருட்களை பகிஷ்கரித்தல், வன்முறையைத் தவிர்த்தல் ஆகிய வழிகள் மூலம் போராட்டம் நடத்த டீக் முயன்றார். ஆயுதம் தாங்கிய படைக்கு எதிராக, ஆயுதமற்ற நாம் அகிம்சை வழியில்தான் போராட வேண்டும். துன்பப்பட வேண்டியது தேவையானால், பெருமையோடு அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என அறிவுறுத்தினார்.

டீக் கூறிய வழிகள் ஹங்கேரி முழுவதும் பின்பற்றப் பட்டன. மக்கள் வரிப் பணத்தைக் கொடுக்கவில்லை. இதனால், ஆஸ்திரிய அரசு மக்களின் உடைமைகளைப் பறித்து ஏலமிட்டது. ஆனால் பொருட்களை வாங்குவதற்கு யாரும் முன் வரவில்லை. ஆகவே, ஆஸ்திரியாவிலிருந்து ஆட்களைக் கொண்டு வந்து பொருட்களை வாங்க வைத்தனர். இதனால் அரசுக்குச் செலவினம் மிகுதியாயிற்று.

படைவீரர்கட்குக் குடியிருப்பு, உணவு வசதிகள் செய்து தரவேண்டுமென்று ஹங்கேரி மக்களை அரசினர் கட்டாயப்படுத்தினர். மக்கள் படை வீரர்களை ஏற்றுக் கொண்டு, உணவு இருப்பிட வசதிகள் அளித்தனர். ஆனால் அவர்களை மிக இழிவாக நடத்தினர். அதனால் படைவீரர்களே பொது மக்களின் வீடுகளில் தங்குவதற்கு எதிர்ப்புத் தெரிவித்தனர்.

பகிஷ்காரம் சட்ட விரோதமாகக் கருதப்படும் என்று அரசு அறிவித்தது. மக்கள் இதற்கு அஞ்சவில்லை. தொடர்ந்து பகிஷ்காரம் நடந்தது. பலர் சிறையிடப் பட்டுச் சிறைச்சாலைகள் நிரம்பி வழிந்தன. பாராளுமன்றத்துக்குப் பிரதிநிதிகளை அனுப்பி வைக்க, ஹங்கேரி மக்கள் மறுத்தனர்.

ஆஸ்திரியர்கள் உடன்பாட்டுக்கு வந்து கைதிகளை விடுதலை செய்தனர். ஓரளவிற்குச் சுய ஆட்சி தர முன் வந்தனர். ஆனால் ஹங்கேரி மக்கள் பூரண சுய ஆட்சியைக் கேட்டனர். பிரான்ஸ் ஜோஸப் கொண்டு வந்த கட்டாய இராணுவச் சேவையினையும் அவர்கள் எதிர்த்தனர்.

முடிவாகப் பல போராட்டங்களுக்குப் பின்னர் 1867 பிப்ரவரி 18-இல் அரசன் விட்டுக் கொடுத்தான். ஹங்கேரி தன் அரசியலமைப்பைப் பெற்றது.

வெளிப்படையாக வன்முறைகளைப் பயன்படுத்தா விட்டாலும், உள்நோக்கத்தில் ஓரளவுக்கு வன்முறை இருந்தது. அகிம்சைத் தத்துவத்தை முழு அளவில் புரிந்து

செயல்படுத்தவில்லை. ஆனால் காந்தியடிகட்கு முன்னால் வெற்றிகரமாக நடத்தப் பெற்ற அகிம்சைப் போராட்டத்திற்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டாகும். வரிகொடாமை, பகிஷ்கரிப்பு போன்ற எதிர்ப்புகளில் ஈடுபடுவது மட்டுமன்றி, நிர்மாணத் திட்டங்களான சுயேச்சைக் கல்வி, விவசாயம் போன்றவற்றிலும் ஈடுபட்டது ஒரு சிறப்பான அம்சமாகும்.

## *2. டென்மார்க் 1940-45 :*

ஜெர்மானியர்கள் 1940 ஏப்ரலில், டென்மார்க்கை முற்றுகையிட்டனர். டென்மார்க் அரசருக்கும், முதல் மந்திரிக்கும் ஒரு மணி நேர இடைவெளி கொடுத்து, "அடி பணியுங்கள் அல்லது அழிவை ஏற்றுக்கொள்ளுங்கள்" என்று வற்புறுத்தினர். அரசனும் முதன் மந்திரியும் ஜெர்மானியர்களை எதிர்த்துப் போரிட வேண்டாம் என மக்கட்கு அறிவித்தனர். ஜெர்மானியர்கள் டென்மார்க்கில் ஒரு கூட்டணி அமைத்தனர். டென்மார்க்கின், அரசியல் அமைப்பில், தலையிடாக் கொள்கையின் மூலம் டென்மார்க் மக்களின் ஆதரவை நாஸீஸத்திற்குப் பெற முயன்றனர். டென்மார்க்கின் விவசாயத்தினைப் பயன்படுத்தவும் முயன்றனர். ஜெர்மானிய வீரர்களை ஒழுங்காக நடந்து கொள்ளுமாறு அவ்வரசு கட்டளையிட்டது.

சில காலத்திற்குப் பிறகு, மெதுவாக நாஸி கொள்கைகளை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினர். டென்மார்க் அரசன் வீதிதோறும் சென்று, மக்களை உற்சாகப்படுத்தி, ஜெர்மானியர்க்கு அஞ்சவேண்டாமென்று கூறினான். 1940-ஆம் ஆண்டு இறுதியில் டென்மார்க் பொதுக் கட்டிடத்தில், ஸ்வஸ்திக்கா சின்னம் பொறிக்கப்பட்ட ஜெர்மானியக் கொடி நாஸிகளால் பறக்கவிடப்பட்டது. அரசன் இதற்கு எதிர்ப்புத் தெரிவித்தான். ஆனால், நாஸி அதிகாரிகள் இந்த எதிர்ப்பினை அலட்சியம் செய்தனர். ஒரு படை வீரன் மூலம் அக்கொடியினை அகற்றுவேன் என்று அரசன் கூறினான். கொடியை அகற்றுபவன் சுடப்படுவான் என்று

அதிகாரிகள் கூறினர். உடனே, அரசனே அக்கொடியை இறக்க முன்வந்தான். அதிகாரிகள் கொடியை இறக்கினர். இச்செய்தி நியூயார்க் டைம்ஸ் என்ற பத்திரிகையில் வெளியிடப்பட்டது.

ஒருவரையும் கலந்து ஆலோசிக்காது, ஒரு உடன் படிக்கையில் கையொப்பமிட முதன் மந்திரியை வற்புறுத்தினர். டென்மார்க் அரசு இந்த ஒப்பந்தத்தினை ஏற்க மறுத்தது. டென்மார்க் மக்களைத் தங்கள் வழிக்குக் கொண்டு வருவதில் நாஸிகள் தோல்வியடைந்தனர். மக்கள் அவர்களுடன் ஒத்துழைக்க மறுத்தனர். வன்முறையில் இறங்கவில்லை.

டென்மார்க் மக்கள், யூதர்களை எதிர்க்குமாறு கட்டாயப்படுத்தப்பட்டனர். யூதர்களை அவமானப்படுத்தும் வகையில், 'அவர்கள் மஞ்சள் நிற நட்சத்திரச் சின்னம் அணிய வேண்டும், சேரிகளில் வாழவேண்டும்' என்று கட்டளையிடப் பட்டனர். அரசன் அதற்கு எதிர்ப்புத் தெரிவித்தான். ''நானும் என் குடும்பத்தினரும் நட்சத்திரச் சின்னத்தை மதிப்பிற்குரிய சின்னமாகக் கருதி அணிந்து அவர்கள் குடியிருக்கும் சேரியில் குடியேறுவோம்'' என்று அரசன் அறிவித்தான். இது மக்களிடையே, யூதர்கள் பால் அன்பை வளர்த்தது. மாபெரும் யூதர் கூட்டத்தில் அரசன் கலந்து கொண்டான். இவ்வாறு ஜெர்மானியரின் திட்டங்கள் மக்களால் புறக்கணிக்கப்பட்டன. 1943 மார்ச் மாதத்தில் டென்மார்க் பாராளுமன்ற இடைத் தேர்தல் நடந்தது. நாஸிகட்கு எதிராக 95 சதவீத மக்கள் வாக்களித்தனர்.

மக்களிடையே எதிர்ப்பு அதிகரிக்கத் தொடங்கியது. அவர்கள் வன்முறைகளில் இறங்கத் தலைப்பட்டனர். வன்முறையை விடவேண்டுமென்று மக்களை அரசன் வேண்டிக் கொண்டான். ஆனால் பிரிட்டிஷ்காரர்கள் மக்களை அழிவுச் செயல்களில் இறங்குமாறு தூண்டி ஆயுதங்களும் வழங்கினர். 1943, ஆகஸ்ட் மாதத்தில் ஜெர்மன் படை வீரருக்கும், டென்மார்க் மக்களுக்கும் இடையே ஒடன்ஸி என்னுமிடத்தில் போர் நிகழ்ந்தது. எப்ஸ்ஜோக் என்னும்

இடத்தில் ஹர்த்தால் நடத்தப் பெற்றது. நாஸிகட்குப் பயன்படக் கூடாது என்று கருதி டென்மார்க் கப்பல்களை டென்மார்க் மக்களே அழித்தனர்.

அரசனும் அவனது குடும்பத்தினரும் வீட்டிலேயே சிறை வைக்கப்பட்டனர். பலர் கொல்லப்பட்டனர். டென்மார்க் மக்கள் யூதர்களைப் பாதுகாப்பதில் தீவிரமாக இருந்தனர். இரகசியமாக யூதர்கள் ஸ்வீடன் நாட்டிற்குக் கொண்டு செல்லப்பட்டனர்.

நாஸி ஆதரவு அரசினை அமைக்க அரசன் மறுத்தான். ''அமைதி வந்து கொண்டிருக்கிறது மற்ற நாடுகளில் நம்முடைய கோரிக்கைகட்காக, நண்பர்கள் போராடிக் கொண்டிருக்கின்றனர். ஜெர்மானியர்கள் இங்கிருக்கும் வரை புதிய அரசு அமைப்பதற்கு நான் கையெழுத்திட மாட்டேன். இதுவரை நான் கையெழுத்திட்டதெல்லாம் வற்புறுத்தலின் பேரில் செய்யப்பட்டதாகும். கடவுள் நம் நாட்டைக் காப்பாற்றட்டும்'' என்று டென்மார்க் அரசன் டென்மார்க் பிஷப்பின் மூலம், மக்கட்கு அறிவித்தான். இவ்வாறு டென்மார்க் மக்கள் நாஸிகளை எதிர்த்தனர்.

எந்தவித முன்னேற்பாடும் கிடையாது. போதிய பயிற்சி இல்லாததால், முழுவதும் அகிம்சை கடைப்பிடிக்கப் படவில்லை. ஆனால் கொடூரமான நாஸிகட்கு எதிராக, சிறந்த முறையில் உறுதியாக, இரண்டரை வருடங்களாக அகிம்சை வழியை வெற்றிகரமாகக் கையாண்டனர்.

## *3. நார்வே ஆசிரியர்கள் (1940-42):*

டென்மார்க் அருகில் நார்வே இருக்கின்றது. 1940 ஏப்ரலில் நாஸிகள் நார்வேயையும் ஆக்ரமித்தனர். நார்வே மக்கள் இரண்டு மாதம் போராட்டம் நடத்தினர், ஆனால் தோல்வியடைந்தனர். நாஸி கருத்துக்களில் பற்றுக் கொண்ட,

விட்கன் குஸிலிங் என்னும் நார்வே நாட்டுக்காரன் சர்வாதிகாரியாக நியமிக்கப்பட்டான். நார்வே நாட்டு அரசன் இலண்டனுக்கு ஓடிவிட்டான். மக்கள் தலைவர்கள் இல்லாமலும், குழப்பத்திலும் எவ்வாறு எதிர்ப்பது என்று தெரியாமல் திணறினர்.

திடீரென்று எந்தவித முன்னேற்பாடும் இல்லாமல் பள்ளிமாணவர்கள், ஒற்றுமையின் சின்னமாக, பேப்பர் கிளிப் அணிந்தனர். இது தடுக்கப்பட்டது. பின்னர், நாணயங்கள், பூக்கள், சிகப்புத் தொப்பிகள், உருளைக் கிழங்குகள் போன்றவற்றை சின்னங்களாக அணியத் தொடங்கினர். ஆஸ்லோ நகரில் தலைமையலுவலகத்தைக் கொண்டு, இரகசியக் குழுவொன்று உருவாகியது.

விளையாட்டு மன்றங்களில் உள்ள இளைஞர்களால் முறையான எதிர்ப்பொன்று தெரிவிக்கப்பட்டது. உடனே சர்வாதிகாரி இம்மன்றங்களைக் கலைத்தான். சட்டங்களை மாற்றுவதற்கு எதிர்ப்பு தெரிவித்து, தலைமை நீதிமன்ற உறுப்பினர்கள் இராஜினாமாச் செய்தனர். ஆசிரியர்களும், மத குருமார்களும் சாத்வீகப் புரட்சியில் ஈடுபட்டனர்.

ஹேக்கன் ஹால்ம்போ என்ற ஆசிரியர், காந்தியடிகளின் போராட்ட முறைகளை அறிந்திருந்தார். இரகசிய அச்சகம் தொடங்கப்பட்டது. ஹால்ம்போவிடம் போராட்டத்திற்கான பொறுப்புக்கள் ஒப்படைக்கப்பட்டன.

1941, ஜூன் மாதத்தில் குஸிலிங் ஆசிரியர் சங்கத்தைக் கலைத்தான். நாஸி தத்துவங்களை அவனுடைய அரசாங்கம் அமுலுக்குக் கொண்டு வந்தது. குஸிலிங்கின் படம் எல்லாப் பள்ளிகளிலும் இருக்க வேண்டுமென ஆணையிடப்பட்டது. மாணவர்களும் ஆசிரியர்களும் இதை எதிர்த்தனர். 1942, பிப்ரவரி மாதத்தில், முசோலினி நடத்தின அரசாங்கத்தைப் போன்ற ஒரு அமைப்பினைக் கொண்டு வர குஸ்லிங் முயன்றான். அதற்கு அடிப்படையாக, இரகசிய போலீஸ்களைத்

தலைவர்களாய்க் கொண்ட புதிய ஆசிரியர் சங்கங்கள், புதிய இளைஞர் கழகங்கள் அமைக்கப்பட்டன. இளைஞர் கழகங்களில் பத்து முதல் பதினெட்டு வயது வரையுள்ள அனைவரும் கட்டாயமாகச் சேரவேண்டுமென்று ஆணையிடப்பட்டது.

ஆசிரியர்கள் இரகசிய, சட்டவிரோதச் சங்கங்களை அமைத்தனர். நாஸ் ஜானல் சாம்லிங் என்ற குஸ்லிங்கின் கட்சியில் யாரும் சேரக்கூடாது. பள்ளியில் கட்சிப் பிரச்சாரங்கள் செய்வதை எதிர்க்க வேண்டும். பள்ளி அதிகாரிகள் தவிர, மற்றவரிடமிருந்து வரும் கட்டளைகளை ஏற்கக் கூடாது. நாஸ் ஜானல் சாம்லிங் இளைஞர் இயக்கத்திற்கு ஒத்துழைப்புத் தரக் கூடாது என்ற நான்கு கருத்துக்களையும், எட்டாயிரம் முதல் பத்தாயிரம் ஆசிரியர்கள் 1942, பிப்ரவரி 20-ஆம் தேதியன்று தனித்தனியாக அரசாங்கத்திற்கு எழுத்து மூலம் தெரிவித்தனர்.

பிப்ரவரி, 24-இல், நாஸ் ஜானல் சாம்லிங் இயக்கத்தை எதிர்த்து, பிஷப்புகள் தம் பதவிகளை இராஜினாமாச் செய்தனர். 150 பல்கலைக் கழக ஆசிரியர்கள் அதே காரணத்திற்காக எதிர்ப்புத் தெரிவித்தனர்.

பிப்ரவரி 25-இல் ஆசிரியர்களின் எதிர்ப்புக் கடிதத்தை இராஜினாமாக் கடிதமாகக் கருதுவோம் என்று அரசாங்கம் பயமுறுத்தியது. எரிபொருள் இல்லை என்ற பொய்யான காரணத்தைக் கூறிக் கல்வி நிலையங்களை மூடினர். பலவிடங்களில் இருந்தும் வந்த எரிபொருள் உதவியினை ஏற்க மறுத்தனர். மார்ச் 7-இல் நார்வேயின் வடக்குப் பகுதியில் சமூக சேவை செய்வதற்கு 300 ஆசிரியர்கள் தயாராக இருக்க வேண்டும் என்று அறிவித்தனர். அரசின் திட்டங்கட்கு ஆசிரியர்கள் பணிவதற்கு மார்ச் 15-ஆம் தேதி, இறுதிநாள் என்று அறிவிக்கப்பட்டது. அந்நாளில் ஆசிரியர்கள் பணியவில்லை. மார்ச் 20-இல் பலவிடங்களிலும் பரவலாக

1000 ஆசிரியர்கள் சிறை செய்யப்பட்டனர். ஹால்ம்போவும் சிறைசெய்யப்பட்டார்.

சிறை செய்யப்பட்டதில் 650 ஆசிரியர்கள் தீவிர முகாமிற்கு அனுப்பப்பட்டனர். அவர்களது குடும்பங்கள் மறைமுகமாக, இரகசியக் குழுக்களால் பாதுகாக்கப்பட்டன. முகாமில் மிகுந்த அச்சுறுத்தலுக்குப் பின் மூவர் மட்டுமே பணிந்தனர்.

மேலும் சில ஆசிரியர்களைச் சேர்த்து, மொத்தம் 687 ஆசிரியர்கள். மார்ச் 31-ஆம் தேதி, மற்றொரு தீவிர முகாமிற்கு அனுப்பப்பட்டனர். இங்கு இவர்கள் கொடுமையாக நடத்தப்பட்டனர். நான்கு துண்டு ரொட்டியும் ஒரு கோப்பை நீருமே ஒரு நாள் ஆகாரமாகக் கொடுக்கப்பட்டது. கடினமான வேலை வாங்கப்பட்டது. ஆனால் வயதான ஆசிரியர்கள் கூடப் பணிய மறுத்தனர்.

ஏப்ரல் 8-இல் பள்ளிகள் திறக்கப்பட்டன. பிற ஆசிரியர்கள் ஒற்றுமையாக இருந்தனர். மாணவர்கட்கும் நிலைமை விளக்கப்பட்டது.

சிறை செய்யப்பட்ட ஆசிரியர்கள் இருவர் நிமோனியாவினால் பாதிக்கப்பட்டனர். மற்றொருவர் மிகவும் உடல் நலம் குன்றிப்போனார். இந்த நிலையிலும் ஏன் பணிய மறுக்கிறாய் என்று கேட்டதற்கு, நான் ஒரு நார்வே நாட்டுக்காரன் என்று அந்த ஆசிரியர் பதில் கூறினார். மிகுந்த கொடுமைக்குப் பிறகு 32 பேர் மட்டுமே பணிந்தனர். இதனால் கொடுமைகள் மிகுந்தன. பணியவேண்டாமென மனைவியர், தங்கள் கணவன்மார்களுக்குக் கூறினர். ஒரு வாரத்திற்குப் பின்னர், 490 ஆசிரியர்கள் டிராண்ட் ஹீம் என்னும் இடத்திற்குக் கொண்டு செல்லப்பட்டனர். அங்கிருந்து ரஷ்ய எல்லைக்கு அருகில் உள்ள, கர்க்கீன்ஸ் என்னுமிடத்திற்கு

நூறுபேர் மட்டுமே கொள்ளக்கூடிய படகில், அடைக்கப்பட்டுக் கொண்டு செல்லப்பட்டனர். மீதமுள்ள 153 ஆசிரியர்களும், சில நாட்களில் அதே இடத்திற்குக்கொண்டு செல்லப்பட்டனர். அங்கு மிகுந்த வேலை வாங்கப்பட்டது. ஒருவர் இறந்தார்; இருவர் கண் இழந்தனர். பலர் கைகால் இழந்தனர். கொடுமை அதிகரிக்க, ஆசிரியர்களிடம் அஹிம்சை எதிர்ப்பு மிகத் தொடங்கியது.

1942, மே மாதம் 7-ஆம் நாளில் ஆஸ்லோவில், பள்ளிகள் திறக்கப்பட்டன. பள்ளிக்கு வந்த ஆசிரியர்கள் அரசு அமைத்திருக்கும் சங்கங்களில் சேர மறுத்தனர். குஸ்லிங் கடுங்கோபம் அடைந்தான். நீங்கள் என்னுடைய திட்டங்களைப் பாழாக்கிவிட்டீர்கள் என்று கூறி எல்லா ஆசிரியர்களையும் சிறை செய்தான். அன்று விடுமுறையில் இருந்த ஆசிரியர்களும், தாமே சிறை சென்றனர். இவ்வாறு சர்வாதிகாரியின் திட்டங்களனைத்தும் அகிம்சை வழியில் முறியடிக்கப்பட்டன. ஆகஸ்ட் மாதத்தில் ஐம்பதுபேரும், செப்டம்பர் 16இல் நூறு பேரும், நவம்பர் 4இல் மீதமுள்ள நானூறு பேரும் எட்டுமாதக் கடும் உழைப்பிற்குப் பின்னர் வீட்டிற்கு அனுப்பப்பட்டனர்.

இவ்விதம், எதிர்ப்புக்குத் தயாராக இல்லாவிட்டாலும், அநீதியை எதிர்க்க வேண்டுமென்ற ஆவலினால் உந்தப்பட்டு அகிம்சை முறையில் எதிர்த்தனர். மக்களிடம் சுயமரியாதை, தன்னம்பிக்கை, வீரம், ஒற்றுமை, சுதந்திரத் தாகம் இவை நிரம்ப இருந்ததால், அகிம்சைப் போராட்டத்தை வெற்றிகரமாக நடத்த முடிந்தது. இப்போராட்டத்தினை, லாண்டு, ரூஸ்வெல்ட் போன்றவர்கள் புகழ்ந்து பேசியுள்ளனர்.

### *4. மாண்ட்கோமரி பஸ் சத்தியாக்கிரகம் (1955-56) :*

அமெரிக்காவின் தெற்குப்புறப் பகுதிகளில் பல இடங்களிலும், பழக்கத்தினாலும், சட்டங்கள் மூலமும்

நீக்ரோக்கள் வெள்ளையர்களிடமிருந்து ஒதுக்கப்பட்டார்கள். நீக்ரோக்களுக்கு ஓட்டுரிமை மறுக்கப்பட்டது. அவர்கள், காரணமின்றிச் சிறை செய்யப்பட்டனர்; தண்டிக்கப்பட்டனர்; கொல்லப்பட்டனர். வெள்ளையர்களின் உயர்வு மனப் பான்மையும், நீக்ரோக்கள் அடிமையினத்தைச் சார்ந்தவர் என்ற எண்ணமும், வெள்ளையரைவிட நீக்ரோக்கள் அதிகரிக் கின்றனர் என்பதுமே, நீக்ரோக்கள் புறக்கணிக்கப்படுவதற்குக் காரணங்களாகும்.

நீக்ரோக்கள் பல போர்களிலும், விளையாட்டுக்களிலும் ஈடுபட்டுத் தங்கள் திறமையைக் காட்டினர். 1954-இல் அமெரிக்கத் தலைமை நீதிமன்றம், பொதுப் பள்ளிகளில் நீக்ரோக்கள் ஒதுக்கப்படுவது சட்டவிரோதம் என முடிவு செய்தது.

அலபாமா அமெரிக்காவின் தெற்குப்புறத்திலுள்ள ஒரு மாநிலமாகும். அங்குக் கடுமையான இன வெறுப்புக் காட்டப்பட்டது. பஸ்ஸில் உள்ள இருப்பிடங்களில் வேற்றுமை காட்டப்பட்டது. முதல் நான்கு ஆசனங்கள் வெள்ளையர் களுக்கு உரியன. இறுதி மூன்றும் நீக்ரோக்களுக்காக ஒதுக்கப்பட்டன. ஆனால், முன் ஆசனங்கள் நிரம்பிய பின்னர், ஒரு வெள்ளையன் ஏறினால், நீக்ரோக்கள் காலி செய்து எழுந்து நிற்க வேண்டும். இதற்கான கட்டளையும், கேவலமான முறையில் மிக அலட்சியமாக இடப்படும்.

1955, டிசம்பர் 1-ஆம் தேதி மாண்ட்கோமரியில், ரோஸா பார்க் என்னும் நீக்ரோப்பெண், ஒரு நாள் உழைப்பிற்குப்பின், வீடு திரும்பினாள். பஸ்ஸில் வெள்ளையர்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்கட்குப் பின், நீக்ரோக்களுக்குரிய இடத்தில் அமர்ந்தாள். பின்னர் சில வெள்ளையர்கள் ஏறினர். அப்பெண்மணியையும், மற்ற மூன்று நீக்ரோக்களையும் எழுந்து நிற்குமாறு கட்டளையிட்டனர். மற்றவர்கள் பணிந்தனர். ஆனால் அப்பெண்மணி, பணிய மறுத்தாள். டிரைவர்

போலீஸைக் கூப்பிட்டு, நகர ஒதுக்குச் சட்டத்தை மீறியதற்காக, அப்பெண்மணியைச் சிறைப் படுத்துமாறு கூறினான். அவளும் சிறைப்பட்டாள். நீக்ரோ சமூகத்தின், மதிப்பிற்குரியவள் அப்பெண்மணி.

இந்நிகழ்ச்சி, நீக்ரோ மக்களை விழிப்படையச் செய்தது. நீக்ரோ தலைவர்களும், மந்திரிகளும், பஸ்களைப் பகிஷ்கரிக்க முடிவு செய்தனர். டிசம்பர் 5, திங்கட்கிழமையை அதற்கு உரிய நாளாக முடிவு செய்தனர். செய்தித்தாள்கள் இதற்கு விளம்பரம் கொடுத்தன.

டிசம்பர் 5 ஆம் நாள் பகிஷ்கரிப்பு முழு வெற்றியடைந்தது. ஐம்பதினாயிரம் பேர் கொண்ட நீக்ரோ சமூகத்தில் ஒருவர் கூடப் பஸ்ஸில் ஏறவில்லை. திருமதி. ரோஸாபார்க் பத்து டாலர் அபராதம் விதிக்கப்பட்டார். இதனை எதிர்த்து உயர்நீதி மன்றத்திற்கு மனுச் செய்தார். பகிஷ்காரம் நடந்த அன்று இரவு, சர்ச்சுகளில் நீக்ரோக்கள், பெருவாரியாகக் கூடினர்.

“பஸ் ஓட்டிகள் அன்பாகவும், மரியாதையாகவும் நடந்து கொள்ள வேண்டும்; முதலில் வருவோர்க்கு முதலிடம் என்ற முறைகளில் பஸ்களில் பிரயாணிகளை ஏற்ற வேண்டும்; நீக்ரோக்கள் அதிகமுள்ள இடங்களில், நீக்ரோக்களால் ஓட்டப்படும் பஸ்களையே விட வேண்டும். இவற்றை சாதிக்கும் வரை அகிம்சைப் போராட்டத்தை நீடிக்க வேண்டும்'' என்று முடிவு செய்தனர். இதற்காக மாண்ட் கோமரி முன்னேற்றக் கழகம் ஒன்று அமைக்கப்பட்டது. மார்ட்டின் லூதர் கிங் என்ற பேரறிஞர் இதற்குத் தலைமையேற்றார். இவர் ஒரு நீக்ரோ அமைச்சர். தோரோ, காந்தியடிகள் ஆகியோர் எழுதிய நூல்களைப் படித்தவர், ‘இராபட்கிரேட்ஸ்’ என்ற ஒரேயொரு வெள்ளையர்தான் இந்த இயக்கத்தில் கலந்து கொண்டார்.

போக்குவரத்து, நிதி, நிர்வாகம், கூட்டம் ஏற்பாடு செய்தல் போன்றவற்றிற்காகப் பல சிறு குழுக்கள் அமைக்கப்பட்டன. போக்குவரத்துக்குழு, நீக்ரோக்களின் நலனுக்காக டாக்ஸிகளை ஓட்டியது. ஆனால் இது தடை செய்யப்பட்டது. பின்னர் பல பெரிய கார்களை வாங்கி ஓட்டினர். இருந்தும் பல ஆயிரம் நீக்ரோக்கள் நடக்க வேண்டியிருந்தது. ''நான் எனக்காக நடக்கவில்லை. என்னுடைய குழந்தைகட்காகவும், பேரக் குழந்தைகட்காகவும் நடக்கின்றேன். உள்ளம் தேய்ந்துபோவதை விட கால்கள் தேய்ந்து போவதையே விரும்புகின்றேன்'' என்று ஒரு வயதான நீக்ரோப் பெண்மணி கூறினாள்.

ஒவ்வொரு கட்டத்திலும், ஏராளமான கூட்டங்கள் சர்ச்சுகளில் நடத்தப்பட்டன. அகிம்சை முறை வலியுறுத்தப்பட்டது. உணர்ச்சிமிகுந்த கட்டங்களில், எவ்வாறு வன்முறையைத் தவிர்த்து நடக்க வேண்டும் என்பது நடித்தும் காட்டப்பட்டது, இவ்வாறு பகிஷ்காரம் சிறந்த முறையில் நடைபெற்று வந்தது.

நீக்ரோக்களின் கார்கட்குரிய இன்சூரன்ஸ் ரத்து செய்யப்பட்டது. ஆனால் லண்டனில் உள்ள, லாயிட்ஸ் கம்பெனியிடமிருந்து, நீக்ரோக்கள் இன்சூரன்ஸ் பெற்றனர். நீக்ரோ டிரைவர்களைப் பொய்க் காரணம் கூறிக் கைது செய்தனர். நீக்ரோக்களின் ஒற்றுமையைக் குலைப்பதற்காக வதந்திகளைப் பரப்பி பத்திரிகைகளில் வெளியிடவும் செய்தனர்.

டாக்டர் கிங் கைது செய்யப்பட்டார். சிறைக்கு முன்னால் நீக்ரோக்கள் பெருந்திரளாகக் கூடினர். பின்னர் கிங் விடுதலை செய்யப்பட்டார். 1956, ஜனவரி 30-இல் கிங் வீட்டிற்கு முன்னால் ஒரு குண்டு வீசப்பட்டது. இரு நாட்கட்குப் பின் நிக்ஸன் என்ற நீக்ரோத் தலைவர் வீட்டிற்கு முன்னும் குண்டு எறியப்பட்டது. அதிர்ஷ்டவசமாக ஒருவரும்

காயமடையவில்லை. இதையெதிர்ப்பதற்கு வன்முறையில் இறங்க வேண்டாம் என்று கிங் வலியுறுத்தினார். வெள்ளையர்களின் வன்முறைச் செயல்கள் சத்தியாக் கிரகத்தினை உறுதிப்படுத்தின. உலகத்தில் பல பாகங்களில் இருந்தும் பண உதவியும், ஆதரவுக் கடிதங்களும் வந்து குவிந்தன.

அரசாங்கம் பல நீக்ரோத் தலைவர்களைக் கைது செய்தது. கிங்கிற்கு 500 டாலர் அபராதம் விதித்தனர். இதை எதிர்த்து அவர் உயர்நீதி மன்றத்திற்கு மனுச் செய்தார்.

அமெரிக்க பெடரல் கோர்ட்டில் பஸ் ஆசனப் பிரிவுகளை நீக்க வழக்கறிஞர்கள் மனுச் செய்தனர். அமெரிக்க அரசியலமைப்பின் பதினாலாவது திருத்தத்திற்கு எதிராக இப்பிரிவினையுள்ளது என்று கூறினர். மூன்று வாரங்கட்குப் பின்னர் பெடரல் நீதிபதிகள் அலபாமா பஸ் ஆசனப் பிரிவினைச் சட்டங்கள் அரசியல் அமைப்பிற்கு விரோதம் எனத் தீர்ப்பளித்தனர். இதை எதிர்த்து அலபாமா நகரம் தலைமை நீதிமன்றத்தில் மனுச் செய்தது. பகிஷ்காரம் நீடித்தது.

1956 நவம்பரில், நீக்ரோ கார் ஓட்டும் அமைப்புக்களை அடக்குவதற்காக, அலபாமா நகரம், நீதி மன்றத்தில் மனுச் செய்தது. பலநீக்ரோ தலைவர்கட்கு எதிராகவும், சர்ச்சுகட்கு எதிராகவும் வழக்கு தொடரப்பட்டது.

அமெரிக்கத் தலைமை நீதிமன்றம், பெடரல் கோர்ட் செய்த முடிவை உறுதி செய்து, பஸ் ஆசனப் பிரிவினைகள் இருக்கக் கூடாது எனத் தீர்ப்பளித்தது. அன்று இரவு எட்டாயிரத்துக்கும் மேற்பட்ட நீக்ரோக்கள் மிக உற்சாகத்துடன் கூட்டத்தில் கலந்து கொண்டனர். அரசாங்க உத்தரவு

வரும்வரை பஸ்ஸிற்குச் செல்ல வேண்டாம் என்றும் கூறப்பட்டது. பின்னர் உத்தரவு வந்த பின் பஸ்களில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டது. அகிம்சை வழி வலியுறுத்தப்பட்டது.

1956, டிசம்பர் 21இல் அரசினர் ஆணை வந்தது. ஒரு வருடப் போராட்டம் முற்றுப் பெற்றது. ஒவ்வொரு பஸ்ஸிலும் நீக்ரோக்களைத் தைரியப்படுத்துவதற்காக, இரண்டு நீக்ரோ அமைச்சர்கள் பயணம் செய்தனர். அமைதி நிலவியது. ஆனால் பத்து நாட்களுக்குப் பிறகு வன்முறை தலையெடுத்தது. வெள்ளையர்களால் பஸ்கள் கொளுத்தப் பட்டன. நீக்ரோக்கள் அடித்துக் கொல்லப்பட்டனர். நீக்ரோக்களின் வீடுகளும், சர்ச்சுகளும் குண்டுகளால் தாக்கப்பட்டன. பத்திரிகைகள் இதை எதிர்த்துத் தலையங்கம் எழுதின. ஏழு வெள்ளையர்கள் கைது செய்யப்பட்டனர். வன்முறை நின்றது. பஸ் ஆசனப் பிரிவினையும் ஒழிந்தது.

காந்தியடிகட்குப் பிறகு, இயந்திரமயமான அமெரிக்காவில் வன்முறையைத் தவிர்த்து, அகிம்சை வழியில் வெற்றிகரமாக நடத்தப்பெற்ற போராட்டமாகும் இது. நீக்ரோக்களின் சம உரிமைப் ''போராட்டத்திற்கு இது ஆரம்பமாகும்''* என்று கிங் கூறினார்.

---

* Dr. King Called this as "a stride towards freedom"

# 7. முரண்பட்ட சூழ்நிலைகளும் அகிம்சையும்

### *நல்ல வழி:*

இன்றைய அறிவியல் உலகம் எந்த அளவிற்கு வளர்ந்துள்ளதோ அந்த அளவிற்கு அழிபாடுகளும் பெருகியுள்ளன. வன்முறைகளை வளர்க்கின்ற வாயில்கள் பரவிவிட்டன. சாதிகளும், சமயங்களும், அரசியல் கட்சிகளும் பிளவுகளை வளர்ப்பதில் போட்டியிடுகின்றன. பல ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த கற்கால மனித வாழ்வை விடத் தற்கால வாழ்வு தாழ்ந்து விட்டதோ என்று கருத வேண்டியுள்ளது. இத்தகைய முரண்பாடுகளை அகிம்சை வழியில் தீர்ப்பதே அனைவர்க்கும் நன்மை தரும் செயலாகும்.

### *தற்காலிகத் தீர்வு:*

'கண்ணுக்குக் கண்; பல்லுக்குப் பல்' என்பது போல வன்முறையைக் கையாண்டு சிக்கலுக்குத் தீர்வு காணச் சிலர் துடிப்பர். 'மயிலே மயிலே என்றால் இறகு போடுமா?' என்ற பழமொழியையும் பயன்படுத்துவர். ஆனால் வன்முறையால் தீர்வு காண்பது நிலையான அமைதியாக அமையுமா? பொங்கிவரும் பதனீரில் அரைத்த ஆமணக்கு விதையைப் போட்டால், அது அடங்கிவிடும். ஆனால் சில நிமிடங்களுக்குத்தான். அதற்குப் பிறகு மீண்டும் பொங்கி வடியத் தொடங்கி விடும். அதுபோலத்தான் வன்முறையால் கலவரங்களை அடக்கினால், அவை அடங்கியது போன்ற ஒரு தோற்றம் தெரியுமே தவிர மீண்டும் கிளர்ந்துவிடும்.

### *வன்முறைக்கு வன்முறை :*

ஒருவனை ஒருவன் வன்முறையால் தாக்குகின்றான் என்று வைத்துக் கொள்வோம். தாக்கப்படுபவனும் திருப்பித்

தன் எதிரியை வன்முறையால் தாக்கினால், எதிரி கையாண்ட வழி நியாயமானது தான் என்ற மனத்திடத்தை ஏற்படுத்தியவனாகிறான். கோபம், அச்சம் ஆகிய எந்த உணர்ச்சியைக் காட்டினாலும் வன்முறையாகவே முடியும். எதிரியின் மனத்திட்பத்தை வளர்ப்பதற்கே அவை வகைசெய்யும். ஆகவே, தாக்குகின்றவனும் தாக்கப் படுபவனும் ஒழுக்க மதிப்பீட்டில் ஒன்றாகவே நிற்கின்றார்கள்.

### *வன்முறைக்கு அகிம்சை:*

இனி இன்னொரு நிலையைப் பார்ப்போம். வன்முறையாளன், முற்றிலும் மாறுபட்ட ஒருவனைச் சந்திக்கின்றான்; தாக்குகிறான்; ஆனால் தாக்குண்டவனிடம் அச்சம் காணப்படவில்லை. அடக்கமும் உறுதியும் கொண்டவனாகத் திகழ்கிறான்; தன்னை வன்முறையால் தாக்கியவனை வன்முறையால் தாக்கவில்லை; அடிகளைப் புன்முறுவலோடும்; பொறுமையோடும் பெற்றுக்கொள்கின்றான்; குழப்பத்திற்கான உண்மை நிலைகளை விளக்குகின்றான்; இருவரும் பிரச்சினையை ஆராய வேண்டும் எனச் சொல்லி உண்மையின் தீர்ப்புக்கு அடிபணிவேன் என்றும் சொல்லுகின்றான்; ஒழுக்கத்தின் அடிப்படையிலேயே எதிரியை எதிர்க்கின்றான்; தொல்லைகளை எதிரிக்குக் கொடுக்காமல் தன்மீதே தாங்கிக் கொண்டு சத்தியத்தின் மீது கொண்ட தன்னுடைய பற்றை வெளிப்படுத்தவே விரும்புகின்றான். இவ்வாறு இம்சை முறையை அகிம்சை வழியில் எதிர்க்கின்றான்.

முதலில் இவனைத் தனக்குப் பயன்படுகின்றவன் என்றும், கோழையென்றும் தோல்வியை ஒப்புக்கொள்ளத் தயாராகின்றவன் என்றும் எதிரி எண்ணுகின்றான். ஆனால் இவனுடைய அன்புப் பார்வையும், மற்ற அடையாளங்களும் இவன் அஞ்சா நெஞ்சன் என்பதையே எடுத்துக் காட்டுகின்றன. ஏனென்றால் தாக்குவது எளிதானது; அதற்குப் பல

தேவையில்லை. ஆனால்பழிக்குப் பழி வாங்கும் எண்ணமின்றி எதிர்த்து நிற்பவன் மிகுந்த பலசாலியாகவே இருக்க முடியும்.1

இத்தகைய எதிர்பாராத விளைவுகளால் எதிரிக்கு மிகுந்த வியப்பு ஏற்படுகின்றது. தன்னால் தாக்குண்டவன் கோழை என்று கருதியஎண்ணம் படிப்படியே மறைந்து, ஆவலும் ஆச்சரியமும் அவனுக்கு ஏற்படுகின்றன. ஆவல் மிகுந்து வரும் போது பகைமையும் வெறுப்பும் தாமே நீங்கி விடுகின்றன.2

## ஜூ ஜூட்சு :

ஜப்பானியச் சண்டை முறையான ஜூஜூட்சு பயிற்சி பெற்றவன் போலவே அகிம்சைமுறையில் எதிர்ப்பவன் செயல்படுகின்றான். ஜூஜூட்சு சண்டை போடுகின்றவன் அதி உடற்பலத்தைப் பயன்படுத்தாமல், போராடுகின்றான். இதனைக் கண்ட எதிரி, முதலில் பொதுமக்கள் ஆதரவை இழந்துவிடுகிறான். புதிய சூழலுக்கு ஏற்பத்தான் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பது அவனுக்குத் தெரிவதில்லை. ஆகவே தன்னைப் பாதுகாப்பார் யாருமில்லை என்பதை உணருகின்றான். தன்னம்பிக்கையையும் இழந்து விடுகின்றான் தன்னால் தாக்கப்பட்டவன் துன்பத்தை வலிந்தேற்றுக் கொண்டு தன்மீது காட்டும் பரிவு, பெருந்தன்மை ஆகியவற்றால் தன்னுடைய மனக் கட்டுப்பாடும் மிகுந்து கொண்டே போகின்றது.

## வேற்றுமையில் ஒற்றுமை:

வன்முறையைப் பயன்படுத்தும் இருவரிடையே வேற்றுமையிருந்தாலும் சிக்கல்களைத் தீர்ப்பதற்கு வன்முறை

---

1. "It is easier and requires less courage to atttack than to withstand fire without relation - F.C. Bartlett.

2. "Wonder tends to exclude repugnance, disgust and contempt in relation to its object. - Shand

வழியே சிறந்தது என்று இருவரும் நம்புகின்றனர். இந்த வகையில் இருவருக்குமிடையே ஒற்றுமையைக் காண்கின்றோம். இருவரில் ஒருவன் "வன்முறையை நாடேன்" எனக்கூறிச் செயல் புரிந்தால் மாற்றான் வியப்படைந்து நம்பிக்கையிழப்பது உறுதியாகும்.

**வன்முறையின் வீழ்ச்சிக்குக் காரணங்கள் :**

1. நீடித்த கோபம் ஒருவனுடைய ஆற்றலைக் குடித்துவிடுகின்றது.

2. அவனுக்குள்ளேயே நடைபெறும் மனப் போராட்டத்திலும், அவன் சக்தியின் ஒரு பகுதி அழிகின்றது. அவனுடைய ஆளுமைத் தன்மை பிளவுபட்டு விடுகின்றது.

3. தொடர்ந்து எதிரி வேண்டிக்கொண்டே இருப்பதால் இவன் செயலற்றுப் போகின்றான்.

4. எதிரியை முதன்முதலில் கோழை என்று எண்ணியது தவறு என்பதை உணர்ந்து, மேலும் தவறுகள் செய்யாது விழிப்பாகவே இருக்கிறான்.

5. பொதுமக்களின் ஆதரவு அகிம்சைவாதிக்கே இருப்பதால் இவனுக்குத் தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டுவிடுகின்றது. தன்னுடைய மதிப்பையும் இழந்த நிலையை உணருகின்றான்.

6. ஒழுக்க மதிப்பீட்டில் இவனுக்கும் அகிம்சை வாதிக்கும் பெருத்த வேறுபாடு ஏற்படுகின்றது. தன்னுடைய உடல் வலுவைவிட எதிரியின் மனவலு ஆற்றலுடையது என உணருகின்றான். தன்னுடைய மதிப்பீட்டிலும், முறைகளிலும் அவனுக்கே உறுதியற்ற தன்மை ஏற்பட்டு வியப்பில் ஆழ்ந்துவிடுகின்றான்.

*அகிம்சாவாதியின் நிறைவுகள் :*

1. ஒழுக்கத்தைப் பேணுவதில் ஆர்வம் பெறுகின்றான். அவனுடைய நடத்தை, வன்முறையாளனுக்குப் புதுமையாயும் எதிர்பாராததாயும் அமைந்து விடுகிறது.

2. அவன் வியப்பிற்கு உள்ளாவதில்லை. இத்தகைய போராட்டத்தின் விளைவு என்னவாயிருக்கும் என்பதும் அதை எப்படிச் சமாளிப்பதென்பதும் அவன் அறிந்ததே.

3. அவனுடைய தன்னடக்கமும், கோபமற்ற தன்மையும் ஆற்றலைக் காவல் செய்கின்றன.

4. அவனுக்கிருக்கிற பயிற்சியின் காரணமாக, பிறருடைய ஆலோசனைகளைப் பெறத் தேவையில்லாமற் போய் விடுகின்றது.

5. துன்பங்களைத் துணிந்தேற்றுத் தன்னையே தியாகம் செய்வதற்கு முனைவதால், அகிம்சையில் அவனுக்குள்ள பிடிப்பு வெளிப்படுகிறது.

6. வன்முறையில் நாட்டம் கொள்ளாதிருப்பது எதிரியின் மீது கொண்ட மரியாதையைக் காட்டுகின்றது. இந்த மரியாதை எதிரியைக் கொஞ்சம் கொஞ்சமாக நாணும்படி செய்வதோடு, தனக்கு ஆதரவாகப் பொதுமக்களின் மதிப்பையும் வளர்த்து விடுகின்றது.

# 8. இணங்கச் செய்தல்
# (PERSUATION)

### *அகிம்சையின் ஆற்றல்:*

இராணுவபலமும், ஆக்கிரமிப்புமுள்ள இக்காலத்தில் அன்பு வழியில் இணங்கச்செய்தலும், அகிம்சை வழியில் போராட்டமும் வெற்றிபெறுமா?

அன்பு, அகிம்சா எதிர்ப்பு போன்றவை சிறிய சக்திகளானாலும் வலிமை வாய்ந்தவை. பெரிய மாற்றத்தை விளைவிக்கக்கூடியவை. மனித சமுதாயம் சிக்கலான பல விசைகளால் தாக்கப்பட்டு இயக்கச் சம நிலையில் (Dynamic Equilibrium) உள்ளது. ஒரு சிறு விஷயம் இச்சமுதாயத்தினை மாற்றக்கூடிய சக்தி படைத்தது. சிறிய விசைகளாக இருந்தாலும், திரும்பத் திரும்பச் செயல்படுத்துவதால் மாற்றம் நிகழும், மனிதனுக்கு இவைகளெல்லாம் தெரியவில்லை என்பதால், இவை இல்லை என்பது பொருளன்று, ரேடியோ அலைகள் புயலில் இருந்திருக்கின்றன. ஆனால் கடந்த 85 வருடங்களாகத்தான் மனிதனுக்கு இது தெரியும்.

### *பிரதிபலிப்பு:*

பலவிதத் தூண்டுதலுக்குப் பிரதிபலிப்புப் பின்வருமாறு இருக்கும் என்று கோட்ஸ்சாவ் என்பார் ஆராய்ந்து கூறுகின்றார். மென்மையான தூண்டுதலுக்கு (Slight stimulous) ஒரு திசைப் பிரதிபலிப்பும், நடுத்தர வலிமையுள்ள தூண்டுதலுக்கு முதலில் அதிக வளர்ச்சியும், பின்னால் அதற்கு நேர்மாறாகவும், மிக வலிமையுள்ள தூண்டுதலுக்கு முதலில் மிக அதிகமான வளர்ச்சியும், பின்னால் நிவர்த்தி செய்ய முடியாத பாதகமும் ஏற்படும்.

### அகிம்சை மென்மைத் தூண்டல்:

அகிம்சைப் போராட்டம் ஒரு மென்மைத்தூண்டுதலாகும். எந்தவொரு வளர்ச்சியும் மென்மைத் தூண்டுதலால் தான் நிகழமுடியும். கல்வி, நாகரிகம், போன்றவை மென்மைத் தூண்டுதல் முறையில்தான் வளர்ச்சியடைகின்றன. இயேசு கிறிஸ்துவும், எழுபதின் ஏழுமடங்கு தடவை எதிரியை மன்னிக்கச் சொன்னார். அதாவது பலதடவை அன்பைக் காட்டுவதால் தான் எதிரியிடம் மனமாற்றம் நிகழும் என்பது தெரிகின்றது. வன்முறையில், மென்மைத் தூண்டுதல் கிடையாது. அதில் வளர்ச்சியிருக்காது; மாறுதல் நிகழமுடியாது.

### காலம் தேவை:

திரும்பத் திரும்ப மென்மைத் தூண்டுதலைச் செயல்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் எதிரியினிடம் மனமாற்றம் நிகழும். இதை மறக்கும் போது தான் அகிம்சைப் போராட்டம் வெற்றி பெறுமா? என்ற சந்தேகம் ஏற்படுகின்றது. உடனே வெற்றிகிடைக்கவில்லை என்பதால் முறை தவறு என்று கூறக்கூடாது. மருத்துவத்தொழில் சிறந்த முறையில் வெற்றி காண்பதற்குப் பல வருடங்களாகின்றன. அதைப் பொறுமையோடு ஏற்க மக்கள் தயாராக இருக்கின்றனர். ஆனால் அகிம்சை போராட்டத்தின் மூலம் முழு அளவில் வெற்றி பெறுவதற்குச் சிறிது காலம் தேவையென்றால் மக்கள் இதை நம்ப மறுக்கின்றனர். நூறு வருடங்கள் நேரான வழியில் தளராது பாடுபட்டுக் கிடைத்த சுதந்திரத்திற்குத்தான் மதிப்பு இருக்கும்.

### ஒரே திசை வளர்ச்சி:

வன்முறையால் சமுதாயத்தைச் சீர்திருத்த முடியாது. அவ்வழியில் சீர்திருத்தினால் அது இருதிசைப் பிரதிபலிப்பை உண்டாக்குகின்றன. அதாவது முதலில் பணிந்தாலும் பின்னர்

மக்கள் எதிராக நடக்கின்றனர். ஆனால் அகிம்சை, அன்பு வழியில் இணங்கச் செய்தல் போன்ற மென்மைத் தூண்டுதல்களால் ஒரே திசையில் வளர்ச்சி ஏற்படுகின்றது; எதிர்ப்பு கிடையாது. உதாரணமாக இயந்திரங்கள், மோட்டார் கார் போன்றவை சமுதாயத்தால் மறுக்கப்படவில்லை. மென்மைத் தூண்டுதலால் தான் ஒழுக்கச்சீர்திருத்தம் நிலைத்துநிற்கும். மென்மைத் தூண்டுதலால் வளர்ச்சி ஏற்படுகின்றது. வளர்ச்சியினால் மாறுதல் நிகழ்கின்றது. புதியசக்திகள் உருவாகின்றன. அவைகட்கேற்றாற்போல் மாற்றிக் கொள்ளும் தன்மை மக்களிடம் ஏற்படுகின்றது. போட்டியின்றிப் பலர் உயிர் வாழ்வதற்கு இடம் அளிக்கின்றது. அகிம்சை போன்ற மென்மைத் தூண்டுதல் வன்முறை நிகழ்வதைத் தடுக்கின்றது. அதன் பின்விளைவுகளையும் குறைக்கின்றது.

*அன்புவழி :*

ஒரு குறிப்பிட்ட பிரச்சினையில் அகிம்சாவாதி அன்பு வழியில், மென்மைத்தூண்டுதல் மூலம் மக்களிடமுள்ள தீய கருத்துக்கள், உணர்ச்சிகள், ஆசைகள் ஆகியவற்றிலுள்ள பற்றை நீக்கவேண்டும். வன்முறையால் இஃது இயலாது; மக்கள் புதிய கருத்துக்களை ஏற்பதற்கு இக்கருத்துக்களை விரும்புமாறு செய்யவேண்டும். ‘இனியவற்றைச் செய்வதன் மூலமே மக்களை இணங்கச் செய்யமுடியும்’1. புதிய கருத்துக்கள் கவர்ச்சிகரமாக இருக்கவேண்டும். கம்யூனிசம் கவர்ச்சிகரமாக இருந்ததால்தான் எல்லா எதிர்ப்புக்களையும் மீறி உலகத்தின் பாதிப்பகுதிகளில் பரவியுள்ளது. அன்பைக் காட்டுவதால் எதிரி நம்முடைய கருத்துக்களில் ஆர்வம் காட்டுகின்றான். எதிரியினிடம் காட்டும் மதிப்பு நமக்கு அவனிடமிருந்து மதிப்பைத் தேடித்தருகின்றது. அதன் மூலம்

---

1. The word persuade means literally to make (some thing) sweet to somebody.

நம் கருத்துகட்கு எதிரியின் உள்ளத்தில் இடம் கிடைக்கின்றது. அகிம்சைப் போராட்டத்தில் தான் இவை அடங்கியுள்ளன.

## *சத்தியத்திற்கு முதலிடம்:*

அகிம்சைப் போராட்டத்தில் சத்தியத்திற்கு முதலிடம் அளிக்க வேண்டும். அகிம்சையே சத்தியத்தில்தான் அடங்கியுள்ளது. எண்ணம், சொல், செயல் இவற்றில் ஒற்றுமை இருக்க வேண்டும். தன்னுடைய தவறுகளை அகிம்சாவாதி வெளிப்படையாக ஒத்துக் கொள்ளவேண்டும். அப்போதுதான் பொது மக்கள் அகிம்சாவாதியை நம்புவர். காந்தியடிகள் தாம் செய்த தவறுகளை ஒத்துக்கொள்ள எப்போதுமே தவறியதில்லை. சத்தியத்தில் பற்று, தவறுகளை ஒத்துக்கொள்ளச் செய்கின்றது இஃது எதிரியிடம் அகிம்சாவாதியின் பேரில் நம்பிக்கையை வளர்க்கின்றது. இந்த நம்பிக்கை வளர்ந்து மென்மைத் தூண்டுதலாகச் செயல் பட்டு எதிரியினிடம் மனமாற்றத்தை விளைவிக்கின்றது. அப்பொழுது முழு வெற்றி கிட்டுகின்றது. ஆதலால் சத்தியத்தில் பற்றே வெற்றிக்கு வழி என்பதை அகிம்சாவாதி உணர வேண்டும். இதனால் தான் இப்போராட்டத்தை அகிம்சைப் போராட்டம் என்று கூறாமல் சத்தியாக்கிரகம் என்று பெயரிட்டார்.

## *அகிம்சையின் வெற்றி:*

சுருங்கக் கூறின், திரும்பத் திரும்பச் செயல்படுத்தப்படும் மென்மைத் தூண்டுதல் எதிரியினிடம் நல்ல குணங்களை வளர்க்கின்றது. அகிம்சாவாதியினிடம் உள்ள குறைகளையும் நீக்குகின்றது. அறிவுடன் கூடிய அன்பும், இணக்கமும் வெறுப்பைக் குறைக்கின்றது. சத்தியத்தில் பற்றுக் கொள்வதால் நம்பிக்கையும், நம்பிக்கையால் தூண்டுதலும், தூண்டுதலால் மனமாற்றமும், மனமாற்றத்தால் வெற்றியும் கிடைக்கின்றது. இவ்வகையில் அகிம்சைப் போராட்டம் வெற்றி பெறுகின்றது.

இனி பல்வேறுபட்ட சூழ்நிலைகளில் அகிம்சைப் போராட்டம் எவ்வாறு வெற்றி பெறுகிறதென்பதைக் காண்போம்.

*அதிகார வெறியர்கள்:*

வேண்டுமென்றே கொடுமை செய்து அதன் மூலம் இன்பம் அடைபவனை எடுத்து கொள்வோம். தன்னைவிட வலியவனிடம் தோற்றுப் போனதால், அடக்கிவைத்திருந்த பழியுணர்ச்சியைத் தன்னினும் எளியவனிடம் காட்ட முயலுகின்றான். அந்த எளியவனிடம் தன்னுடைய அதிகாரத்தையும் ஆக்கிரமிப்பையும் காட்டி அவற்றின் மூலம் இன்பம் அடைகின்றான். இவனுக்கு எதிராக நடத்தப்படும் அகிம்சை போராட்டம், இவனிடமுள்ள அதிகார ஆசையினை நீக்குகின்றது. பொதுமக்களின் ஆதரவும், அகிம்சாவாதியின் பால் இருப்பதால் இத்தகைய அதிகாரம் நன்மை பயக்காது என எதிரியும் எண்ணுகின்றான். எதிரியின் ஆசையையும் பூர்த்தி செய்யும்வகையில் புதியபாதை அகிம்சா வாதியால் காட்டப்படுகின்றது. எதிரியை மதித்தல், அவனிடமுள்ள தாழ்வு உணர்ச்சியையும், வெறுப்பையும் நீக்குகின்றது. இவ்வாறு எதிரி நல்லவனாக மாறுகின்றான்.

*நடிப்பு வாதிகள்:*

சமுதாயத்தில் சிலர் குறைபாடு கொண்டவர்களாய் இருப்பர். அதை வெளிப்படுத்திக்கொள்ள வெட்கப்படுவர். அக்குறைகளைப் பிற மனிதனிடமோ அல்லது குழுவினிடமோ ஏற்றித் தங்களிடம் இல்லாதது போல் நடிப்பர். இதனால் ஒன்றுமறியாதவர் துன்பம் அடைகின்றனர். இந்நிலையில் இக்குற்றமுள்ள மனிதர்களின் மனச்சாட்சி இவர்களை துன்புறுத்துவதால், கொடியவர்களாய் மாறுகின்றனர் அகிம்சைப் போராட்டத்தினால் தான் இவர்களை

மாற்றமுடியும். அகிம்சைப் போராட்டத்தில் எதிரி தன்னையறிந்து கொள்ளும் நிலை ஏற்படுகின்றது. உண்மையை ஒத்துக்கொள்வதால் மதிப்புக்குறையாது; சமுதாயத்தில் அவன் வகிக்கும் நிலை பாதிக்காது என்று அகிம்சாவாதி எதிரிக்கு உணர்த்துகின்றான். அப்பொழுது எதிரியிடம் மன மாற்றம் ஏற்படுகின்றது. இந்நிலை ஏற்படுவதற்கு அகிம்சாவாதிகள் நீண்ட காலம் மென்மைத் தூண்டுதலைச் செயல்படுத்த வேண்டும். சில உயிர்ச் சேதங்கள் ஏற்படலாம்; ஆனால் வன்முறையில் எதிரியைத் திருத்தும் போது ஏற்படும் சேதங்களை விட இது குறைவேயாகும்.

*சுதந்திரம் :*

ஒரு நாட்டினை ஆக்ரமிப்பவன் அந்நாட்டு சுதந்திரத்தைப் பறித்துக் கொண்டு, அகிம்சை வழியிற் போராட்டம் நடத்தும் அந்நாட்டு மக்களுடைய குழந்தை கட்கு வன்முறைகளில் பயிற்சி கொடுத்துத் தன் கருத்துக்களையும் ஏற்குமாறு செய்துவிட்டால் அகிம்சைப் போராட்டம் தோல்வியடைந்து விடாதா? சுதந்திரம் நேரடியான முயற்சியால் கிடைக்க கூடியதன்று; ஒருவருக்கொருவர் நம்பிக்கை, மதிப்பு இவற்றின் பின் விளைவுகளாகும். அஃது ஒழுக்க சம்பந்தப்பட்டது. ஒழுக்க முறைகளால் அடையலாமேயன்றி வன்முறைகளால் முடியாது. சத்தியத்தில் பற்று, ஒற்றுமை, அன்பு, ஒருவருக்கொருவர் மதிப்பு இவற்றைப் பழக்கங்களாக கொள்வதன் மூலமே உண்மையான சுதந்திரத்தை அடையலாம். இவைகளைக் கைவிட்டால் சுதந்திரம் தானே போய்விடும். மேலும், சுதந்திரம் என்பது மிகவும் உயர்ந்ததன்று. அதைவிட சுதந்திரத்தின் அடிப்படையான அகிம்சையும் அன்பும்தான் மதிக்கத் தகுந்தவை. இயேசு கிறிஸ்து சுதந்திரத்தைப் பற்றி எதுவும் கூறவில்லை. பரஸ்பர நம்பிக்கை மதிப்பு இவற்றைப் பற்றித்தான் பேசியுள்ளார்.

### *சமூகக் கட்டுப்பாடு:*

இதே போன்று சமூகக் கட்டுப்பாட்டையும் வன்முறை மூலம் விலைக்கு வாங்க முடியாது. சமூகக் கட்டுப்பாட்டிற்கும் அடிப்படை ஒருவருக்கொருவர் நம்பிக்கை, மதிப்பு இவற்றைத்தான் இயேசு கிறிஸ்து வலியுறுத்துகின்றார். சமூகக் கட்டுப்பாட்டைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. ஒரு நாட்டு மக்கள் ஒற்றுமை, கூட்டுறவு, அன்பு, ஒருவரையொருவர் மதித்தல் ஆகியவற்றைக் கைவிட்டால் கட்டுப்பாடும் போய்விடும். சுதந்திரத்தையும் இழந்துவிடுவர். இதற்கு வெளிநாட்டான் ஆக்கிரமிப்புத் தேவையில்லை. மேற்கூறியவற்றைக் கைக்கொண்டால் எந்த ஒரு வெளிநாட்டுக் காரனும் சுதந்திரத்தைப் பறிக்கமுடியாது.

### *தன்னிறைவு :*

பற்றாக்குறையிலும் பழி, வெறுப்பு உணர்ச்சிகளிலும் வளர்ந்த குழந்தைகள் தாம் ஆக்கிரமிப்போனின் கருத்தை ஏற்கின்றன. தன்னிறைவு, அன்பு, மதிப்பு ஆகியவற்றில் வளர்ந்த குழந்தைகள் வன்முறையை ஏற்கா. ஆக்கிரமிப்பாளரின் பிரச்சாரத்தால் மனமாற்றம் அடையா.

### *இரு உறவுகள் :*

ஆளுதல், பணிதல் என்ற இரு நிலைகட்கும் மாறாக, சேர்ந்து செயலாற்றுவதை அகிம்சைப் போராட்டம் வலியுறுத்துகின்றது. இன்றைய நிலையில் ஆளுதலும் ஆளுகைக்கு உட்படுதலுமே மனிதனுக்குத் தெரிந்த இருவகை உறவுகளாகும். குடும்பத்தில் பெற்றோர் பிள்ளைகளை ஆள நினைக்கின்றனர். கல்வி நிலையங்களில் ஆசிரியர்கள் மாணவர்களை ஆள நினைக்கின்றனர். வேலை கொடுப்பவர், வேலை செய்பவரை ஆள நினைக்கின்றனர். எங்கு

பார்த்தாலும் இன்றைய சமுதாயத்தில், இந்த இரு உறவுகளே காணப்படுகின்றன. இவற்றைத் தவிர வேறு எந்த உறவின் சாத்தியமும் மனிதனுக்குத் தெரியவில்லையாதலால், இவற்றை அடிப்படையாகக் கொண்ட 'போரை'ப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குப் பயன்படுத்துகின்றனர். ஆனால் அகிம்சைப் போராட்டம் இவற்றிற்கு மாறாக, ஒருபுதிய உறவைக் காட்டுகின்றது. அது சேர்ந்து செயலாற்றுவதாகும். அதே நேரத்தில் இப்போதுள்ள வேலைப்பிரிவினை (Division of Labour) தமக்குரிய பொறுப்புகளைத் தாமே நிறைவேற்றுதல் ஆகியவற்றை இப்புதிய முறை புறக்கணிக்கவில்லை. இத்தகைய உறவில், ஒவ்வொருவனும் தன் தன் நிலையில் நின்று தான் செய்யும் செயல்களில் பொதுவான நோக்கங்களையும் தேடி, தனக்கும் பிறர்க்கும் திருப்தி அளிக்கும் வகையில் பாடுபடுகின்றான். இதனால் ஒவ்வொருவனும் மற்றவனை நம்புகின்றான்; மதிக்கின்றான். தானும் வளரவேண்டும்; பிறரும் பலன் பெறவேண்டும் என்னும் எண்ணத்தில் செயலாற்றுகின்றான். எல்லோரும் நலமாக வாழவேண்டும் என்ற குறிக்கோளுடன் சத்தியத்தில் பற்றுக்கொண்டு பொதுநலத்திற்காகத் தன்னலத்தைத் தியாகம் செய்யத் தயாராக இருக்கின்றான். இந்தப்புதிய உறவு சமுதாய வளர்ச்சிக்கு அடிகோலுகின்றது. சமுதாயம் உணர்ச்சி பெறுவதால் தனி மனிதனும் வளர்கின்றான்.

## ***ஆளும் எண்ணம் :***

ஆளுதல் என்ற எண்ணத்திற்கு அடிப்படை, சமுதாயத்தில் தனக்குப் பாதுகாப்பு இல்லாமற் போய்விடுமோ என்ற பயம் தான். ஆதலால் ஆளுதற்குரிய விருப்பத்தைப் போக்க இப்பயத்தினை நீக்கவேண்டும். அகிம்சாவாதி எதிரியை மதித்துச் சமுதாயத்தில் எதிரிக்குப் பாதுகாப்பினைத் தேடித்தருவதால், ஆளவேண்டுமென்ற எண்ணம் அவனிடமிருந்து நீங்குகின்றது.

### ஆளுகைக்கு உட்படுதல் :

சிலர் தங்களிடம் சக்தியில்லாத காரணத்தால் அதிகாரம் செய்பவருக்கு அடிமையாக இருந்து கொண்டு, தங்கள் மதிப்பை வளர்த்துக்கொள்ள நினைப்பர். இது ஒரு வகை ஆளுகைக்கு உட்படுவதாகும். மற்றொரு வகை, அரசியல் பொருளாதார அறியாமையால் நிகழ்கிறது. மக்களின் அறியாமையை அரசியல்வாதிகள் தங்கள் அதிகாரத்திற்கு அடிப்படையாகக் கொள்கின்றனர். இத்தகைய ஆளுகைக்கு உட்படுதலை நீக்குவதற்கு அகிம்சைப் போராட்டத்தின் மூலம் விழிப்புஉணர்ச்சியை ஏற்படுத்த வேண்டும். போராட்டமே தொடர்ந்த கல்வியாதலால் மக்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்பட்டு ஆளுகைக்கு உட்படுதலில் இருந்து விடுபடுகின்றனர்.

### புதிய சமுதாயத்தில் பழையவர்க்குப் பொறுப்பு :

இயற்கையிலேயே சில மக்கள் சிறந்த அறிவும் தலைமை தாங்குதற்கேற்ற பண்புகளும் பெற்றிருப்பார்கள். இவர்கள் மக்களை ஆண்டு கொண்டிருந்திருப்பர். இந்த ஒரே காரணத்தைக் கொண்டு புதிய சமுதாயத்தில் இவர்களைப் பயன்படுத்தாமல் இருக்கக் கூடாது. புதிய நிர்வாகத்தில் பொறுப்பு வாய்ந்த தலைவர்களாக இவர்களை நியமிக்க வேண்டும். இவர்கள் தவறாக நடந்துகொண்டால் அகிம்சை வழிமூலம் இவர்களை நீக்குவதற்கும் மக்களிடம் பலம் இருக்கவேண்டும். ஆனால் இவர்கள் தவறாக நடந்து கொள்ள மாட்டார்கள். இவர்கட்குச் சமுதாயத்தில் ஒருபாதுகாப்புக் கிடைப்பதால், தற்பெருமை, சுயநலம் இவற்றைவிட்டு, ஏன்சொந்த உரிமைகளையும் கூட விட்டு விட்டுப் பாடுபட முன்வருவர்.

### *எஜமான விசுவாசிகள்:*

நற்பண்புகளைப் பெற்ற சிலர் தாம் வேலை செய்யுமிடத்தில், மிகுந்த விசுவாசம் கொண்டு தம்முடைய எஜமானர்கள் தவறான வழியில் செல்ல இவர்களைத் தூண்டும்போது, இவர்களும் ஏற்று இறங்கிவிடுகின்றனர். உதாரணமாகச் சத்தியத்தில் பற்றுகொண்ட மனிதன் அரசாங்கத்தினிடம் விசுவாசங்கொண்டு, அதற்காக ஒரு பொய் சொல்ல நேரிடும்; அல்லது வன்முறையில் இறங்க நேரிடும், இயற்கையில் அவன் நல்லவனாக இருப்பதாலும், தான் வேலை செய்யுமிடத்தில் கொண்ட விசுவாசத்தின் காரணமாகத் தீயவழிகளில் இறங்குவதாலும் அவனுடைய ஆளுமைத் தன்மை சிதைந்துவிடுகின்றது; மூளைக்கோளாறு வந்து விடுகின்றது. இது தவிர எஜமானரிடம் கொண்ட விசுவாசத்தின் பேரில் தான் செய்கின்றேன். ஆதலால் தான் செய்வது சரி என்று சிலர் உறுதியாக இருப்பர். இவர்கட்கு எதிராக அகிம்சைப் போராட்டம் செய்யும் போது, எதிரி ஒரு மிகச்சிறந்த மனிதன்; அவன் வேலைபார்க்கும் இடத்தின்பால் கொண்ட விசுவாசத்தின் காரணமாக அவன் பிடிவாதமாக இருக்கின்றான் என்பதை நினைவிற் கொள்ளவேண்டும். அவனிடம், அவன் வேலை பார்க்கும் இடம் முடிவான ஒன்றன்று என்பதை உணர்த்த வேண்டும். நீண்ட காலமென்மைத் தூண்டுதலும், அன்பு வழியில் இணக்கமும் அவன் மனத்தை மாற்றும் மருந்துகளாகும்.

### *மூட நம்பிக்கை:*

நீண்ட காலமாக, மக்களிடமுள்ள மூட நம்பிக்கைகளை மாற்றுவதற்கு அகிம்சை வழிப் போராட்டமும், நட்பும்

போதும். இயேசு, புத்தர், காந்தி போன்றவர்கள் இவ்வகையில் தான் மக்களிடமுள்ள மூட நம்பிக்கைகளை மாற்றினார்கள்.

நீண்ட காலத் தவறான நம்பிக்கைகள் மக்களின் மன ஆழத்தில் பதிந்துள்ளன. இதைத் தத்துவ ரீதியாக நிரூபிக்க முடியாது. சிந்தனைக்கும் அப்பாற்பட்டது. பல சமயங்களில் இவை இருப்பதே மக்கட்குத் தெரியாது. இத்தகைய தவறான நம்பிக்கைகளை நீக்குவது மக்கட்கு வருத்தத்தை அளிக்கக்கூடும்; தாழ்வு மனப்பான்மையை உண்டாக்கும். எதிர்ப்பு மிகுதியாக இருக்கும்; நீண்ட காலம் பிடிக்கும். ஆனால் அகிம்சைப் போராட்டத்தின் மூலம் சத்தியத்தில் பற்றுக் கொண்டு போராடுவதால் உள்ளத்தில் மாற்றங்கள் நிகழ்கின்றன. தவறான நம்பிக்கைகள் வேரோடு பிடுங்கப்படுகின்றன. ‘வாழ்க்கையில் ஆளுதல், ஆளுகைக்கு உட்படுதல் என்ற இரு உறவுகளே உண்டு’. ‘முடிவு நன்றாக இருந்தால் போதும். வழிகளைப் பற்றி எண்ண வேண்டிய தில்லை’ ‘பணம் தான் வாழ்வின் லட்சியமாகும்’. சமூக அரசியல் மேம்பட்ட நிலைகளுக்குப் பணம் ஒன்றே போதும். ‘ஆளுதல் தான் சிறந்தது’ போன்றவை சில தவறான நம்பிக்கைகளாகும்.

### *நம்மை நாமே மாற்றுதல்:*

நாம் எதிரியை மட்டும் மென்மைத் தூண்டுதல் மூலம் மாற்றுவது போதாது. முதலில் நம்மையும், பிறகு நமது குழந்தைகளையும், சுற்றுப்புறத்தில் உள்ள மக்களையும் மென்மைத் தூண்டுதல் மூலம் மாற்றவேண்டும். இதற்கு அகிம்சை வழியிற் பயிற்சிதேவை.

# 9. அகிம்சையின் ஆற்றலும் செயல்பாடும்.

*பழமை :*

அகிம்சைக் கோட்பாடு கிறிஸ்து பிரானுக்கு முன்பே இந்தியாவில் உருவாகிவிட்டது. பகவத்கீதை கௌதம புத்தர் ஆகியோர் மூலம் அதனை இந்தியா உலகிற்கு அளித்துள்ளது. இந்தியக் காடுகளில் வாழ்ந்த முனிவர்கள் வாழ்ந்து காட்டிய அந்த நெறி ஒளிமயமானது. அழிவு தரும் போர்களால் ஏற்படும் இருள்களை அழிக்க வல்லது. தனிமனிதர்களுக்கும் நாடுகளுக்கும் இடையே ஏற்படும் சிக்கல்களைத் தீர்க்கும் வல்லமை பெற்றது.

*வழி :*

போர்களுக்கும் பிணக்குகளுக்கும் பதிலாக அகிம்சை நெறியையும் உண்மை, அன்பு, பரிவு, நேர்மை ஆகியவற்றையும் கடைப்பிடித்துச் செயல்பட்டால் மனித வாழ்வு நிலைத்து நிற்கும். அவைகளே வாழ்க்கைக்குப் பாதுகாப்பும் முன்னேற்றமும் தரத்தக்க நம்பிக்கையான வழிகள். எனவே தான், "மனித சமுதாயத்தைக் காப்பாற்றும் ஒரே கேடயம் அகிம்சையே என்றும், அதுவே, படைக்கலக் குறைப்பு அல்லது நீக்கம் என்பதற்குரிய மாற்றுப் பெயர்" என்றும் அண்ணல்காந்தி குறிப்பிடுகிறார். அவர் மட்டுமன்றி, அகிம்சை நெறியில் ஆழ்ந்த பற்றுக் கொண்டோரும், அதனைத் தொடர்ந்து பரப்பி வருவோரும், அந்த நெறியின் மூலமே, பல வகையிலும் வளைத்து அலைக்கழிக்கும் வன்முறைப் பாம்புகளில் இருந்து மனிதயினத்தை விடுவிக்க முடியும் என்றும், வாழ்க்கையின் நோக்கமும் வாழும் வழியும் அகிம்சையே அன்றி வேறொன்றுமில்லை என்றுப கூறுகின்றனர்.

*வன்முறை :*

வெறுப்புணர்வு, பழிவாங்கும் மனப்பான்மை கொடூரப் போக்கு ஆகியவற்றை, அன்பு, சத்தியம், அகிம்சை, நேர்மை ஆகிய பண்புகள் மூலமே வெல்லலாம். வெறுப்பிற்கு எதிராக வெறுப்பையே காட்டினால் மேலும் மேலும் வெறுப்பின் வேர்க்ள் வளர்ந்து ஆழமாகுமே அன்றிக் குறையாது. அதுபோலவே, வன்முறையை எதிர்த்து வன்முறையால் வெல்ல முடியாது. அணுகுண்டுக்கு எதிரே அணுகுண்டையே பயன்படுத்தினால் சர்வ நாசமே அன்றி விமோசனம் இல்லை. வெளிப்படையான இந்த உண்மையைத் தெரிந்துகொண்டால் உலகையே ஒரே நேரத்தில் நாசம் செய்யும் போரை ஒழித்துக் கட்ட, படைக்கலக்குறைப்பு அல்லது கலைப்பு என்பதே ஒரே வழி என்பதை உணரலாம்.

*உடன்பாடு :*

"இறைவனின் இயல்பு வன்முறையாக இருக்க முடியாது" என்பதே கிறிஸ்துவமறையின் கோட்பாடு. இந்தப் பொன்மொழி அண்ணல் காந்தியின் உள்ளத்தை முழுமையாகக் கவர்ந்திருக்க வேண்டும். அந்த உண்மையினை, தம்முடைய முயற்சியினாலும் ஆராய்ச்சியினாலும் வளர்த்து, 'கடவுள் இருப்பது உண்மை' என்ற கோட்பாட்டில் இருந்து மாறி 'உண்மையே கடவுள்' என்ற முடிவுக்கு வந்தார். அந்த உண்மைக்கும் அகிம்சைக்கும் இடையே வேறுபாடில்லை என்பதை வலியுறுத்தினார். அகிம்சையின் ஆற்றல் என்பது அது எதிர்மறை நிலையில் செயல்படுவதைவிட உடன்பாட்டு நிலையில் செயல்படுவதிலேயே அழுத்தமாகப் பதிந்துள்ளது என்பதை வெளிப்படுத்தினார். ஒருவனைச் சத்தியவானாக மாற்றுவதும், அவனையே சத்தியாக்கிரகியாகச் செயல்பட வைப்பதுமே அகிம்சைக்குரிய ஆற்றல் என்பது புலனாகிறது.

## *செயலாற்றல் :*

ஒருவனை உயர்ந்த மனிதனாக உருவாக்கும் சக்தி அகிம்சைக்கு உண்டு. வாய்ச்சொல் வீரனாக இல்லாமல், எண்ணத்தாலும், செயலாலும் சொல்லாலும் பிறர்க்கு நல்லனவற்றையே செய்யும் தொண்டனாக மாற்றிவிடுகிறது. அந்த மனிதன் அகிம்சை அறத்தைத் தன் வாழ்க்கையின் நோக்கமாக அன்றி வெறும் கருத்தாக ஏற்கமாட்டான். செயல்படு மனிதனாக மாறும் அவனிடம் உண்மை தலைமை தாங்கும். எல்லார்க்கும் இனியனவே செய்யும் இயல்பு மேலோங்கும். அன்பு, பொறுமை, கருணை ஆகிய பண்புகளை வெளிப்படுத்தித் தனி மனித சமுதாய முன்னேற்றத்திற்குத் தன்னையே முழுமையாக ஈடுபடுத்துவான்.

## *கொடூரம்* (Cruelty) :

பயம், கோபம், அகங்காரம் இவற்றின் காரணமாகப் பகைவன் ஒரு கொடூரவாதியாக இருக்கின்றான். அகிம்சாவாதி, பகைவனுக்குப் பாதுகாப்புக் கொடுப்பதன் மூலமும், அவனை மதிப்பதன் மூலமும், அவன்பாலுள்ள பயத்தைப் போக்கி விடுகிறான்.

அகிம்சாவாதி கோபம் கொள்ளுவதில்லை. இவனைப்போலவே எதிரியும் நடந்துகொள்ளத் துணிகின்றான். கோபம் கொண்டால் பொதுமக்கள் ஆதரவு அகிம்சாவாதிக்கே மிகுந்துவிடும் என்று எதிரி கருதுவதால், கோபத்தைக் குறைக்கின்றான். அகிம்சாவாதியின் நடத்தையினாலும், பொதுமக்களின் ஆதரவு அவனுக்குப் பெருகி வருவதாலும் எதிரி தன்னுடைய அகங்காரத்தைக் குறைத்துக் கொள்கிறான்.

ஆகவே எதிரியின் பாலுள்ள பயம், கோபம், அகங்காரம் ஆகிய மூன்றையும் போக்கி, அவனிடமுள்ள கொடூரத்தைக் குறைத்துவிடுகின்றான்.

### *பேராசை* (Greed) :

பிற்காலத்தில் தனக்குப் பாதுகாப்புத் தேவை என்பதுவும் தான் வறியவன் ஆகிவிடுவோமா என்ற பயமும் எதிரியிடம் பேராசையை வளர்க்கின்றன.

அகிம்சாவாதி எதிரியை மதிக்கின்றான். போராட்டத்திற்குப் பின்னரும் இருவருக்கும் வாழ்வு தரக்கூடிய வழியைக் காட்டுகின்றான். இந்த வகையில் எதிரிக்கும் பாதுகாப்பு உணர்வை ஊட்டிவிடுகின்றான். இவன் காட்டும் அன்பின் காரணமாக வறியவன் ஆகிவிடுவோமோ என்ற அச்சம் எதிரியிடமிருந்து அகன்றுவிடுகின்றது. எல்லாருக்கும் வாழ்வு என்ற தத்துவத்தை எதிரி உணர்ந்து விடுவதால் அவனிடமிருந்த பேராசை அற்றுப் போய்விடுகின்றது.

### *தற்பெருமை* (Pride) :

சமுதாயத்திலிருந்து தன்னைத் தனியாகப் பிரித்துக் கொண்டு தான்தான் உயர்ந்தவன் என்று தவறாகக் கருதுவதால் எதிரியிடம் தற்பெருமை குடிகொள்கின்றது. ஆனால், அகிம்சைவாதி கடைப்பிடிக்கும் வழிகளும் நடத்தையும் இவனுக்குப் பெருவியப்பை அளிப்பதாலும் அகிம்சைவாதிக்கே பொதுமக்கள் ஆதரவு பெருகுவதைக் காண்பதாலும் தற்பெருமை தகர்ந்து விடுகின்றது.

பகைவனிடத்துக் குடிகொண்டிருந்த கொடூரம், பேராசை, தற்பெருமை முதலிய குறைகளை அகிம்சாவாதி அடக்கவோ குறைக்கவோ செய்வதற்கு மாறாக அவற்றைவேரோடு களைந்துவிடுகின்றான்.

### *அகிம்சாவாதியின் குறிக்கோள்:*

எதிரியின் மன வலிமையை அழிப்பது குறிக்கோள் அன்று. அவனைப் புதிய கோணத்திலிருந்து பிரச்சினையைப் பார்க்கச் செய்து அவனுடைய ஆதரவுடன் முடிவு

தேடுவதாகும். இத்தகைய முடிவு காண்பது கடினமான ஒன்றுதான். அதற்கு ஆழ்ந்த அறிவும் தொடர்ந்த ஆராய்ச்சியும் தேவை. இருவர்க்கும் மகிழ்ச்சி தரக்கூடியதாகவும் இருவரின் சக்திகளும் ஆக்கப்பாதையில் செலவிடுவதற்கு வாய்ப்பாகவும் முடிவு இருக்கவேண்டும்.

தன்னுடைய மதிப்பையும் எதிரியின் மதிப்பையும் வளர்க்க வேண்டும். தொடக்கத்தில் இருந்ததைவிட எதிரியைப் பாதுகாப்பும் மேன்மையும் கொண்ட நிலைக்கு உயர்த்த வேண்டும். ஒருவர்க்கு ஒருவர் பணிவதையும், ஒருவரை ஒருவர் ஆளுவதையும் நீக்கி இருவரும் இணைந்த நிலையில் செயலாற்றி ஒரு புதிய பாதையை வகுக்க வேண்டும்.

### *ஆய்வுரைகள் :*

அகிம்சைவாதி, இருவருக்கும் ஏற்ற சமாதான முடிவுக்குவர ஆலோசனைகளைக் கூறுகின்றான். உடற்சக்தியைக் காட்டிலும் மேலான சக்திகள் இருக்கின்றன என்பதையும், இருவரும் ஒருவருக்கொருவர் எதிரிகள் அல்லர் என்பதையும் உணர்த்துகின்றான். எதிரியும் இவனது ஆலோசனைகளை ஏற்கும் நிலையில் இருப்பதால் அவனுள்ளேயே இக்கருத்துக்கள் உருவாகும் உணர்வு அவனுக்கு ஏற்படுகின்றது. அவனது மன ஆழத்தில் ஒரு புதிய நிலை உண்டாகின்றது.

### *புதிய கருத்துக்கள் :*

அகிம்சாவாதியின் புதிய கருத்துக்கள், எதிரியின் கற்பனை ஆற்றலைத் தூண்டிவிடுகின்றன. கற்பனையும் ஆலோசனையும் முடிவான மனவுறுதியை விட வலிமை வாய்ந்தன.1 கற்பனைச் சக்திக்கும், மனவுறுதிக்கும் இடையே

---

1. Imagination and Suggestion together are much stronger than conscious will power.

- Bandonin/ the psychologist.

நிகழும் போராட்டத்தில் கற்பனைச் சக்திக்கே பெரும்பாலும் வெற்றிகிட்டுகின்றது.2

### வலிந்தேற்கும் துன்பம் :

அகிம்சாவாதி துன்பத்தை வலிய ஏற்றுக் கொள்வதால் எதிரியின் இதயம் உருகிக்கனியும். ஏனெனில் அவனுடைய நரம்புமண்டலம் துன்பவுணர்ச்சியால் பாதிக்கப்பட்டு அதனையே வெளிக்காட்டுகின்றது. உடனடியாக அவ்வுணர்ச்சிகள் வெளியே தெரியாத நிலையில் இதயத்துள் ஆழ்ந்து கிடந்து காலப்போக்கில் பயனைக் கொடுக்கின்றது.

### போல நடத்தல் (Imitation) :

தன்னையறியாமலேயே அகிம்சாவாதியைப்போல எதிரி நடக்கின்றான். இதனால் அவனுடைய கோபம் குறைகின்றது. தன்னையறியாமலேயே மற்றொருவனைப் போல நடப்பது சிறந்த பயன் தரக்கூடிய ஒன்று.3

### எதிரியை நம்புதல் :

எதிரியை முழுமையாக நம்பி, அவன் கொண்டு வரும் நியாயமான எந்தவித உடன்படிக்கைக்கும் அகிம்சாவாதி ஒப்புகின்றான். இந்த நம்பிக்கை பிறரை மதிக்கும் அடிப்படையில் அமைந்ததாகும்.

### அடிப்படை ஒழுக்கத்தில் நம்பிக்கை :

தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு மனிதனும் அடிப்படையில் நல்லவனே. இளம் வயது முதல் அவன் கற்ற

---

2. "When the will and imagination are at war the imagination invariably gains the day". - Bandonin, the Psychologist

3. Unwriting imitation is the most effective - Rivers - psychologist

நீதிக் கருத்துக்கள் அவனுடைய மன ஆழத்துள் பதிந்துள்ளன. அவற்றை வெளிக்கொணர்வதில் அகிம்சாவாதி வெற்றி பெறுகின்றான்.

### முழுமாற்றம் :

இறுதியில் எதிரி, முழுமாற்றம் அடைந்து விடுகிறான். அவனுடைய ஆவல்கள் அழிக்கப்பெறாமல், புதிய பாதையில் அவை திருப்பிவிடப்பெறுகின்றன. இவ்வகையில் அகிம்சைவழிப் போராட்டமே, மனித இன ஒற்றுமையை வெளிப்படுத்தும் ஒரு நாடகமாக அமைகிறது.

### பயம், கோபம், வெறுப்பு :

இருசாரார்க்கிடையே உள்ள பிரச்சினைகளை முழுவதும் அறிந்து கொள்ளுதற்குப் பயம், கோபம், வெறுப்பு ஆகிய உணர்ச்சிகளையும் அவற்றின் பின் விளைவுகளையும் நன்கு அறிந்திருக்க வேண்டும்.

பயமும், கோபமும் மனிதர்களைப் பிரிக்கும் ஆற்றல் கொண்டவை. தனக்கு வருகின்ற விபத்தின் தன்மையை ஒட்டி வலி மிகுந்திருந்தால் பயமும், வலி குன்றியிருந்தால் கோபமும் ஏற்படுகின்றன. பயத்தின் தன்மை பணியச்செய்கின்றது. கோபத்தின் போக்கு எதிர்க்கச் செய்கின்றது. அச்சத்திற்குக் காரணமாயிருந்த ஆபத்தை நீக்கி விட்டால் பொதுவாகப் பயம், கோபம் இரண்டுமே நீங்கிவிடுகின்றன.

கோபத்தை அடக்கி வைத்திருப்பது வெறுப்பு உருவாகக் காரணமாகிறது. அபாயத்தை கொடுக்கும் பொருளை அழிப்பதற்கு வாய்ப்பை எதிர்நோக்கியிருக்கிறது.

### பயிற்சி :

மேற்கண்ட பயம், கோபம், வெறுப்பு ஆகிய மூன்றையும் அகிம்சாவாதி நீக்கிவிட முயலவேண்டும்.

இராணுவத்தில் பயத்தை மட்டும் நீக்குவதற்கே பயிற்சி தரப்படுகிறது. ஆனால் அகிம்சாவாதி பயம், கோபம், வெறுப்பு ஆகிய மூன்றையும் ஒரு சேர நீக்கப் பயிற்சி பெற்றிருக்கவேண்டும். எதிர்ப்புணர்ச்சிக்கு மாற்றாக நட்புணர்ச்சியைத் தோற்றுவிக்க வேண்டும். இது நடைமுறையில் முடியும் என்பதைப் பாவ்லாவ் என்ற உளநூல் அறிஞர் ஆராய்ச்சியின் மூலம் நிறுவியுள்ளார்.

பயம், கோபம் ஆகியன மனிதனின் இயல்பான உணர்ச்சிகள். கூட்டத்தினரிடையே இவை மிகுதியாய் வெளிப்படும். அவற்றை அகற்றுவதென்பது அரியசெயல் எனச் சிலர் வாதிக்கின்றனர். இராணுவத்தில் சேர்ந்தவர்க்கு நான்காண்டுகளில் பயத்தை அடக்கப் பயிற்சி தரப்படுகின்றது. பயத்தையும் கோபத்தையும் சேர்த்துக் களைய வேண்டு மெனில் மேலும் சில ஆண்டுகள் பயிற்சி தருவதன் மூலம் இயலும். எடுத்துக்காட்டாக, பர்தோலி என்ற இடத்திலுள்ள சாதாரண உழவர்கள் சிறந்த முறையில் சத்தியாக்கிரகப் போராட்டம் நடத்தி வெற்றி பெற்றனர். இதற்கு காந்தியடிகள் கொடுத்த பயிற்சியே காரணமாகும். பயிற்சியின் முக்கியம் பற்றி நெப்போலியன் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். ''படையின் பலம் பயிற்சியில் தான் அடங்கியுள்ள தென்பதை'' வெலிங்டன் பிரபுவும் வெளிப்படுத்தியுள்ளார். சரியான பயிற்சி பெறாதவர்கள் சிலர் இருந்த காரணத்தால் தான் சௌரி சௌரா என்ற இடத்தில் வன்முறை தலைவிரித் தாடியது. அதன் காரணமாக நாடு முழுவதும் நடைபெற்ற போராட்டத்தைக் காந்தியடிகள் திரும்பப் பெற்றுக்கொண்டார்.

## *தனிமனித நிலையும் குழுநிலையும் :*

தனி மனிதன் அகிம்சைப் போராட்டத்தில் ஈடுபடுவதற்கு மிகுந்த தன்னடக்கமும், திறனும், பயிற்சியும் தேவை. குழுவாக இருந்தால் ஒவ்வொரு தனி மனிதனுக்கும் அந்த அளவு தேவையில்லை. கூட்டமாகச் செயல்படும் போது தனிமனிதனின் பலவீனங்கள் நீங்கி நல்ல குணங்கள்

வெளிப்படுகின்றன. குழுவின் தலைவர்கள், பிரச்சினைகளை அறிந்திருத்தலும், தகுந்த குறிக்கோளும் பெற்றிருந்தால் போதுமானது. சிறு சிறு குழுக்களாகப் பிரிந்திருப்பதன் மூலம் ஒற்றுமையுணர்ச்சி ஓங்குகிறது. எளிதே பயிற்சி பெறவும் முடிகின்றது. பொதுவாக இக்குழுநிலைப் போராட்டம், ஒற்றுமையின் அடிப்படையில் நல்லவர்களே என நம்புவதாலும் எளிதில் வெற்றி பெறுகின்றது.

குழுநிலை அகிம்சைப் போராட்டம், சில நேரங்களில் வெற்றியைத் தரவில்லையென்றால் அதற்குக் காரணம் அகிம்சையின் பல கோட்பாடுகளைப் புரிந்து கொள்ளாததே ஆகும். இந்தப்போராட்டம் எந்த அளவுக்கு அச்சத்தை ஏற்படுத்தியுள்ள தென்பதற்கு ஜார்ஜ்லாயிட் என்பாரின் கூற்றே சான்று பகரும்.1

## போர் :

உலகில் எழும் சிக்கல்களைத் தீர்ப்பதற்குப் போர் தான் சிறந்த வழி எனப் பலர் கருதுகின்றனர். ஆகவே முதலில் அப்போர்க்கலை பற்றிய பல வல்லுநர்களின் கூற்றுக்களைக் காண்பது பொருத்தமானதாகும்.

## ஒழுக்கநெறி :

போரில் ஒழுக்கநெறி பற்றிப் பேசப்படுகின்றது. "போரில் ஒழுக்க நெறிக்கு முதன்மை கொடுத்துள்ளதற்குப் பல சான்றுகள் பகரலாம்; எதிரியை தனியாகவோ, மொத்தமாகவோ அழிப்பதால் மட்டும் வெற்றி கிட்டுவதில்லை; வெற்றி காண வேண்டுமென்ற அவர்களின் ஆசையை அழித்து விட்டால் வெற்றி கிடைத்துவிடுகின்றது" என்று மார்ஷல் பாக்2 (Marshall Foch) என்பவர் கூறுகின்றார்.

---

1. You cannot go on arresting people for ever-Not when there are 319 million of them And if they had taken Gandhi's next step and refused to pay taxes, God knows where we would have been. - George Lloyd.

''வெற்றியின் இரகசியம் மனிதர்களின் அகத்தில் அடங்கியுள்ளதேயன்றிப் புறத்திலன்று'' என்று மார்ஷல் சாக்ஸ் கூறுகின்றார். ஒழுக்க சக்திக்கும் உடல்சக்திக்கும் உள்ள விகிதம் 3:1 என்று நெப்போலியன் உரைக்கின்றார். இதனையே 6:1 என்று லெடில் ஹார்ட் கூறுகின்றார். மேலும் அவர் ''போரில் எதிரியின் மனமே உண்மையான இலட்சியமாகும். மனமாற்றங்களில்தான் வெற்றியும் தோல்வியும் அடங்கியுள்ளது'' என்றும் சொல்லுகின்றார். ஒழுக்க நெறிகளை அழிப்பதன் மூலம் வெற்றி பெறலாம் என்று ஜெனரல் புல்லர் புகல்கின்றார். அவர் கூற்றுப்படி, ''முதலில் எதிரியின் நாடு, அரசு ஆகியவற்றின் ஒழுக்கக் கோட்பாடுகளைத் தகர்க்க வேண்டும். இரண்டாவதாக எதிரியின் நாட்டுக்கொள்கைகளை நிறைவேறாமல் செய்யவேண்டும். மூன்றாவதாக எதிர்நாட்டுத்தளபதியின் திட்டங்களை உடைக்க வேண்டும். இறுதியாகப் படை வீரர்களின் ஒழுக்கக் கட்டுப்பாட்டைக் குலைக்க வேண்டும். இவற்றில் முதல் மூன்றும் மிக முக்கியமானவை.'' ஹாக்கிங் என்பவர் ''ஒழுக்கமே அடிப்படையானது; அதுவே உறுதியைக் கொடுக்கக்கூடியது'' என்று குறிப்பிடுகின்றார்.

## *ஒழுக்க நெறியும் குழுநிலை அகிம்சைப் போராட்டமும் :*

மேலே குறிப்பிட்டுள்ள ஒழுக்க நெறிக்கு குழுநிலைப் போராட்டத்திலும் தகுந்த இடம் தரப்பெறுகின்றது. ஆனால் போரில் எதிரியின் ஒழுக்க நிலையை அழிக்க வேண்டுமென்பதே குறிக்கோளாயிருக்க, இங்கு எதிரியின் ஒழுக்க நெறியை மேம்பட்டதாகச் செய்யவேண்டுமென்று வலியுறுத்தப் படுகின்றது. இந்த அடிப்படையில் எவ்வாறு குழுநிலைப் போராட்டம் பல சூழ்நிலைகளில் செயல்படுகிறது என்பதைக் காணலாம்.

## *அகிம்சைப் போராட்டமும் போர் வீரர்களும்:*

துப்பாக்கியைப் பயன்படுத்த மாட்டோம் என்ற நிபந்தனையோடு, பிற வன்முறைகளைக் கொண்டு அடக்க

வரும் போர் வீரர்களை அகிம்சாவாதிகள் எங்ஙனம் எதிர்ப்பது? போர் வீரன் பயிற்சி பெற்றிருப்பதால் அகிம்சை வாதிக்கு அவன் மனத்தை மாற்றுவதற்குச் சில காலம் ஆகும். அவர்கள் பெற்றிருக்கும் பயிற்சியின் காரணமாக, ஆலோசனைகளை ஏற்கும் நிலையில் இருப்பார்கள் என்று ''ரிவார்ஸ்''3 என்பார் கூறுகின்றார். ''அகிம்சாவாதிகளின் நடத்தை போர் வீரர்கட்கு வியப்பை நல்கி, அவர்களைச் சிந்திக்கத் தூண்டிவிடுகிறது. போர் வீரர்கள் சிந்திக்கத் தொடங்கினால் யாரும் அவர்தம் வரிசையில் இருக்க மாட்டார்கள்''4 என்று மகாபிரடெரிக் கூறுகின்றார். சிந்தனை, போர்வீரனை அதனுடைய குழுவிலிருந்து தனி மனிதனாகச் செயல்பட வைக்கிறது. அப்போது அகிம்சாவாதிகட்குத் தனி மனித அகிம்சா போராட்டமாக இது மாறிவிடுகின்றது. இந்தப் புதிய முறை எதிர்ப்பைக் கண்டு, இதன் தன்மையறியப் பொதுமக்களைப் போர்வீரர்கள் அணுகுவர். இந்த நிலையை அதிகாரிகளாலும் கட்டுப்படுத்த முடிவதில்லை. மீறித் தடுத்தால் அவர்கள் தம்மதிப்பை இழந்துவிடுவதோடு, வீரர்கள் சந்தேகிக்கும் நிலைக்கு வந்து விடுகின்றனர். ''சந்தேகம் ஏற்பட்டால் ஒழுக்கம் குலைந்துவிடும்'' என்று வெல்லிங்டன் பிரபு கூறுகின்றார். வீரர்கள் மாறுவதோடன்றி அதிகாரிகட்கும் பெருஞ்சோதனையாக அமைந்துவிடுகின்றது. சிறுதவறு செய்தாலும் தம் மதிப்பை அவர்கள் இழந்துவிடுகின்றனர். துப்பாக்கிச் சூட்டிற்கு அவர்கள் உத்தரவிட்டால் பொதுமக்கள் ஆதரவும் இவர்கட்கு அற்றுப் போய்விடுகின்றது.

அகிம்சாவாதிகளின் போராட்டத்தில் எந்தவகையான உடைமைகளும் சேதம் அடைவதில்லை. ஆகவே போர் வீரர்கட்கு அவ்வுடைமைகளைப் பாதுகாக்க வேண்டிய

---

3. Rivers

4. If Soldiers began to think, not one would remain in the ranks.

- Frederick the Great.

அவசியம் இல்லாமற் போய்விடுகின்றது சுருங்கச் சொன்னால் அவர்கள் செயலின்றி முடங்கிக் கிடக்கின்றனர். இந்த நிலை அவர்கட்குத் தாழ்வு மனப்பான்மையைத் தந்து, தம் மதிப்பையும் இழக்கச் செய்துவிடுகின்றது. இதே நேரத்தில் அகிம்சாவாதிகள் புதிய பாதையைக் காண்பதில் தம் சிந்தனையைச் செலுத்துவதால் அவர்கள் சுறுசுறுப்பாய் இயங்குகின்றனர்.

அகிம்சாவாதிகளின் போக்கினை நேரிலேயே காண்பதால் அவர்கள் தூய்மையற்றவர், மூளையற்றவர், காட்டுமிராண்டிகள் என்ற பழிப்புரைகளைப் போர் வீரர்கள் புறக்கணித்து விடுகின்றனர். அகிம்சாவாதிகளை மதிக்கத் தொடங்கி விடுகின்றனர். ஒருவரையொருவர் மதிப்பதால் ஒரு சுமுகமான சூழ்நிலை உருவாகிவிடுகின்றது.

### *துப்பாக்கிச் சூடு நிகழ்ந்தால் :*

துப்பாக்கிச் சூட்டினை அகிம்சாவாதிகள் மனவலுவுடன் தாங்கிக் கொள்ள வேண்டும். அதன் விளைவாகப் பொது மக்களின் ஆதரவு இவர்கட்கே பெருகி விடுகின்றது. மக்களின் விழிப்புணர்ச்சியையும் தூண்டிவிடுகின்றது. ஜாலியன் வாலா பாக்கில் நிகழ்ந்த படுகொலை நிகழ்ச்சி, இந்திய மக்களிடையே ஒற்றுமையையும், விழிப்புணர்ச்சியையும் ஏற்படுத்தியதை இங்கே நினைவு கூரலாம்.

### *போலீஸ் விமானத் தாக்குதல்கள்:*

இதே போன்று போலீசாரின் தாக்குதல், விமானத்தாக்குதல் ஆகியவற்றையும் அகிம்சாவாதிகள் பொறுத்துக் கொள்ள வேண்டும். எந்த சமாதானப் பேச்சு நிகழ்ந்தாலும் அதில் கலந்து கொள்ள வேண்டும். பொதுமக்கள் ஆதரவு இவற்றால் மிகுந்து விடுகின்றது.

## செய்திக் கட்டுப்பாடு:

செய்திகளைக் கட்டுப்படுத்துவது கண்டு அகிம்சாவாதிகள் சோர்வடையத் தேவையில்லை. இன்றைய வளர்ச்சி நிலையில் செய்திகளையும், சிந்தனைகளையும் கட்டுப்படுத்துவதென்பது எளிதானதன்று. முயன்று கட்டுப்படுத்தினாலும், வதந்திகள் பரவ வழியுண்டு. செய்திகள் வெளிவருவதைக் காட்டிலும் வதந்திகள் ஆபத்தானவை. ஆகவே எவ்வகையிலும் அகிம்சாவாதியின்பால் பொது மக்களின் ஆதரவைப் பெருக்குவதற்கே அவை அமையும்.

## அவதூறுகள்:

அகிம்சாவாதிகள், நீண்டகாலப் போராட்டத்திற்குத் தம்மைத் தயார் செய்து கொள்வது, சத்தியத்தில் பற்று, முன்கூட்டியே தம் திட்டங்களை எதிரிக்குத் தெரிவித்தல், ஆடை, உடல் ஆகியவற்றின் தூய்மையில் காட்டும் அக்கறை, ஒற்றுமை, ஆர்வம் ஆகியன இவர்களைப் பற்றிய தரக்குறைவான அவதூறுகளையும் நீக்கி மதிப்பைப் பெருக்கி விடுகின்றன.

## உடன்படிக்கை மீறல் :

ஏற்கனவே செய்து கொள்ளப் பெற்ற உடன்படிக்கை மீறப்பட்டால் அகிம்சாவாதிகள் அது கண்டு கலங்கத் தேவையில்லை. இரு திறத்தாரின் உண்மை நிலைகளையும் பொதுமக்கள் உணர்ந்து கொண்டு அகிம்சாவாதிகள் பக்கமே நிற்கத் துணிகின்றனர். எத்தரப்பினரும் பொதுமக்களை மீறிச் செயல் புரிய விரும்புவதில்லை. ஆகவே உடன்படிக்கையை மீறி, பொதுமக்களின் பழிப்பிற்குள்ளாகி வெற்றி காணமுடியாது. மாண்ட்கோமரியில் நடந்த பஸ் சத்தியாக்கிரகத்தில் இடையிடையே ஏற்பட்ட உடன்படிக்கைகளை அலபாமா அரசாங்கம் மீறியபோது நீக்ரோக்கள் தளரவில்லை. வன்முறைகளைத் தாங்கிக்கொண்டனர். இச்செயல்களால்

உலகில் உள்ள மக்களின் ஆதரவை நீக்ரோக்கள் பெற்றனர் பல்வேறு நாடுகளில் இருந்தும் பணம் அனுப்பப்பட்டது பலர் அவர்கட்கு ஆதரவு கொடுத்துத் தந்தி மூலம் செய்திகள் அனுப்பினர்.

### *பட்டினி:*

அகிம்சாவாதிகளை எதிராளர்கள் பட்டினி போட்டுவிடச் செய்யலாம். அவ்வேளைகளில் மனவுறுதி காட்டினால் மக்கள் மனமிரங்கி, ஆதரவு தருவதோடு, எதிராளியின், மதிப்பையும் குறைத்துவிடுவர்.

### *கொடூரவாதிகள்:*

ஹிட்லர் போன்ற கொடியவர்க்கு எதிரே அகிம்சைப் போராட்டம் நிகழ்த்த முடியுமா? தொடக்க நிலையில் சில தோல்விகள் ஏற்படலாம். அவற்றைக் கண்டு அஞ்சாது, புதிய முறைகளைக் கண்டு பிடித்துச் சத்திய வழியில் தொடர்ந்து போராட்டம் நடத்தினால் வெற்றி உறுதி. வரி செலுத்தாமை. பகிஷ்கரிப்பு ஆகியன சிறந்த வழிகள். ஆலிவர் கிராம்வெல் என்ற கொடிய அரசனை எதிர்த்து, குவேக்கர்கள் அகிம்சை வழியில் போராடி வெற்றி பெற்றனர்.

### *சுயநலத்திற்கெதிரே:*

அகிம்சாவாதிகள் சிலர் சிறையில் இருக்கும்போது வெளியில் உள்ள சுயநலவாதிகள் இப்போராட்டத்தில் புகுந்துகொண்டு, எதிரிகளிடம் பேச்சு வார்த்தை நடத்தினால் உள்ளேயும், வெளியேயும் இருக்கின்ற அகிம்சாவாதிகள் கட்டுப்பாடு குன்றாமல் இருக்க வேண்டும். நல்லவர் யாவர்? தீயவர் யாவர்? என்பதை மக்கள் புரிந்து கொள்வர் அகிம்சாவாதிகள் பக்கமே அவர்களின் ஆதரவு செல்லும் இதனைக் கண்ட சுயநலவாதிகள் நாணமடைந்து அகிம்சாவாதிகளின் பக்கம் சேர்வர். போராட்டம் இன்னும் வலிமை பெறும்.

### அடிமைப்பட்ட நாடு:

அடிமைப்பட்டுக் கிடக்கும் நாட்டு மக்களால் அகிம்சைப் போராட்டம் நடத்தி வெற்றி காண இயலுமா? இத்தகைய நாட்டினர்க்குத் தான் இப்போராட்டம் மிகவும் ஏற்றது. போராட்டத்தின்போது எதிரியைக் காட்டிலும் ஒழுக்கத்தில் மேம்பட்டிருப்பதால், இழந்திருந்த தன்மானம், தன்னம்பிக்கை ஆகிய உணர்ச்சிகளைப் பெறுகின்றனர். இப்போராட்டமே பொதுமக்கட்கு ஒரு சிறந்த கல்வி முறையாகும்.

### சமூகப் பொருளாதாரக் குறைபாடுகள்:

சமூகப் பொருளாதாரக் குறைகளை நீக்குதற்கும் இது ஒரு சிறந்த கருவியாகும். வைக்கம் சத்தியாக்கிரகம் சமூகக் குறையை நீக்கவும், சம்பராண் சத்தியாக்கிரகம் பொருளாதாரக் குறைபாட்டை நீக்கவும் நிகழ்ந்தவை.

### தலைவர்:

அகிம்சைப் போராட்டத்தின் தலைவர் வேறு எங்காவது கடத்தப்பட்டாலோ அல்லது கொல்லப்பட்டாலோ போராட்டம் எவ்வாறு தொடர்ந்து நடைபெறும்? இப்போராட்டத்தில் ஈடுபடும் அனைவரும் தகுந்தமுறையில் பயிற்சி பெற்றிருப்பதால் புதிய தலைவர்கள் உடனே அமைந்துவிடுவர். போராட்டம் பலத்துடனும் எழுச்சியுடனும் நடைபெறும்.

### கம்யூனிசம்:

கம்யூனிச நாடுகளை எதிர்த்து, அகிம்சாவழிப் போராட்டம் நடத்தற்குரிய முறைபற்றிப் பார்ப்போம். கம்யூனிச நாடுகள் தொழில் வளத்தை நம்பியுள்ளன. தொழில் வளத்திற்கு அறிவியல் வளர்ச்சி தேவை. புதிய அறிவியல் கோட்பாடுகள் மார்க்ஸ், லெனின் ஆகியோரின் கொள்கைகட்கு முரணாக உள்ளன. ஆகவே புதிதாக வளர்ந்து அறிவியலில் தேர்ச்சிபெறும் மக்களால் கம்யூனிசவாதிகளின் குறைகளைத் தெரிந்துகொண்டு, போராடி வெற்றிபெற முடியும்.

கம்யூனிசத்தின் கொடுமைகளும் காலப்போக்கில் குறைந்து கொண்டுதான் வருகின்றன.

### *கொள்கை வேறுபாடு கொண்ட நாடுகள்:*

இரு வேறுபட்ட சமூகப் பொருளாதாரக் கொள்கைகளைக் கொண்ட நாடுகட்கிடையே, போர் ஏற்படும்போது ஒரு நாடு அகிம்சை வழியைக் கடைப்பிடித்து வெற்றி பெற முடியுமா? அமெரிக்காவையும் ரஷ்யாவையும் உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோம். அகிம்சை, சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டது. அது குறைபாடுகட்குப் பாதுகாப்புக் கொடுக்காது. அமெரிக்க முதலாளித்துவமும் ரஷ்யக் கம்யூனிசமும் குறைபாடுகளைக் கொண்டுள்ளன ஆகவே இக்குறைபாடுகள் நீங்கும் வரை அகிம்சைப் போராட்டம் வெற்றி காணமுடியாது.

### *அணுகுண்டுக்கெதிரே:*

அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு ஆகியவற்றை வைத்துள்ள நாடுகட்கு எதிரே அகிம்சை வழிப்போராட்டம் நடத்த முடியுமா? இக்குண்டுகளைப் பெற்றிருப்பதாலேயே அந்நாடுகளால் அவற்றைப் பயன்படுத்த முடியும் என்று சொல்வதற்கில்லை. உள்நாட்டில் அகிம்சைப் போராட்டம் நிகழ்ந்தால் இக்குண்டுகளை உறுதியாக இவர்கள் பயன்படுத்த முடியாது. நாடு முழுமையும் அழிந்துவிடும் என்பது வெளிப்படை. மற்ற நாடுகட்கு எதிரேயும் இக்குண்டுகளைப் பயன்படுத்த மாட்டார்கள். ஏனென்றால் இவர்கள் நாடும் சேர்ந்தே அழிந்துவிடும்.

### *நிலைத்த வெற்றி:*

ஆகவே, அகிம்சை வழியில் முழு நம்பிக்கைகொண்டு சிறந்த முறையில், பலர் சேர்ந்து போராட்டம் நடத்தினால், எந்த நிலைகளிலும், எந்த நாடுகட்கு எதிராகவும் உறுதியான வெற்றி காண இயலும்.

# 10. போருக்கு மாற்றாகும் புதியவழி அகிம்சைப் போராட்டம்

# (NON-VIOLENCE AN EFFECTIVE SUBSTITUTE FOR WAR)

*புதிய வழி:*

போர்க்கலையின் உண்மைகளையும் சிறப்புகளையும் அறிந்து கொண்டால்தான், அகிம்சைப் போராட்டம் போருக்கு எவ்வகையில் சிறந்த மாற்றாக அமைந்துள்ளதென்பதைத் தெரிந்து கொள்ள முடியும்.

“இராணுவத்தின் பண்பிற்கு மட்டுமின்றி, அதன் முறைகட்கும் குறிக்கோள்கட்கும் சிறந்த மாற்றுக் காண வேண்டும். பிரச்சினைகள் எழுந்துகொண்டேதான் இருக்கும். அவைகளைத் தீர்க்கப் போர் அல்லாத ஒரு வழியைக் காண வேண்டும்” என்று வால்ட்ர் லிப்மன்[1] கூறுகின்றார்.

***போர்க் கலையும் அகிம்சைப் போராட்டமும்:***

அருமையான, மந்தமான வாழ்க்கை பொதுவாக அனைவருக்கும் பிடிப்பதில்லை. துணிச்சல் நிறைந்த வாழ்வையே விரும்புகின்றனர். போரில் அதற்கு வாய்ப்பு இருக்கிறது. போரிட்டு உயிர் நீத்தால், சிறந்த காரணத்திற்காக வாழ்ந்து மடிந்தோம் என்ற பெருமை கிட்டுகின்றது. நம்முடைய கூட்டத்தாருடன் சேர்ந்து போரிடுவதால் கூட்டுறவு,

1. It is not sufficient to propose an equivalent for the military virtues. It is even more important to work out as equivalent for military methods and objectives. Any real programme of peace must rest on the premise that there will be causes of disputes as long as we can foresee and that those disputes have to be decided and that a way of deciding them must be found which is not war _ Walter Lippmann. (Political equivalent of way)

உற்சாகம் பிறக்கின்றது. சக்திகள் தோன்றவும் செலவாகவு வழி இருக்கின்றது. சிறந்த பழக்கங்களும், தன்னம்பிக்கையு பயிற்சியினால் உண்டாகின்றன. பிரச்சினைக எழாதிருப்பதில்லை. அவற்றைத் தீர்ப்பதற்கும் போ ஒன்றுதான் வழி என்பதில் அசையாத நம்பிக்கை வந் விடுகின்றது. போரில் மக்கட்கு நாட்டம் ஏற்பட இவைகள் தா காரணங்களாகும்.

சத்திய வழியில் அகிம்சைப் போராட்டத்திலு மேற்கூறிய சிறப்புகட்கெல்லாம் முழு இடம் தரப் பெறுகின்றது

## *அகிம்சாவாதியும் போர்வீரனும்:*

போரில் வெற்றி பெறுவது எப்படியென்பதை கிளாஸிவிட்ஸ் என்பவர் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார் ''எழுச்சியினைப் பேணுதல், பாதுகாப்பு முறையினை போர்முறையாகக் கையாளுதல், தீர்மானமான இடத்தி விசைகளைக் குவித்தல், உடல்பலத்தைவிட ஒழுக்க கூறுபாடுகள் உயர்ந்தவை என அறிந்திருத்தல், வெற்றியி உறுதியோடிருத்தல் ஆகிய இப்பண்புகளே போரி வெற்றிக்குக் காரணங்கள்''2. பாக் (Foch) என்பவ இக்கருத்தினின்றும் சிறிது வேறுபட்டுத் தாக்குதல் முறையை போர் முறையாகக் கொள்ள வேண்டும் என்று கூறுகின்றார்.

மேலே சொல்லப்பட்ட போர் வீரனின் பண்புகளை எவ்வாறு அகிம்சாவாதி கைக்கொள்கிறான் என்பதை காண்போம். அகிம்சாவாதி ஒழுக்க நெறியில் மேம்பட் இருப்பதால், எழுச்சியினைப் பேண முடிகிறது. இவ தோற்றுவிக்கும் ஆச்சரிய நிலை, சிறந்த வெற்றிக்

---

2. Retaining the initiative, using the defensive as the decisive form of ac tion, constrain of forces at the decisive point, determination of that poin superiorty of the moral factor to purely material resources, proper relatio between attack and defence and the will to victory.

வழியாகின்றது. இந்த நிலையை எதிராளியால் உருவாக்க முடிவதில்லை. மேலும் எதிரி விரும்புவதுபோல் வன்முறைகளைக் கையாள்வதில்லை.

அகிம்சாவாதி வெளிப்படையாகவே தற்காப்பு முறையைக் கையாளுகின்றான். ஆனால் பாக் (Foch) என்பார் கூறியதுபோல், உள்ளத்தில் தாக்கும் முறையினைக் கையாளுகின்றான். பிரச்சினையைப் புதிய கோணத்தில் பார்ப்பதற்கு எதிரியின் மனநிலையை மாற்றிப் புதிய வழி காண முயல்கின்றான்.

அகிம்சாவாதி, கருவிகளைக் கையாள்வதில்லை, ஆனால் மனவியல் கூறுகளை அறிந்து உள்ளத்தளவிலேயே ஆயுதங்களைக் குவித்துக் கொள்கிறான். இதன் காரணமாக எதிரியின் குறைகளைப் போக்கி, உயர்த்துவதற்கு முடிகின்றது.

ஒழுக்கத்திற்கு முதலிடம் கொடுப்பதே அகிம்சையின் அடிப்படையாகும். ஆகவே அகிம்சை வீரன், போர் வீரனைப்போலவே ஒழுக்கநெறியைப் பேணுகின்றான்.

தாக்குதலுக்கும் பாதுகாப்பிற்கும் உள்ள சரியான தொடர்பு, சேர்ந்து செயலாற்றுவதே என்பதை அகிம்சாவாதி அறிந்திருக்கிறான். இதனால் போராட்டத்தின் போது இருவர் குறையும் நீங்குகின்றது. இருவருக்கும் மகிழ்ச்சி தரக்கூடிய புதியபாதை உருவாகிறது.

போர்வீரனைக் காட்டிலும், இவனுக்கே, வெற்றியில் உறுதியான நம்பிக்கை ஏற்படுகின்றது. ஏனெனில் எத்தகைய இன்னல்களையும் தாங்கிக்கொள்ளும் மனவலிமையைப் பெற்றுள்ளான்.

இவ்வகையில், அகிம்சைப் போராட்டம், இராணுவத்திலுள்ள சிக்கனம், செய்திகட்கு முக்கியத்துவம் தருதல், பொறுமை-இவற்றைக் கையாள்வதாலும், இராணுவத்திலுள்ள முறைகளையும் கருத்துக்களையும் நீதியின் அடிப்படையில் பயன்படுத்துவதாலும், இராணுவத்தினரை விட மனிதத்தன்மையை நன்கு அறிந்திருப்பதாலும் போர்

முறைக்கு ஒரு மாற்று ஆகும். ஆகவே அகிம்சைப் போராட்டத்திலுள்ள அம்சங்கள் நமக்குப் புதியன அல்ல. ஏற்கனவே இராணுவத்திலுள்ள சிறந்த அம்சங்களைவிட்டு விடக்கூடாது.

### போரினும் அகிம்சைப் போர் சிறந்தது :

போரில் ஏற்படும் பொருட்தேசம்-உயிர்ச்சேதம் இங்குக் குறைவு. இந்திய சுதந்திரப்போரில் இலட்சக் கணக்கானவர் சிறைக்குச் சென்றனர். எட்டாயிரம்பேர் இறந்தனர்; ஒரு ஆங்கிலேயர் கூடக் கொல்லப்படவில்லை.

இப்போராட்டம் நடக்கும்போது நாட்டின் வாழ்க்கை முறை பாதிக்கப்படுவதில்லை. விவசாயம், பிற தொழில்கள் ஆகியன அமைதியாக நடக்கும். இப்போராட்டத்தால் விளையும் அமைதி நிரந்தரமானது. எதிரியின் உதவியும் இதற்குப் பயன்படுத்தப்படுகின்றது. புதிய பாதை இருவர்க்கும் கிடைக்கின்றது. போருக்குப் பின்னர் ஏற்படும் வெறுப்புணர்ச்சி, பழி போன்றவை இங்கு இருப்பதில்லை. போராட்டத்திற்குப் பின்னரும் அகமும் புறமும் ஒன்றாக இருப்பதால் காந்தியடிகள் இதனைச் சத்தியாக்கிரகம் என்றும் கூறினார்.

போரைவிட இது விரைவாகத்தீர்வு காண்கிறது. அத்தீர்வு முழுமையாயும் அமைகின்றது.

போரில் உண்மை மறைக்கப்படுகின்றது. ஆனால் இங்கு எதிரியிடமும், பொதுமக்களிடமும் உண்மை வலியுறுத்தப்படுகின்றது.

அகிம்சைப் போராட்டத்தில் சக்திகள் வீணாவதில்லை. ஆக்கத்திற்கே அவை பயன்படுத்தப்படுகின்றன.

இப்போராட்டத்திற்குப் பின் தீய விளைவுகள் மிகக் குறைவு. அவை ஏற்படுவதில்லையென்றே கூறலாம். பாதுகாப்பிற்கு அகிம்சைப் போராட்டமே சிறந்த முறை என்று ஸ்டீபன்கிங் கூறுகின்றார்.

அணுகுண்டு யுகத்தில் போர் சாத்தியமில்லை. அதிகார ஆசையின் வெளிப்பாடுதான் போருக்குஅடிப்படைக் காரணம் என்று ஆங்கில உளநூல் அறிஞர் கூறுகின்றார். இந்த ஆசைகளை அகிம்சைப் போராட்டத்தினால்தான் நீக்க முடியும்.

இப்போராட்டத்தில் கலந்து கொள்வோரின் ஒழுக்கம் குறைவதில்லை. தொடக்கத்திலிருந்ததை விட முடிவில் சிறந்தவர்களாகவே விளங்குகின்றனர்.

போரில் உள்ள ஒளிவு மறைவென்பது இப்போராட்டத்தில் கிடையாது. திட்டங்கள் முன்கூட்டியே தெரிவிக்கப்படுகின்றன. எதிரியை மதித்து எந்த உடன் படிக்கைக்கும் தயாராக இருக்கின்றனர். மனித இன ஒற்றுமையில் ஆழ்ந்த நம்பிக்கை இருக்கின்றது. பெரும் பயிற்சித் தளங்கள் தேவையில்லை. அரசாங்க ஆதரவோ, அமைப்போ அல்லது பொருள் படைத்தோரின் ஆதரவோ தேவையில்லை. ஏராளமான பொருட்செலவு குறைக்கப்படுகின்றது.

பெண்களும் இதில் பங்கு கொள்ளலாம். உண்மையில் பெண்களே சிறந்த முறையில் அகிம்சைப் போராட்டம் நடத்த முடியும்.

எழை, பணக்காரர், இளைஞர், முதியவர் ஆகிய அனைவரும் இதில் கலந்துகொள்ளலாம். குலத்தடை, இனத்தடை, தேசீயத்தடை இதில் கிடையாது.

*புதிய முறை:*

பாக் என்பார் சொல்லியது போலப் புதிய போர்முறை ஒன்று தொடங்கிவிட்டது. அதில் வீரர்களின் உள்ளங்களே ஆயுதங்கள்.4

---

4. The new kind of war has begun the hearts of soldiers have become a new weapon. - Foch.

# 10. அகிம்சையும் பாதுகாப்புக் கொள்கையும்

### *விடுதலைக்குப்பின் :*

அன்பின் வலிமையாகவும், ஆன்மீகசக்தியாகவும் திகழும் அகிம்சையைத் தனிமனிதர்கள் பின்பற்றி வெற்றி கண்டதற்குப் பல சான்றுகள் உள்ளன. சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஒரு சமுதாயமோ, நாடோ வன்முறைக்கு எதிராக அகிம்சையைக் கைக்கொண்டதற்கு வரலாற்றுச் சான்றுகள் இருப்பதனைக் கண்டோம். நமது நாடு 'கத்தியின்றி, ரத்தமின்றி' அகிம்சை முறையில் வெற்றிகண்ட நாடு. ஆனால் விடுதலைக்குப் பிறகு நமது நாடும் மற்றைய நாடுகளைப் போன்றே பெற்ற சுதந்திரத்தைப் பேணிக் காக்க இராணுவத்தின் துணையை நம்புகின்றது. இது அகிம்சைக் கொள்கைக்கு முரண்பட்ட ஒன்றாகும். அகிம்சையைக் கொள்கையாகக் கொண்டுள்ள நாடு எத்தகைய பாதுகாப்புக் கொள்கையைப் பின்பற்ற வேண்டுமென்பதை ஆராயலாம்.

### *வன்முறைச் சாதனங்கள்:*

இன்று உலகெங்கும் இருக்கின்ற அரசுகள் வன்முறையைச் சேர்ந்தே இயங்குகின்றன. உள்நாட்டில் சட்டம், ஒழுங்கை நிலை நாட்டப் போர்க்கருவிகளைக் கொண்ட போலீஸ் படையையும் வெளிநாடுகளின் தாக்குதல்களிலிருந்து காத்துக்கொள்ளப் பலவகையான இராணுவத்தையும் வைத்துக்கொள்வது தேவையாகின்றது. ஒருபக்கம் மக்கள் வறுமையில் வாடியபோதிலும்,

மற்றொருபக்கம் ஒவ்வொரு அரசும் தனது வருவாயில் 25 முதல் 40 சதவிகிதம் வரை இராணுவத்திற்காகச் செலவிடுகின்றது. எந்த நாட்டில் மக்களைக் கூட்டமாகக் கொன்று குவிக்கத்தக்க இராணுவத்தளவாடங்கள் மிகுதியாக இருக்கின்றனவோ, அந்த நாட்டை வலிமை மிக்க நாடென்று கருதும் மனநிலை இருக்கின்றது.

இத்தகைய இராணுவத்தை நம்பியிருக்கின்ற அரசுகள் மற்றவற்றின் நெஞ்சத்தில் அச்சத்தைத் தோற்றுவிக்கத் தொடர்ந்து முயல்கின்றன. அதே நேரத்தில் எப்பொழுது எந்த நாடு தாக்குமோவென்ற அச்சத்தில் வாழ்கின்றன. மொத்தத்தில் அச்சத்திற்கு ஆட்பட்ட நிலையிலேயே எல்லா நாடுகளும் இயங்குகின்றன. இதனால் மக்கள் விழைகின்ற அமைதியும், வளர்ச்சியும் எதிர்பார்ப்பதைப் போல எங்கும் அமையவில்லை.

## *பெற்றது என்ன? :*

போலீஸ் படையாலும், இராணுவத்தாலும் நாம் பெற்றது என்ன என்பதை எண்ணிப் பார்த்தல் தேவை. போலீசாரைப்பற்றிய அச்சமிருந்தும் உள்நாட்டில் கொலை, களவு, கொள்ளை அடிதடிச் சண்டைகள் போன்ற பலாத்காரச் செயல்கள் குறையவில்லை. இராணுவங்கள் இருந்த போதிலும் போர்கள் நிற்கவில்லை. இப்பொழுதும் சில இடங்களில் தொடர்ந்து சண்டைகள் நடைபெறுவதைக் காண்கிறோம்.

போலீஸ் படையும், இராணுவமும் மனிதர்களிடம் தலைதூக்கும் விலங்குத் தன்மையை அடக்க அமைந்த கருவிகளென வாதாடுகின்றவர்கள் இருக்கின்றனர். இவை இரண்டும் பலவேளைகளில் விலங்கியல்போடு நடந்து கொண்டதை உலக வரலாறு காட்டுகின்றது.

*பாதுகாப்பிற்கு இராணுவம் :*

ஒரு நாடு சில வேளைகளில் அகிம்சையைப் பின்பற்றுவதை ஏற்றுக்கொள்கின்ற சிலர் நிரந்தரமாக எந்த நாடும் இராணுவமே இன்றி, அகிம்சையை மட்டும் நம்பி வாழ முடியாதென்று கருதுகின்றனர். இராணுவமின்றி எந்த நாடும் இருந்ததில்லை என்பதைச் சுட்டிக்காட்டுகின்றனர். பிற நாடுகள் இராணுவத்தோடு இருக்கின்றபொழுது ஒரு நாடு மட்டும் இராணுவமின்றி இருந்தால், அதனால் தனது சுதந்திரத்தைக் கட்டிக் காக்க முடியாதென்று கருதுகின்றனர். ஆனால் காந்தியடிகள் இத்தகைய கருத்துக்களை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர், அகிம்சைக் கொள்கையைப் பின்பற்றுகின்ற நாடு ஆன்மீக சக்தியிலும் மற்றவர்களின் நல்லெண்ணத்திலும் நம்பிக்கை கொண்டிருக்க வேண்டுமென்று கருதுகின்றார்.

இந்தியா ஓர் இராணுவ நாடாக மாறுவதை அவர் விரும்பவில்லை. இதனை அவர் மிகவும் தெளிவாக விளக்கியுள்ளார். விடுதலை பெற்ற இந்தியாவின் பாதுகாப்புக் குறித்துப் பேசுகின்ற பொழுது, "நான் பாதுகாப்புப் பற்றி மிகவும் கவலைப்படுவதில்லை. ஏனென்றால் இந்தியாவை என்னோடு அழைத்துச் செல்ல முடியுமானால், கொள்ளை போன்றவற்றைத் தடுப்பதற்குரிய போலீஸ் படைக்குமேல், நான் எதையும் விரும்பமாட்டேன். ஆனால் பாதுகாப்பைப் பொறுத்தவரை ஆயுதமற்ற அமைதியான இந்தியா உலகம் முழுமையின் நல்லெண்ணத்தையே சார்ந்திருக்கும். ஆனால் தற்சமயம் இது ஒரு கனவுபோலவே இருக்கின்றதென்பதும் எனக்குத் தெரியும்" என்று கூறியுள்ளார்.

இராணுவப் பயிற்சி மனிதனிடம் மனிதாபிமானம் மழுங்கச் செய்து பலாத்கார இயல்பை வலுவுடையதாக ஆக்குகின்றது. நாட்டுப் பாதுகாப்பின் பெயரில் மக்களை

மொத்தமாகக் கொன்று குவிக்கப் பயிற்சி தருகின்றது. இப்படிப் பயிற்சி பெற்றவர்களின் வெறியைத் தணிக்கவாவது போர் தேவைப்பெறுகின்றது. இராணுவத் தளபதிகளை நாட்டின் தலைவர்களாகக் கொண்டிருக்கும் நாடுகள் எல்லாம் அடிக்கடி போர் முழக்கம் செய்து கொண்டிருப்பதைக் காண்கின்றோம்.

சில நாடுகளில் மாணவர்களுக்குக் கட்டாய இராணுவப் பயிற்சியை அளிக்கின்றனர். இத்தகைய பயிற்சியால் மாணவர்கள் உடல் வலிமையே உயர்வானதென்று கருதுகின்றனர். போரைத் தவிர்க்க முடியாதென்ற எண்ணமும் ஏற்படுகின்றது. மொத்தத்தில் இராணுவப் பயிற்சியும், படையும்-சிக்கல்களை அமைதியாகப் பேசித் தீர்த்துக்கொள்ள முடியும் என்ற நம்பிக்கையை சிதறடித்து விடுகின்றன.

## *போரின் விளைவுகள்:*

போரினால் ஏற்படக்கூடிய மிகப் பயங்கரமான விளைவுகளையும் எண்ணிப் பார்க்கலாம். போரின் இறுதியில் ஏதாவதொரு நாடு வெற்றி பெறலாம். ஆனால் போரால் வெற்றிபெற்ற நாட்டின் பொருளாதாரமும், தோல்வியடைந்த நாட்டின் பொருளாதாரமும் சீர் குலைந்துவிடுகின்றன. அரசியலில் நிலையற்ற போக்குத் தோன்றுகின்றது. சமுதாயம் அமைதியற்ற நிலையில் தடுமாறுகின்றது. நாட்டில் வளர்க்கப்பெற்று வந்த கலை, பண்பாடு, நாகரிகக் கேந்திரங்கள் எல்லாம் அழிகின்றன. எந்த வகையில் பார்த்தாலும் போரினால் எந்த வகையான ஆக்கரீதியான பயனும் விளைவதில்லை. ஆதலால் மனிதர்கள் உண்மையில் அறிவுடைமையோடு செயல்படுவதாக இருந்தால் போர் தோன்றாத ஒரு நிலையை உருவாக்க வேண்டும்.

### *அமைதியான நிலை:*

உலக நாடுகளின் வளர்ச்சிக்குப் போரற்ற அமைதியான நிலை தேவைப்படுகின்றது. மனிதன் தன்னிடமிருக்கின்ற திறமைகளைப் பெருக்கி முழுமை பெற்றுத் திகழ அரசியல் அமைப்பு முறை துணை செய்ய வேண்டும். ''உலகம் ஒரு குடும்பம்'' என்ற எண்ணம் வளர வேண்டும். "ஜெய் ஜெகத்" (வாழ்க உலகம்) என்பது இதனையே குறிக்கின்றது. போர் அச்சம் மனத்தில் இருக்கின்ற வரை மனிதன் விலங்கு நிலையிலிருந்து உயர்ந்து தெய்வ நிலையை அடைய இயலாது.

### *இராணுவத்தை நீக்குதல் :*

உலகெங்கும் பெரும்பாலான நாடுகளில் மக்களாட்சியே இருக்கின்றது. மக்கள் எண்ணுவதைச் சட்டமாக்கிச் செயல்படுத்தலாம். போரை எந்த நாட்டு மக்களும் விரும்புவதில்லை. ஆதலால் இராணுவம் தேவையில்லை என்பதை அரசுக்கு உணர்த்த வேண்டும். படிப்படியாக இராணுவத்தின் அளவைக் குறைத்துக்கொண்டே வந்து இராணுவம் இல்லாத ஒரு நிலையை ஏற்படுத்தவேண்டும். போருக்கு எதிராகப் போர் தேவைப்படுகின்றது. போருக்கெதிரான போர் அகிம்சை வழியில் அறத்தை நிலைநாட்டுவதாக இருக்க வேண்டும்.

### *அகிம்சை வழியில் பாதுகாப்பு:*

இராணுவத்தை நீக்கிய பிறகு எப்படி நாட்டைப் பாதுகாப்பதென்ற கேள்வி எழுகின்றது. இப்பொழுதும் கூட

வலிமை குறைந்த இராணுவம் உள்ள நாட்டால் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள இயலுவதில்லை. பிற நாட்டின் துணையை நாடித் தனது சுதந்திரத்தை இழக்க வேண்டியதிருக்கின்றது. இதுவரை நடந்த போர்களில் தோல்வியடைந்த நாடுகளின் நிலையை எண்ணிப்பார்த்தால் இது தெளிவாகும். இந்த நாடுகள் எல்லாம் ஆக்கிரமிப்புக்கு எதிராக ஆயுதம் தாங்கிப் போரிடாமல் அகிம்சை முறையில் அன்னியருக்கு ஒத்துழையாமல் எதிர்த்து நின்றிருந்தால் எத்தகைய விளைவு ஏற்பட்டிருக்கும் என்பதையும் எண்ணிப்பார்க்கலாம்.

*நிராயுதபாணிகளாக :*

அகிம்சை முறையில் நாட்டு மக்களெல்லாம் எழுச்சிபெற்று மரணத்தை அணைத்துக் கொள்ளவும் துணிந்து நிற்கின்றபொழுது, அவர்களை எல்லாம் மொத்தமாகக் கொன்று குவிக்க எந்த இராணுவத் தளபதிக்கும் மனம் வராது. அவனும் மனிதன் தானே! அவனிடமும் தூங்கிக் கொண்டிருக்கும் மனிதாபிமான உணர்ச்சி விழித்துக் கொள்ளத்தானே செய்யும்! அகிம்சை வழி நிற்கும் மக்களைக் கொல்வதை வீரமென்று அவனது நாட்டினரே ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். மாறாக அவர்களது அன்பும் அனுதாபமும் எதிரி நாட்டினர் மீதே இருக்கும். உலக நாடுகளின் அன்பையும் ஆன்மீக ஆதரவையும் அகிம்சை வழி நிற்கும் நாட்டார் பெற முடியும்.

அகிம்சையைப் பாதுகாப்புக் கொள்கையாக ஏற்றுக் கொள்ளும் அரசுக்கும் மக்களுக்கும் தங்கள் மீதும் தங்களது ஆன்மீக சக்தி மீதும் நம்பிக்கை இருக்க வேண்டும். அகிம்சை கோழைகளின் ஆயுதமாக இல்லாமல் வீரர்களின் கவசமாகத் திகழவேண்டும்.

*பயிற்சி :*

இராணுவத்தைப் பாதுகாப்பிற்கு வைத்திருக்கின்ற நாடு இராணுவத்தில் சேர்ந்திருக்கின்றவர்களுக்கு மட்டும் பயிற்சி தருகின்றது. இது போன்று, அகிம்சைக் கொள்கையைப் பின்பற்றுகின்ற நாடும் பயிற்சிதர வேண்டும். இந்தப் பயிற்சி குறிப்பிட்ட சிலருக்கு மட்டும் கொடுப்பதில் பயனில்லை. நாட்டு மக்கள் அனைவருக்கும் அகிம்சைவழியில் பயிற்சி தர வேண்டும். அகிம்சை, வாழும் முறைமையாக மாறவேண்டும். ஒரு சத்தியாக்கிரகிக்கு இருக்க வேண்டிய பண்புகளை எல்லாம் நாட்டுமக்கள் பெறுகின்ற வகையில் கல்விமுறையும், பிற சமுதாய, பொருளாதார அரசியல் அமைப்புக்களும் இருக்கவேண்டும்.

நமது நாட்டில் சர்வோதய இயக்கத்தினர் ஆங்காங்கு அமைத்திருக்கின்ற அமைதிப்படையான ''சாந்திசேனை'' ஒரு முன்னோடிச் செயல்திட்டமாக விளங்குகின்றது. சாந்திசேனையில் சேர்ந்திருக்கின்றவர்களுக்கு அகிம்சை வழியில் தங்களது வாழ்க்கையை அமைத்துக் கொள்ளப் பயிற்சி தரப்பெறுகின்றது. சத்தியாக்கிரகியிடம் இருக்க வேண்டிய இயல்புகளை அவர்களிடம் உருவாக்கத்தக்க சூழ்நிலைகளை ஏற்படுத்தித் தருகின்றனர். சாந்திசேனையைச் சேர்ந்தவர்கள் தாங்கள் வாழும் பகுதியில் ஏற்படுகின்ற சண்டைகளையும், கலவரங்களையும் அன்பு முறையில் தீர்த்து வைக்கின்றனர்.

சாந்திசேனை நாடு தழுவிய இயக்கமாக மாறிச்செயல்படுமானால் போலீஸ் படைக்கு நாட்டில் தேவை குறைந்துவிடும். அந்நிலையில் நாட்டுப் பாதுகாப்பிற்கும் அகிம்சையே அரணாக இருக்கும்.

### தோற்றம்:

சாந்திசேனை என்ற எண்ணம் அண்ணல் காந்தியின் உள்ளத்திலேயே கருக்கொண்டது. ஆனால் அதனை ஓர் இயக்கமாக உருவாக்கி அதனை நிர்மாணத்திட்டத்திலும் இணைத்தவர் வினோபா பாவே. பூதானம், கிராமதானங்களை விளக்கிச் செயல்பட்டு வந்த அவர், அவற்றைப் பாதுகாக்கச் சாந்தி சேனை அமைவது இன்றியமையாதது என்பதை உணர்ந்தார். எனவே 1957-ம் ஆண்டில் அதற்கு உருவம் கொடுத்தார். ஐயாயிரம் மக்கள் தொகை உள்ள ஊருக்கு ஒரு சாந்தி வீரன் தேவை. என்று வேண்டினார். ஒவ்வொரு ஊரிலும் சாந்தி சேனை அமைய வேண்டும் என்று அவர் விரும்பினார். அதன் பணி சிற்றூரில் தொடங்கி ஐ.நா. வரை தொடர வேண்டும் என்று சொன்னார். 1972-ஆம் ஆண்டிலேயே ஐ.நா. சபையிலும் அமைதி அல்லது சாந்திப்படை அமைய வேண்டும் என்றும், இந்தியாவின் சார்பிலும் அதற்குரிய வீரர்களைத் தம்மால் தர இயலும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

### செயல்பாடுகள் :

சாதாரண நேரங்களில் சமுதாயச் சேவைகளில் ஈடுபடுதல்; எதிர்பாராத விளைவுகள் ஏற்படும் வேளைகளில் உயிரைக் கொடுத்தேனும் அமைதியை நிலை நாட்டுதல்- ஆகியவற்றைச் சாந்தி சேனையின் தலையாய பணிகளாக வினோபா வகுத்தார். எனவே இந்தப்படை எப்போதும் இயங்கிக் கொண்டே இருக்கும். இது, சாதி, சமய, கட்சிகளுக்கு அப்பாற்பட்டு, வேற்றுமை என்பதைத் துளி அளவேனும் பாராட்டாது, பொது நலம் பேணும் அமைப்பு

ஆகும். எல்லார்க்கும் எல்லாம் என்ற சர்வோதயக் கோட்பாட்டைப் பரப்பும் பணியைச் செய்யும் அண்ணல் காந்தி, சத்தியாக்கிரகிகளுக்கு வகுத்துத் தந்த இலக்கணம் எல்லாம் சாந்திசேனைக்கும் பொருந்தும். எனவே அகிம்சையே இச்சேனையின் உயிர்நாடி. அமைதியின்மையை அகிம்சை வழியில் போராடி அமைதியை நிலைநாட்டுவதே இதன் குறிக்கோளாகும். உள்நாட்டில் மட்டுமன்றி உலகின் எந்தப் பகுதியிலும் போரே ஏற்படக் கூடாது என்ற துடிப்பான எண்ணத்தோடு இந்தப் படை பணியாற்றும். அநீதிகளை அடியோடு எதிர்க்கும். அகிம்சைச் செயலுக்கான ஆற்றலை வளர்ப்பதில் இடையறாது இந்தப் படை செயல்படும். ஏழைகளின் துன்பங்களைச் செல்வர்களிடம் இதமாக எடுத்துக்கூறி, அவர்களின் துயர்போக்கத் துணை செய்யும். தனியுடைமைக் கொடுமைகள் தீரத் தொண்டு செய்யும். கல்லாமையை இல்லாமை ஆக்கும்.

### *தகுதிகள்:*

இத்தகைய சாந்தி சேனையில் இணையும் ஒவ்வொருவனும் உயர்வு தாழ்வு என்னும் வேற்றுமையை விட்டு எல்லோரையும் ஒப்ப மதிக்கும் உள்ளம் உடையவனாக இருத்தல் வேண்டும். தன்னைப் பார்த்த உடனேயே மக்கள் மனத்தில் அச்சம் அகன்று துணிவு பிறக்க வேண்டும். தன் தூய்மையாலும், நடுவுநிலைமையாலும் எந்தக் கொள்கை யாளரையும் ஈர்த்துவிடவேண்டும். தேவை ஏற்படும் போது தன்னையே தியாகம் செய்யும் துணிவுமிக்கவராய் இருத்தல் வேண்டும். அவர்கள், நோயுற்றவர்க்கு உதவுதல் கடனாகும். மக்களின் இன்ப துன்பங்களை உணர்ந்து அதற்கேற்ப உதவ முன் வருதல் வேண்டும். ஒவ்வொரு வீட்டின்

உறுப்பினராகவே மாறிவிடுதல் வேண்டும். இத்தகைய வீரர்களுக்கு உரிய தகுதிகளாகக் கீழ்க் கண்டவற்றை அண்ணல்காந்தி வகுத்துக் கொடுத்துள்ளார்.

1) கடவுளிடத்தும் அகிம்சையிடத்தும் ஆழமான நம்பிக்கை கொள்ள வேண்டும்.

2) எல்லா மதத்தையும் சமமானவையாக மதிக்க வேண்டும்.

3) வட்டாரத்திற்கென அமைகின்ற சேனையில் அந்த வட்டாரத்தைச் சார்ந்தவரே உறுப்பினராதல் வேண்டும்.

4) பொதுமக்களிடம் எப்போதும் தொடர்பு வைத்திருக்கவேண்டும். அவர்களின் நன்மதிப்பைப் பெற வேண்டும்.

5) உடல் பலத்தைவிட மனபலம் மிகுதியும் கொண்டவர்களாய் இருத்தல் வேண்டும்.

## *இந்தியா உலகிற்கு:*

கொலை வழியிலான போர்ச் செயல்களில் நம்பிக்கை குறைந்து வருகின்ற காலமிது. "போர் எதிர்ப்பாளர் மாநாடுகள்" இதனையே காட்டுகின்றன. இரண்டு உலகப்போர்களின் விளைவுகளையும் சுட்டிக்காட்டி, மூன்றாம் உலகப்போர் மூண்டால் உலகமே அழியுமென அறிஞர்கள் எச்சரிக்கின்றனர். உலகத்தையே அழிப்பதற்குத் தேவையான ஆயுதங்களைக் குவித்து வைத்திருக்கின்ற வல்லரசுகளும் இருக்கின்றன. அவற்றின் தலைவர்களும் அவற்றின் பயனற்ற நிலையைப்

உணர்ந்து வருகின்றனர். இந்த நிலையில் அகிம்சையின் மூலம் நாட்டைப் பாதுகாக்க முடியும் என்ற மெய்யறிவைப் பரப்பினால் நல்ல பலன் விளையும். இதற்கு முன்னோடியாக ஏதாவதொரு நாடு உருவாக வேண்டும். அந்த நாடாக அண்ணல் காந்தி பிறந்த இந்தியா மாறுமானால், உலகையே அழிவினின்றும் காக்கின்ற ஒப்பற்ற புனிதப் பணியைச் செய்கின்ற பெருமையைப் பெறும்.

# 12. பயிற்சியின் தேவை

### *வன்முறையும் அகிம்சையும் :*

இன்றைய சூழ்நிலையில் நெருக்கடி நிலைமைகள், மக்களை மிகவும் பாதிக்கின்றன. இந்த அமைப்பில் தான் மக்கள் வளர்ந்து வருகின்றனர். வன்முறையை அடிப்படையாகக் கொண்ட இன்றைய அமைப்புகட்கு மாறுபட்டது, அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட போராட்டம். அதனால் அதற்குப் பயிற்சி தேவைப்படுகின்றது.

### *பழக்கம் :*

நம்மிடமுள்ள பலகுணங்கள் பழக்கத்தினால் வந்தவை. சக்தியை மிச்சப்படுத்துவதற்கும் மூளையைப் பிற வழிகளில் செலுத்துவதற்கும் பழக்கங்கள் தேவைப்படுகின்றன. சிறப்பாக வேண்டுமானால் அகிம்சைப் போராட்டம் ஒரு பழக்கமாகவே மக்களிடம் அமையவேண்டும். இதற்கு நீண்ட காலப் பயிற்சி தேவைப்படுகின்றது.

பிரச்சினை ஏற்படும் சமயத்தில் நேரிய வழிகளில் சிந்திக்கவும் முடிவெடுக்கவும் நேரமிருக்காது. ''அந்தச் சமயத்தில் நம்முடைய பழக்கங்கள், கருத்துக்கள் உணர்ச்சிகட்கு ஏற்றாற்போல் செயல்படுகின்றோம்'' என்று ஜெரால் ஹெர்ட் கூறுகின்றார். ஆதலால் அகிம்சையைப் பழக்கத்திற்குக் கொண்டு வந்துவிட்டால், நெருக்கடி நிலையில் அகிம்சை வழிகளையே பயன்படுத்துவோம். இதற்குப் பயிற்சித் தேவை.

### *புதிய சக்தி :*

சரித்திரங்களைப் படிப்பதால் மட்டுமே முன்னேற்றம் காணமுடியாது. அனுபவத்தால் உண்மையான முன்னேற்றம்

உண்டாக்க முடியும். அனுபவமும் கற்பனைச் சக்தியும் புதிய கருவிகளையும், புதிய தத்துவங்களையும் கண்டு பிடிக்க உதவுகின்றன. இவ்வாறு கண்டு பிடிக்கப்பட்ட ஒரு புதிய சக்தியே அகிம்சைச் சக்தியாகும். இச்சக்தியை அனுபவத்தில் கொண்டு வருவதால் அதன் வலிமையை நன்கு உணரலாம்.

### *குழந்தை வளர்ப்பு :*

அகிம்சையை அடிப்படையாகக் கொண்ட சமுதாயத்தை அமைப்பதற்குக் குழந்தைகளை அகிம்சை முறையில் வளர்க்க வேண்டும். அகிம்சைத் தத்துவங்களையும் அதன் வலிமைகளையும் உணருமாறு செய்ய வேண்டும். இதற்குக் குடும்ப முறையை மாற்றி அமைக்க வேண்டும். குடும்பத்தில் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் அதிகாரம் செய்யக்கூடாது. குழந்தைகளிடம் வெறுப்புக் காட்டக்கூடாது. வன்முறையான தண்டனைகளைத் தரக்கூடாது. அன்பால் வளர்க்க வேண்டும். இதற்கு தகுந்த பயிற்சி தேவை.

### *சீர்திருத்தம் :*

பழக்கத்தினால் மட்டுமே எந்தவொரு புதிய கருத்தும் மக்களிடையே வலிமை பெற முடியும். அப்பொழுதுதான் சீர்திருத்தம் செய்ய இயலும். நன்கு பயிற்சி பெற்ற கூட்டத்தினர்களிடம் தான் சீர்திருத்தம் நிலைத்து நிற்க முடியும். ஆதலால் மக்கட்கு அகிம்சை வழிகளில் பயிற்சி தருதல் அவசியமாகிறது.

### *நெருக்கடி நிலை :*

அகிம்சை வழிப் போராட்டத்தில் சிறை செல்ல நேரிடும். கொடுமைகளைத் தாங்க வேண்டும். பல நெருக்கடி நிலைமை களைச் சமாளிக்க வேண்டும். இதற்குப் பயிற்சி தேவை.

*புதிய கருத்து :*

எந்தவொரு புதிய முறையையும் அறிந்து செயலிற் கொண்டு வருவதற்குப் பயிற்சி இன்றியமையாதது. ஒரு மருத்துவர் அல்லது பொறியியல் நிபுணர் ஆவதற்குப் பல வருடம் பயிற்சி தேவைப்படுகின்றது. இதே போன்று அகிம்சையும் நமக்கு ஒரு புதிய கருத்துதான். அதைச் செயலில் கொண்டு வருவதற்குப் பல வருடப் பயிற்சி தேவை.

*ஒழுக்கம் :*

அகிம்சைப் போராட்டத்தில் எதிரியைவிட அகிம்சாவாதி ஒழுக்கத்தில் மேம்பட்டிருக்க வேண்டும். குற்றங்களற்றவனாக இருக்க வேண்டும். இது பயிற்சியினாலேயே ஏற்படும்.

*புதிய பாதை :*

அகிம்சைப் போராட்டத்தில் பொது மக்களின் ஆதரவு பெற்றிருப்பது அவசியம். வெற்றி, எதிரியின் மனமாற்றத்தில் தான் அடங்கியுள்ளது. பிரச்சினையைத் தீர்ப்பதற்கு எதிரிக்கும் மகிழ்ச்சி தரக்கூடிய புதிய பாதையைக் கண்டு பிடிக்க வேண்டும். இவற்றிற்கெல்லாம் நீண்டகாலப் பயிற்சி தேவை.

*நம்பிக்கை :*

போதிய பயிற்சி இல்லாததால், உலக அறிஞர்கள் எனப் பாராட்டப்பட்ட சிலர்கூட, முதல்-இரண்டாம் உலகப் போர்களில், 'போரே பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குச் சரியான வழி' என்று கூறியுள்ளனர். ஆனால் சுதந்திரமோ உலக அமைதியோ நேரடியாகப் பெறக்கூடியதன்று. ஒருவருக்கொருவர் நம்பிக்கை, மதிப்பு, கூட்டுறவு இவற்றைக் கடைப்பிடித்தால் மட்டுமே பெறமுடியும். போதிய பயிற்சியின்றி இந்நிலையடைய முடியாது.

### குழுச்சத்தியாக்கிரகம் :

தனி மனிதனுக்குப் பொது வாழ்வில் பங்கு பெற மிகுந்த நேரம் கிடைப்பதில்லை. அவனால் நியமிக்கப்பட்ட தொண்டர்கள் எனும் அரசியல்வாதிகள் கூடிய விரைவில் சுயநலம், லஞ்சம் போன்றவற்றிற்கு இரையாகின்றனர். பிரச்சாரமோ மிக அதிக அளவில் மக்களை ஏமாற்றப் பயன்படுத்தப்படுகின்றது. ஆதலால் இவர்களை நீக்குவதுதான் ஒரே வழியாகும். இதற்குக் குழுச் சத்தியாக்கிரக முறையைக் கைக்கொள்ள வேண்டும். நல்ல பயிற்சியாலேயே இந்த நிலை உருவாகும்.

### பணிவு :

அகிம்சையில் பயிற்சி பெறுவது அகங்காரத்தையும் பணிவின்மையையும் உண்டாக்கிவிடுகின்றது என்று சிலர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். பிரச்சினைகளைத் தீர்க்க நீதிமன்றத்துக்குச் செல்லுகின்றோம். நீதிபதிகள் சட்டம் படித்திருக்கிறார்கள். ஆனால் சட்டம் படித்தால் அகங்காரம் பிடித்தவர்களாக இருப்பார்கள் ஏன்று நீதிமன்றம் செல்ல ஒருவரும் தயங்குவதில்லை. இதே போன்று அடி, உதை போன்ற வன்முறைகளும் பிரச்சனையைத் தீர்க்க உதவுகின்றன. பணிவின்மையை உண்டாக்குமேயென்று குத்துச்சண்டைப் பயிற்சியில் மக்கள் ஈடுபட மறுப்பதில்லை. இதே போன்றுதான் போர்க்கலை, அரசியல், குழந்தை வளர்ப்பு போன்றவை. இவையெல்லாம் பணிவின்மையை உண்டாக்குமேயென்று இவற்றில் பயிற்சி பெற மக்கள் தயங்குவதில்லை. இதே போன்று அகிம்சைப் பயிற்சியும் பணிவின்மையை உண்டாக்காது.

### வெற்றுச்சடங்கு :

அகிம்சைப் போராட்டத்தின் பயிற்சி, புறத்தில் மாறுதல்களை ஏற்படுத்துகின்றது. ஆனால் அகத்தில் மாறுதல்

ஒன்றும் நிகழ்வதில்லை; இதனால் அகமும் புறமும் மாறுபட்டுப் பாசாங்குக் காரணமாக மாறி விடுகின்றான் என்று சிலர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். இது தவறு. இராணுவப் பயிற்சியிலும், பயிற்சியின் அவசியத்தை ஒருவன் நன்கு புரிந்து கொள்ளாமல் பயிற்சியின் போது செய்யப்படும் ஒவ்வொரு சிறு செயலுக்கும் உண்டான காரணத்தை அறியாமல் இருந்தால் அப்பயிற்சி பொருளற்ற வெற்றுச் சடங்காகிவிடும். இது எந்தத் துறையிலும் நிகழக்கூடாது. அது அத்துறையின் குற்றமன்று.

### *துறவிகட்கா? :*

அகிம்சைப் பயிற்சி துறவிகட்குத்தான் ஏற்றது அல்லது அகிம்சை முறையில் பயிற்சி பெற்றால் ஒருவன் துறவியாகி விடுவான் என்று சிலர் அஞ்சுகின்றனர். முற்காலத்தில் அது துறவிகளால் மட்டுமே கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. இப்போது அவ்வாறில்லை. ஒரு புதிய பயிற்சி முறையைக் கண்டுபிடித்ததால் அனைவரும் கடைப்பிடிக்கக்கூடிய நிலை வந்துவிட்டது. பயிற்சி முறை என்பது ஒரு கருவியாகும். எல்லோரும் பிறந்தவுடன் வீரர்களாக இருப்பதில்லை. ஆனால் பயிற்சி இதை சாத்தியமாக்குகின்றது. இதே போன்று காந்தியடிகள் கண்ட அகிம்சைப் பயிற்சிமுறையைப் பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட விவசாயிகள் பர்தோலியில் மேற்கொண்டு வெற்றி அடைந்தனர். இவர்களெல்லாம் துறவிகளா? அல்லரே!

### *தற்பெருமை :*

அகிம்சைப் பயிற்சி தற்பெருமையை உண்டாக்குகின்றது. வரட்டுப் பிடிவாதத்தை வளர்க்கின்றது என்று சிலர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். பயிற்சியினால் ஒரு தனி மனிதன் தற்பெருமை அடைந்தால் அது அவனுடைய தவறேயாகும். அவனுடைய வளர்ச்சியின்மையும் அறிவின்மையும் காட்டுகின்றது. நெருக்கடியான சூழ்நிலையில் அவன்

வன்முறையைப் பயன்படுத்திவிடுவான். இதெல்லாம் எல்லா பயிற்சிகளிலும் நிகழக் கூடியதே.

### கட்டுப்பாடு :

இதே போன்று, .'அகிம்சை பயிற்சி வெறியைத் தருகின்றது; வரட்டுப் பிடிவாதத்தை வளர்க்கின்றது; ஊக்கத்தைக் குறைக்கின்றது; உற்சாகமின்மையைத் தருகின்றது' என்பன போன்ற பல எதிர்ப்புக்களுக்கும் பதில் கூறலாம். இவைகளெல்லாம் எல்லாத்துறைகளிலும் நிகழக் கூடியன. அகிம்சைப் பயிற்சி பெற்ற பின்பு மேற்கூறிய எதிர்ப்புக்களைக் கவனிப்போம். மேலும் அகிம்சைப் பயிற்சி தனி மனிதனுடைய கட்டுப்பாட்டை வளர்ப்பதால் மேற்கூறிய குறைகட்கு இடமிருக்காது.

### சுதந்திரம் :

அகிம்சைப் பயிற்சியும் அதன்பின் கடைப்பிடிக்கக்கூடிய பழக்கவழக்கங்களும் மனிதனுடைய சுதந்திரத்தைப் போக்கி விடுகின்றன. அவனை அடிமையாக்கிவிடுகின்றன என்று சிலர் குறை கூறுகின்றனர். இது தவறாகும். பயிற்சிக்கு யாரும் கட்டாயப்படுத்தப்படுவதில்லை. அகிம்சைப் பயிற்சி தனி மனிதனிடமிருந்து தானாக மலர வேண்டிய ஒன்றாகும். ஆனால் தன்னடக்கமும், நல்ல பழக்கவழக்கங்களும் இல்லாமல், எந்தவித முன்னேற்றமும் ஏற்படாது. சுதந்திரத்தின் சின்னம் என்று கூறப்படும் காற்றும், காற்று இயக்கவியல் விதிகட்கு உட்பட்டது. நீதி அறிவுக் கோட்பாட்டுக்குத் தகுந்தாற்போல் நடக்காவிட்டால் சுதந்திரம் என்பது சாத்தியமில்லை.

### மனித ஒற்றுமை :

அகிம்சையின் அடிப்படை மனித இன ஒற்றுமை ஆகும். இச்சக்தி வலிமை வாய்ந்தது என்பதை சிலர் நம்ப

மறுக்கின்றனர். 'கண்ணால் காண முடியாத சக்தியை எவ்வாறு நம்புவது? அதுவும் ஜாதி மத இனப்பிரிவுகள் வலிமை வாய்ந்த தாய் காணப்படும் இக்காலத்தில். ஒற்றுமை வலுவுள்ளது என்பதை எங்ஙனம் நம்புவது?' என்பன அவர்கள் விடுக்கும் வினாக்கள். இது நீச்சல் கற்காத ஒருவனின் நிலை போன்றது. மிதத்தல் விதியை நம்பினால் தான் நீச்சல் கற்றுக் கொள்ள முடியும். கற்றபின் அவ்விதியின் முக்கியத்துவத்தை நன்கு உணரலாம். இதே போன்று மனித இன ஒற்றுமையை நம்பினால், அகிம்சையில் சிறந்த பயிற்சி பெறலாம். பயிற்சி பெற்ற பின்னர் அதன் வலிமையை நன்கு உணரலாம்.

# 13. அகிம்சையாளனுக்குரிய பயிற்சி முறை

*குறிப்பேடு :*

அகிம்சைப் போராட்டம் போருக்கு ஒரு சிறந்த மாற்று. ஆதலால் இராணுவத்திலுள்ள சிறப்பான அம்சங்களை அகிம்சை முறைப் பயிற்சியிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். இராணுவச் சேவைக் குறிப்பேடு போன்று அகிம்சை வாதிகட்கும் தேவை.

*குறிக்கோள் :*

இராணுவ வீரர்கள் போரின் இலட்சியத்தையும் வெற்றி பெறுதற்குரிய வழிகளையும் அறிந்து அதற்குரிய பண்புகளை வளர்த்துக் கொண்டு நீண்ட காலப் பயிற்சி பெறுகின்றனர். இதே போன்று அகிம்சாவாதிகள் அகிம்சைப் போராட்டத்தின் பொருள், குறிக்கோள் இவற்றை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். அதற்கேற்ற மன நிலைகளைக் கண்டுபிடிக்க வேண்டும். உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளப் பழக வேண்டும். அப்போதுதான் செயல் திறமையாக அமையும்.

*நூலறிவு :*

முக்கிய சந்தர்ப்பங்கள் தகுந்த முறையில் கவனிக்கப்பட வேண்டும். போர் வீரர்கட்கு இராணுவத்தில் சேருவதற்கு முன்னாலேயே, போரைப் பற்றிய அறிவு ஓரளவு இருக்கின்றது. ஆனால் அகிம்சைவாதிக்கு இம்முறை புதியது. ஆதலால் அகிம்சையைப் பற்றிய புத்தகங்களை நன்கு படிக்க வேண்டும். தலைவர்களிடம் அகிம்சை கருத்துக்களைக் கேட்டு விவாதித்து அகிம்சை முறையை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். தலைவர்களும் தொண்டர்களும் அகிம்சைத்

துறையில் நிறைய நூற்கள் படித்திருக்க வேண்டும். தொண்டர்கள் தலைவர் கூற்றை நம்பவேண்டும்.

அகிம்சையில் நம்பிக்கையுள்ள ஒவ்வொருவரும் பின்வரும் நூல்களை நன்கு படித்திருக்க வேண்டும். (1) சத்திய சோதனை (2) மகாத்மா காந்தியின் வாழ்க்கை (லூயிபிஷர் எழுதியது) (3) Civil disobedience (by Thoreau) (4) Stride Towards Freedom by Martin Luther King (5) Conquest of violence by Joan V.Bondurant.

### *படிக்கும் குழு :*

புதிய கருத்துக்களைப் படித்து ஒழுக்கக் கட்டுப்பாட்டினை வளர்த்துக் கொள்ள வேண்டும். எதிர்ப்புகட்குப் பதில் சொல்லத் தயாராக இருந்து கொள்ள வேண்டும். படிக்கும் குழு அமைத்து அகிம்சை, அமைதி போன்ற நூல்களைப் படித்து விவாதிக்க வேண்டும். அகிம்சைப் பயிற்சியே ஒரு தொடர்ச்சியான கல்வி ஆகும். இதில் உற்சாகமும் மகிழ்ச்சியும் பிறக்கின்றது. ஒவ்வொருவனும் தன் நிலையை அறிந்து கொள்வதால் தன்னம்பிக்கையும் வீரமும் பிறக்கின்றது.

### *குழு அமைப்பு :*

அகிம்சைப் போராட்டத்தின் மூலம் சமூக, பொருளாதார தீமைகளை நீக்குவதற்கு பலர் முன் வரலாம். இவர்களை ஒரு குழுவாக அமைத்துப் பயிற்சியளிக்க வேண்டும். ஓர் இடத்தில் கூடி, அறிவுரைகள் பெறுவதற்கு இடவசதி வேண்டும். பயிற்சி வகுப்பில் சிறுசிறு குழுக்களாகப் பிரித்து விட வேண்டும். குறைந்த அளவில் ஐந்து பேரும் அதிக அளவில் பன்னிரெண்டு பேரும் ஒரு குழுவில் இருக்கலாம். இக்குழு கூடுவதற்கு ஒரு சிறு அறை போதுமானது. குழுவிலுள்ள ஒவ்வொருவரும் ஒருவரையொருவர் நன்கு அறிந்திருத்தல் வேண்டும். பணம்

திரட்டுவதைக் கூடுமானவரைத் தவிர்க்க வேண்டும். சிறு குழுக்களை, வட்ட-பிராந்திய-தேசிய குழுக்களோடு இணைக்க வேண்டும்.

### *மனநிலை வளர்ச்சி :*

அகிம்சைப் போராட்டத்திற்குரிய மன நிலையை வளர்த்துக் கொள்ள வேண்டும். படித்துச் சிந்தித்த பிறகு தனி மனிதர்கள் தைரியம், சுயமரியாதை, பொறுமை, தியாகம், தோல்வியைக் கண்டு அஞ்சாமை, ஒற்றுமை, சத்தியப்பற்று, அனைவரையும் மதித்தல், பணிவு, மனித இன ஒற்றுமையில் நம்பிக்கை, நல்ல வழிகளைக் கடைப்பிடித்தால் முடிவும் நன்றாக இருக்கும் என்பதில் நம்பிக்கை-இவற்றை வளர்த்துக் கொள்ள வேண்டும். வீடுகட்குத் தீ வைத்தல், சிறுவர்களைத் தாக்குதல், துப்பாக்கி சூடு, கைது, இராணுவத்தைக் கொண்டு அடக்குதல் போன்ற ப்ல நெருக்கடியான நிலைகளை எண்ணி பார்த்து அவைகளை எவ்வாறு அகிம்சை முறையில் சமாளிக்க வேண்டும் என்பதை முடிவு செய்ய வேண்டும். இதற்கு ஒவ்வொரு தொண்டனும் மேற்கூறிய நிலைகளில் நான் எவ்வாறு நடந்து கொள்வேன் என்பதை வெளிப்படையாகக் கூற வேண்டும். அனைவரும் அவர் தம் கருத்துக்களைக் கூறிய பிறகு, அனைவருக்கும் ஏற்ற ஒரு அகிம்சை வழியைக் காண வேண்டும். அதற்கு எல்லோரும் கட்டுப்படுவோம் என்ற உறுதி மொழியை எடுக்க வேண்டும். ஒவ்வொரு தொண்டனும் அன்றாட வாழ்வில் அகிம்சையை மேற்கொள்ள வேண்டும். மெதுவாகவும், அமைதியாகவும் பேசத்தெரிந்திருக்க வேண்டும். தன்னை மதிக்க வேண்டுமென்ற ஆசையை விட்டுவிட வேண்டும். அகிம்சை வீட்டில் ஆரம்பிக்கிறது. மேலிருந்து புகுத்தக்கூடிய ஒன்றில்லை என்பதை உணரவேண்டும்.

### *சுயமரியாதை :*

எல்லா முன்னேற்றத்திற்கும் சுயமரியாதையே அடிப்படையாகும். திறமையாகச் செயல்புரிவதற்கு

தன்னம்பிக்கை தேவை. தன்னம்பிக்கைக்கு அடிப்படை சுயமரியாதை. இதை வளர்க்கத் துப்புரவான உடல், ஆடை, சுற்றுப்புறத் தூய்மை இவற்றில் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். நாம் மேற்கொள்ளும் அகிம்சை முறையில் நம்பிக்கை இருந்தால் சுயமதிப்புக் கிடைக்கும். நம்பிக்கையும் வளரும். சுயமரியாதை, சுயமுக்கியத்துவமாக மாறக் கூடாது. உயர்வு மனப்பான்மை இருக்கக் கூடாது. பணிவு மிகவும் அவசியம்.

### *கடவுள் நம்பிக்கை :*

"அகிம்சைப்போராட்டம் வெற்றி பெறுவதற்கு ஆழ்ந்த கடவுள் நம்பிக்கை வேண்டும்'' என்று காந்தியடிகள் கூறுகின்றார். கடவுள் என்ற பெயரை விரும்பாவிட்டால் சத்தியம், மனித இன ஒற்றுமை இவற்றில் ஆழ்ந்த நம்பிக்கை கொள்ளலாம். அனுபவத்தால் தான் இத்தகைய ஆழ்ந்த நம்பிக்கை வரமுடியும். உதாரணமாக நாம் பிறந்ததிலிருந்து புவியீர்ப்புச் சக்தியை உணர்வதால் அதை நம்புகின்றோம்.

### *அன்பின் சக்தியில் சோதனை செய்து பார்த்தல் :*

ஆழ்ந்த நம்பிக்கை பெறுவதற்கு மற்றொரு வழி சோதனை செய்து பார்ப்பதாகும். காந்தியடிகள் செய்த மகத்தான தொண்டு அறிவியல் வழிகளை நீதித்தளத்தில் பயன்படுத்தக் கற்றுக் கொடுத்ததாகும். அவர் சத்தியத்தில் சோதனை செய்து பார்த்தார். ஆகவே தன்னுடைய சுயசரிதைக்குச் ''சத்திய சோதனை'' என்று பெயரிட்டார். இதனால் கடவுளிடம் அசையாத நம்பிக்கை ஏற்பட்டது. மக்களிடம் கடவுளைக் காண முடிந்தது. அகிம்சையின் அளப்பரிய சக்தியைக் காணமுடிந்தது. இதேபோல் ஒவ்வொரு அகிம்சைத்தொண்டனும் தவறுகளை வெளிப்படையாக ஒத்துக் கொள்ளுதல், தவறு செய்பவனை மன்னித்தல், எதிரியிடம் அன்பு காட்டுதல், நமக்குப் பிறர் என்ன செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கின்றோமோ அதையே நாம்

பிறர்க்குச் செய்தல் ஆகியவற்றில் சோதனை செய்து பார்க்க வேண்டும். பல தடவை செய்து பார்த்து விளைவுகளைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். மேலும் தொடர்ந்து சோதனைகளைச் செய்ய வேண்டும். இதனால் புதிய ஒன்றில் ஆழ்ந்த நம்பிக்கை பெற முடியும்.

### *தம்மைச் சார்ந்தோரிடையே ஒற்றுமை :*

சேர்ந்து பாடுதல், ஒற்றுமை வளர வகை செய்யும். இதனால் தான் காந்தியடிகள் பஜனைப் பாடல்கட்கு முதன்மை கொடுத்தார். படிப்புத் தொடங்கும் போதும் உண்ணத் தொடங்கும் போதும் சேர்ந்து பாடுவது மாணவரிடையே சிறந்த ஒற்றுமையை வளர்த்தது என்று டென்மார்க் நாட்டுக் கல்வி நிபுணர் கிரண்ட்விக் கூறுகின்றார். இராணுவத்திலும் சேர்ந்து பாடுவதற்கு முக்கியத்துவம் தரப்படுகின்றது. வாழ்க்கையின் நான்கு அடிப்படைத் தேவைகளில் சங்கீதமும் ஒன்று என்று ரஸ்கின் கூறியுள்ளார். மேலும் சேர்ந்து பாடுதல், செவிகளும் மனமும் ஒன்றுபட்டு இயங்குவதற்கு வாய்ப்புத் தருகின்றது. சேர்ந்து நடமாடுதலும் ஒற்றுமையை வளர்க்கும். கிராமிய நடனங்களில் பயிற்சி பெறலாம். இத்தகைய குழு நடனங்கள், தான் என்ற உணர்வை நீக்கி விடுகின்றன.

### *ஒற்றுமைக்கு பிறவழிகள் :*

ஒன்றாகச் சேர்ந்து நடந்து செல்லுதல், சேர்ந்து உண்ணுதல், போட்டியில்லாத விளையாட்டுகளைச் சேர்ந்து விளையாடுதல், ஒரு குறிப்பிட்ட பிரச்சினையைப் பற்றி அமைதியாக ஆழ்ந்து சேர்ந்து சிந்தித்தல், அகிம்சை முறையில் வெற்றி பெற்றவர்களின் வாழ்க்கை வரலாறுகளையும், பிற நீதிக் கதைகளையும் கூட்டமாக அமர்ந்து ஒருவர் கூற மற்றவர் கேட்டல் ஆகியவை ஒற்றுமைக்குப் பிற வழிகளாகும்.

## தைரியம் :

ஒற்றுமை தைரியத்தை வளர்க்கின்றது. சுயமரியாதை, அகிம்சை வீரர்களின் கதைகளைக் கேட்டல் சத்தியத்தில் பற்று, உடல், ஆடை, சுற்றுப் புறத்தில் தூய்மையாய் இருத்தல், தானே விரும்பியேற்ற எளியவாழ்க்கை, உடல் உறுதி, அகிம்சை முறையில் நம்பிக்கை இவை தைரியத்தை வளர்ப்பனவாம்.

## செயல் :

படித்த கருத்துக்களைச் சிந்தனையளவோடு நிறுத்தாமல் செயலுக்குக் கொண்டு வரவேண்டும். உடல் உழைப்பு, மிகவும் முக்கியம். சாலை போடுதல், பள்ளி, கோயில்களைப் பழுது பார்த்தல், தெருக்களில் தண்ணீர் தேங்காமல் சுத்தமாக வைத்திருத்தல் ஆகியவற்றில் ஈடுபட வேண்டும். குறிப்பாக நிர்மாணப் பணிகளில் ஈடுபடுதல் பொது மக்களின் ஆதரவைத் தேடி தருகின்றது. பொதுமக்கள் சேவை செய்ய நேரமில்லாவிட்டாலும், வீட்டிலாயினும் உடல் உழைப்புச் செய்ய வேண்டும். வீட்டைச் சுத்தமாக வைத்திருப்பதற்கும், பிறவீட்டு வேலைகட்கும் வேலைக்காரர்களை எதிர்பார்த்திருக்கக் கூடாது. உடல் உழைப்பு, தாழ்வு மனப்பான்மையை நீக்குகின்றது. இராணுவத்திலும் இதற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். மூளைக் கோளாறுகளை நீக்குவதற்கும் உடல் உழைப்பு உறுதுணை புரிகின்றது. மாண்டிசோரி கல்வி முறையிலும் குழந்தைகள் கைவேலை செய்வதை உணர்த்துகிறார்கள்.

## பிற தொண்டுகள் :

சிறைச் சாலைக்குச் சென்று கைதிகளுக்கு ஆறுதல் கூறியும் வெளியேறிய கைதிகள் வாழ்வதற்கு வசதி செய்தும் தரவேண்டும். ஏழை மக்கட்கு இயன்ற உதவி செய்ய வேண்டும். மருத்துவமனைக்குச் சென்று நோயாளிகட்கு

ஆறுதல் கூறி உதவி செய்ய வேண்டும். சிறுபான்மையோருக்கு இழைக்கப்படும் அநீதியை நீக்க முயல வேண்டும் ஒவ்வொருவரும் முதல் உதவி பயிற்சி கட்டாயமாகப் பெற்றிருக்க வேண்டும்.

### *அடிப்படையை மாற்றியமைத்தல் :*

மேஜர் ஜெனரல் மாரிஸ் போன்ற இராணுவ அதிகாரிகள் G.L. கார்வின் போன்ற வலது சாரிகள், ஜான்டியூபி போன்ற தத்துவக் கல்வி நிபுணர்கள், லெனின் போன்ற இடதுசாரிகள் ஆகிய அனைவரும் பிரச்சனையைத் தீர்ப்பதற்குப் போரே சிறந்த வழி என்று கூறியுள்ளனர். இதை மாற்றுவதற்கு அடித்தளத்தையே மாற்ற வேண்டும். முதலில் நம்மை நாம் பயிற்சியின் மூலம் மாற்றிக் கொள்ள வேண்டும். பிறகு சுற்றுப்புற மக்களிடம் அகிம்சை வழிகளை வலியுறுத்த வேண்டும்.

பின்னர் நாடு உலகம் இவற்றிற்கு அகிம்சை வழிகளை வலியுறுத்த வேண்டும். அவற்றின் வலிமையினையும் எடுத்துச் சொல்ல வேண்டும்.

### ***அகிம்சை வரட்டு பிடிவாதக் கொள்கையன்று; வெற்றி பெறுவதற்கு ஒரு வழியாகும் :***

அகிம்சை முறைகளை இடைவிடாது பயன்படுத்துவதன் மூலம் அமைக்கப் போகும் சமுதாயத்தை முழு அளவில் கற்பனை செய்ய முடியாது. காலம் செல்லச் செல்ல அகிம்சை வழியில் சில திட்டங்களை மாற்றிக் கொள்ள வேண்டியதிருக்கும். நல்ல வழிகள் எப்போதுமே நல்ல முடிவைக் கொடுக்கும். ஆனால் இலட்சியமே இல்லாதபோது எவ்வாறு திட்டமிட முடியும் என்று கேட்கலாம். அதனால் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலைக்குத் தகுந்தாற்போல் எளிதில் அடையக்

கூடிய இலட்சியங்களை ஏற்றுக்கொண்டு, அகிம்சை வழியில் அவற்றை அடையலாம். அகிம்சைத் தத்துவம் ஒரு "இசம்" அன்று. அது ஒரு வாழ்க்கை வழியாகும்.!

*முடிவுரை :*

மேற்கூறிய பயிற்சி முறைகளையெல்லாம், காந்தியடிகளால் நேரடியாகவோ மறை முகமாகவோ கூறப்பட்டவையாகும். மனிதன் ஒருவன் தான் தன்னுடைய இனத்தின் மீதே திட்டமிட்டுப் போர் நடத்துகின்றான். இதைமாற்ற முடியாது என்று கூறுவது மனிதனுக்கு அறிவு கிடையாது; தன்னடக்கம் செய்ய முடியாது; என்று கூறுவதற்கொப்பாகும். இதை நாம் நம்ப முடியாது. அறிவியலில் மனிதன் சாதித்துள்ளவை பெருவியப்பைத் தருகின்றன. பெருங் கொலை மட்டும் செய்ய முடியும். பேரளவு சத்தியாக்கிரகம் நடத்த முடியாது என்று கூறுவது மனிதனுடைய திறமையைக் குறைப்பதாகும். "நாம் நம்மை மாற்றிக் கொள்ள வேண்டும். ஆண்டவனின் மோட்ச சாம்ராஜ்யம் நம் உள்ளத்தில் தான் உள்ளது. அதை அடைய வேண்டும். இதைச் செய்தால் நம் சக்திக்கு அப்பாற் பட்டவைகளையும் சாதிக்கலாம். மேற்கூறியவை, இருளடைந்த இக்காலத்தில் உற்சாகம் அளித்து முன்னேறுவதற்கு நம்பிக்கையைத் தரும் என நம்புகிறேன்" என்று காந்தியடிகள் கூறினார்.

## காந்திய சிந்தனை தேர்வுக்குரிய நூல்கள் :

| | |
|---|---|
| சத்திய சோதனை | - மகாத்மா காந்தி |
| சர்வோதயம் | - மகாத்மா காந்தி |
| இந்திய சுயராஜ்யம் | - மகாத்மா காந்தி |
| உலக அமைதிக்கு அகிம்சை வழி | - மகாத்மா காந்தி |
| சத்தியமே கடவுள் | - மகாத்மா காந்தி |
| நிர்மாணத் திட்டம் | - மகாத்மா காந்தி |
| பதினொரு மஹா விரதங்கள் | - மகாத்மா காந்தி |
| சத்தியாக்கிரகம் | - மகாத்மா காந்தி |
| வகுப்பு ஒற்றுமை | - மகாத்மா காந்தி |
| சமூகத்தில் பெண்கள் | - மகாத்மா காந்தி |
| ஜனநாயகம் உண்மையும் போலியும் | - மகாத்மா காந்தி |
| சர்வோதயம் | - டாக்டர் மா.பா. குருசாமி |
| காந்திய சிந்தனைகள் | - டாக்டர் மா.பா. குருசாமி |
| காந்தியுகம் | - டாக்டர் மா.பா. குருசாமி |
| காந்தி வழி ஒரு அறிமுகம் | - டாக்டர் மா.பா. குருசாமி |
| காந்தியப் பொருளாதாரம் | - டாக்டர். மா.பா. குருசாமி |
| | - க.ரா. கந்தசாமி |
| அகிம்சை | - டாக்டர் அப்துல்ரசாக் |
| காந்திஜி | - டாக்டர் மா. பாதமுத்து |
| சமூகமும் கல்வியும் | - டாக்டர் மா. பாதமுத்து |
| காந்திக்கு முந்திய புரட்சிகள் | - மகிரிஷி க. அருணாசலம் |
| கோட்பாடுகளில் காந்தியம் | - டாக்டர் முத்துஇலக்குமி |
| | - டாக்டர் ஆண்டியப்பன் |
| காந்திவழி சமயம் | - தி. சேஷாத்திரி |
| உழைப்பு | - டாக்டர் ஜே.ஸி. குமரப்பா |

**கிடைக்குமிடம் :**

**காந்திய இலக்கியச் சங்கம்**

தமிழ்நாடு காந்தி நினைவு நிதி, மதுரை - 625 020.

# காந்திய சிந்தனைத் தேர்வுக்குரிய நூல்கள்

## சான்றிதழ் தேர்வு

| | | |
|---|---|---|
| சத்திய சோதனை | - | மகாத்மா காந்தி |
| காந்திஜி | - | டாக்டர். மா.பாதமுத்து |
| காந்தி யுகம் | - | டாக்டர். மா.பா.குருசாமி |
| சர்வோதயம் | - | " " |
| அஹிம்சை | - | டாக்டர். அப்துல் ரஸாக் |
| காந்திக்கு முந்திய புரட்சிகள் | - | மகரிஷி. க.அருணாசலம் |

## டிப்ளமோ தேர்வு

| | | |
|---|---|---|
| காந்தி வழிச் சமயம் | - | தி.சேஷாத்திரி |
| பதினொரு மகாவிரதங்கள் | - | மகாத்மா காந்தி |
| சத்தியமே கடவுள் (ரகுபதி ராகவ) | - | மகாத்மா காந்தி |
| பெண்களுக்கு | - | மகாத்மா காந்தி |
| உலக அமைதிக்கு அகிம்சை வழி | - | மகாத்மா காந்தி |
| வகுப்பு ஒற்றுமை | - | மகாத்மா காந்தி |
| சமூகத்தில் பெண்கள் | - | மகாத்மா காந்தி |
| நிர்மாண திட்டம் | - | மகாத்மா காந்தி |
| சர்வோதயம் | - | மகாத்மா காந்தி |
| ஜனநாயகம் உண்மையும் போலியும் | - | மகாத்மா காந்தி |
| இந்திய சுயராஜ்யம் | - | மகாத்மா காந்தி |
| காந்தி வழி வாழ்க்கை | - | டாக்டர்.ஜே.ஸி.குமரப்பா |
| உழைப்பு | - | " " |
| காந்தி வழி ஓர் அறிமுகம் | - | க.ரா.கந்தசாமி |
| கோட்பாடுகளில் காந்தியம் | - | டாக்டர்.முத்துலட்சுமி |
| | - | டாக்டர்.ஆண்டியப்பன் |
| காந்திய சிந்தனைகள் | - | டாக்டர்.மா.பா.குருசாமி |
| காந்தி வழி கல்வியும் சமூகமும் | - | டாக்டர்.மா.பாதமுத்து |

---

கிடைக்குமிடம் :-

1-65 **காந்திய இலக்கிய சங்கம்**

காந்தி மியூஸியம், மதுரை - 625 020.